உ

# சபரிகிரீசன்

விசேஷ தத்துவ அர்த்தங்களுடன் கூடிய ஐயப்பன் அவதார புராணம், சபரிமலை யாத்திரை மகாத்மியம் பஜனை நாமாவளிகள் அடங்கியது.



ஸ்ரீ தர்மசாஸ்தா புத்தக வெளியீட்டுக் குழு,
வில்லிவாக்கம், சென்னை-49.

1978] [3-00

உ

# சபரிகிரீசன்

விசேஷ தத்துவ அர்த்தங்களுடன் கூடிய ஐயப்பன் அவதார புராணம், சபரிமலை யாத்திரை மகாத்மியம் பஜனை நாமாவளிகள் அடங்கியது.



ஸ்ரீ தர்மசாஸ்தா புத்தக வெளியீட்டுக் குழு,
வில்லிவாக்கம், சென்னை-49.

1978] [3-00

வெளியீடு—1

முதற் பதிப்பு : நவம்பர், 1969
இரண்டாம் பதிப்பு : நவம்பர், 1971
மூன்றும் பதிப்பு : நவம்பர், 1974
நான்காம் பதிப்பு : நவம்பர், 1978



இதில் வெளியாகியிருக்கும் பாடல்கள், நாமாவளிகள் யாவும் பல பக்தர்கள் வாயிலாகப் பாடக்கேட்டுத் தொகுக்கப்பட்டவை. சொந்த கவன மில்லை.



ஸ்ரீ

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய வர்ய

ஸ்ரீமத் சங்கர பகவத்பாத ப்ரதிஷ்டித

ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஜகத்குரு

ஸ்ரீமத் சந்த்ர சேகரேந்த்ர ஸரஸ்வதீ

ஸ்ரீ பாதாதேசானுஸாரேண

ஸ்ரீமத் ஜயேந்த்ர ஸரஸ்வதீ

ஸ்ரீ பாதை : க்ரியதே நாராயணஸ்ம்ருதி :

ஸ்ரீ பரமேச்வரருக்கும் மகாவிஷ்ணுவுக்கும் புத்ரராக ஆவிர்பவித்து சபரிமலையில் கோயிற்கொண்டு பக்தர்களுக்கு அனுக்ரஹம் புரிந்துவரும் ஸ்ரீ ஐயப்பபெருமானின் மஹிமையை ஆஸ்திகர்கள் அறிந்து கொள்வதற்காக சென்னையைச் சேர்ந்த வில்லிவாக்கத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் தர்ம சாஸ்தா புத்தக வெளியீட்டுக் குழுவினர் முதலில் 'சபரிகிரீசன்' என்னும் நூலை வெளியிட முன்வந்திருப்பதை அறிந்து ஸந்தோஷிக்கிறோம்.

இந்நூலில் ஐயப்பன் அவதாரத்தின் தத்வம், சரணாகதியின் மேன்மை, சபரிமலை யாத்திரையின் தத்வார்த்தம், யாத்ரா மார்க்கம், புண்யஸ்தலங்களின் வர்ணனம் முதலிய அவசியமான விஷயங்கள் எளிய உருக்கமான நடையில் விளக்கப்பட்

டிருக்கின்றன. அங்கங்கு மாத்ரு, பித்ரு, குரு பக்திகளின் ப்ரபாவம், புலனடக்கத்தின் மேன்மை, காயத்ரியின் மஹிமை, நித்ய கர்மானுஷ்டானத்தின் முக்யத்வம், இவைகளும் வற்புறுத்தப்படுகின்றன. கலிகாலத்தில் பகவந்நாம ஸங்கீர்த்தனமே உத்தம ஸாதனமென்பதை வெளியிடுவதற்காக நாமாவளி தொகுப்பும் சேர்க்கப்பட்டிருக்கிறது.

பக்தர்கள் இவ்வுயர்ந்த நூலைப்படித்து ஸ்ரீ ஐயப்ப பெருமானின் பெருமையை உணர்ந்து இப்பெருமானை ஆராதித்து எல்லா மங்களங்களையும் அடைவார்களாக.

ஸ்ரீ காஞ்சிபுரம்,
ஸௌம்ய ஆச்வினசுத்த
சதுர்த்தி.

நாராயண ஸ்ம்ருதி

(True Copy)



ஸதாசிவ ஸமாரம்பாம்
சங்கராச்சார்ய மத்யமாம்
அஸ்மத் ஆச்சார்ய பர்யந்தாம்
வந்தே குரு பரம்பராம்



ச்ருதி ஸ்ம்ருதி புராணனும்
ஆலயம் கருணுலயம்
நமாமி பகவத் பாத
சங்கரம் லோக சங்கரம்

SRI JAGADGURU MAHA SAMSTHANAM,
SARADHAPEETAM,
SRINGERI-KADUR, MYSORE STATE.

PRIVATE SECRETARY
To His Holiness The Jagadguru
Mahaswamigalavaru Of Sringeri Mutt,
Sarada Peetham.
Sringeri-Kadur, Mysore State.

Camp : Sringeri.
Date ; 18-11-71

Ref. No. 538/71.

To
Secretary, Sri Dharma Sastha
Book Release Committee,
Madras-1.

தாங்கள் எழுதிய கடிதம் கிடைத்தது. மகாசந்நிதானத்தில் சபரிகிரீசன் புத்தகத்துடன் சமர்ப்பிவிக்கப்பட்டது. மகா சந்நிதானம் அந்தநூலைப் பார்வையிட்டு கலியுகத்தில் கண் கண்ட தெய்வமான ஐயப்பனை அனேகம் மக்கள் மிகவும் தூய்மையுடனும், கட்டுப்பாடுடனும் வழிபட்டு மிகவும் கடுமை யான விரதம் பூண்டு யாத்திரை செய்து வருகிறார்கள். அவர் களுக்கு ஸ்ரீ ஐயப்பன் அவதார தத்வங்களை எடுத்து விளக்கி இனி வரும் குழந்தைகளையும் அதைப் பின்பற்றி தெய்வ பக்தி ஏற்படஷ் ''சபரி கிரீசன்'' நூல் மிகவும் உதவியாக யிருக்கு மென்று அப்புத்தகம் 2வது பதிப்பு அச்சாவதிலிருந்து அதற்கு உள்ள மதிப்பும் தெளிவாகிறது. பக்தர்கள் அனைவரும் ஷ நூலை வாசித்து, ஸ்ரீ ஐயப்பன் கிருபைக்குப் பாத்திரர்களாகி சர்வாபீஷ்டத்தையும் அடைய வேண்டுமென ஆசீர்வதிக் கிறார்கள்.

இப்படிக்கு,
Sd/-Private Secretary

(True Copy)

ஸ்வாமியே சரணம் ஐயப்பா!

# முதற்பதிப்பின் முன்னுரை

கலியுக வரதன், கண்கண்ட தெய்வம் என்று பக்தர்களால் போற்றப்படும் ஸ்ரீ ஐயப்பனை துதித்து முக்தி பெற ஆண்டு தோறும் பல்லாயிரக்கணக்கான அடியார்கள் சபரிமலைக்குச் சென்று வருகிறார்கள். பெரும்பான்மையான பக்தர்கள் சபரிகிரிஸனின் அவதார மகிமை தெரியாமலும், சபரிமலை யாத்திரையின் தத்துவங்களையும் மகாத்மியத்தையும் அறியாத ஞான தாகத்துடன் இருக்கிறார்கள். ஆதலால், தாரகப் பிரம்மமாம் ஸ்ரீ பூதநாதனின் மகிமையை வெளிப்படுத்தி, ஸ்ரீ தர்மசாஸ்தாவின் மீது பக்தி மார்க்கத்தைப் பரப்பச் செய்யும் ஆவல் எங்கள் உள்ளத்தில் எழுந்தது. அதன் மூலம் மக்களிடையே வேதாந்தக் கருத்துக்களைப் புகுத்தி, ஐயப்ப சித்தாந்தம் என்று பெரியோர்களால் போற்றப்படும் வைராக்கிய சித்தாந்தத்தை மக்கள் மனதில் பதியச் செய்ய வேண்டும் என்பதே எங்களது ஆத்மார்த்தமான நோக்கமாகும்.

இதை ஐயப்ப பக்தர்களுக்கு ஒரு முன்னோடியாகவும், வழிகாட்டியாகவும் விளங்கி வரும் திருவனந்தபுரம் ப்ரம்ம ஸ்ரீ நீலகண்ட ஐயர் என்னும் பக்த தாஸரிடம் விண்ணப்பித்துக் கொண்டோம். அவர் கருணை கூர்ந்து அவ்வப்போது வெளியிட்ட கருத்துக்களையும், உபதேச மொழிகளையும், தொகுத்து இச் சிறு நூலை உருவாக்கி இருக்கிறோம். இப்புத்தகத்தில் ஸ்ரீ ஐயப்னின் அவதார புராணமும் சபரிமலை யாத்திரையின் மஹாத்மியமும் தத்துவ ரீதியில் விவரித்துக் கூறப்படுகிறது. கலியுகத்தில் நாம ஸங்கீர்த்தனமே மோக்ஷ சாதனம் என்பதை உணர்த்தும் வகையில் ஒரு நாமாவளித் தொகுப்பும் இதில் அடங்கி இருக்கிறது.

பக்தர்கள் இப்புத்தகத்தைப்படித்து பயனடைவார்களே யானால் அது ஒன்றே எங்களுக்கு மன நிறைவைக் கொடுத்து இம்மாதிரி சீரிய பணியில் மேன்மேலும் ஈடுபட ஊக்கமளிக்கும் என்பதைத் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

ஸ்ரீ தர்மசாஸ்தா புத்தக வெளியீட்டுக் குழு

# நான்காம் பதிப்பின் முன்னுரை

ஆத்திக அன்பர்கள் தொடர்ந்து நல்கி வரும் நல்லாதரவையும், ஊக்கத்தையுமே மூலதனமாகக் கொண்டு செயல்பட்டு வரும் நாங்கள் சபரிசிரீசன் நான்காவது பதிப்பை பக்தர்கள் பாத கமலங்களில் சமர்ப்பிப்பதில் பெருமிதமும் பெருமகிழ்வும் அடைகிறோம்.

சிறப்புற இந்த நான்காம் பதிப்பை வெளியிட உறுதுணையாயிருந்த அன்பர் அனைவருக்கும் எங்களது இதய பூர்வமான நன்றி.

சென்னை, ஸ்ரீதர்ம சாஸ்தா

16-11-1978. புத்தக வெளியீட்டுக்குழு.

. . . இப் புத்தகத்திற்குக் கிடைத்த
புகழ் மலர்கள் . . , .

This is about the time of the austere pilgrimage undertaken by devotees of Sri Ayyappa to Sabarimalai. The booklet "SABARIGIREESAN" issued by the Sri Dharma Sastha Book Publications Committee (Villivakkam, Madras-49) to propagate the Ayyappa Cult is, therefore, most timely. It explains in simple but good Tamil the birth of Sri Ayyappa, his exploits and the significance and sanctity of the journey to Dharma Sastha's temple. It also contains the doctrines adumbrated by Sri Nilakanta Aiyar of Trivandrum on Sastha Worship and an Ayyappa Bhajana Namavali.

— THE HINDU (14-12-1969)

ஸ்ரீ ஐயப்ப பெருமானின் அவதார புராணம், சபரி மலை யாத்திரை மகாத்மியம். பஜனை நாமாவளிகள் ஆகியவை இந்நூலில் அடங்கியுள்ளன. சிவபெரு மானுக்கும், திருமாலுக்கும் புதல்வராக ஆவிர்பவித்து சபரிமலையில் திருக்கோயில் கொண்டு பக்தர்களுக்கு அநுக்கிரகம் புரிந்து வரும் ஐயப்பப் பெருமானின் திரு அவதாரதத்துவமும், சபரிமலை யாத்திரையின் அரும் பொருளும் இந்நூலில் எளிய நடையில் விளக்கப்பட்டிருக்கின்றன.

ஸ்ரீ காஞ்சி ஆசார்ய சுவாமிகள் இந்நூலுக்கு ஆசியுரை வழங்கியிருக்கிறார்கள். ஆத்திகப் பெரு மக்கள் அனைவரும் படித்துப் பயனடையக்கூடிய நூல்.

தினமணி (4-1-1970)

இந்நூலில் ஐயப்பன் அவதாரத்தின் தத்வம். சரணாகதியின் மேன்மை, சபரிமலை யாத்திரையின் தத்வார்த்தம், யாத்ரா மார்க்கம், புண்ணிய ஸ்தலங்களின் வர்ணனம் முதலிய அவசியமான விஷயங்கள் எளிய உருக்கமான நடையில் விளக்கப்பட்டிருக்கின்றன. அங்கங்கு மாத்ரு, பித்ரு, குரு பக்திகளின் ப்ரபாவம், புலனடக்கத்தின் மேன்மை, காயத்திரியின் மஹிமை, நித்ய கர்மானுஷ்டானத்தின் முக்யத்வம், இவைகளும் வற்புறுத்தப்படுகின்றன. கலிகாலத்தில் பாகவந் நாம ஸங்கீர்த்தனமே உத்தம ஸாதன மென்பதை வெளியிடுவதற்காக நாமாவளி தொகுப்பும் சேர்க்கப்பட்டிருக்கிறது.

பக்தர்கள் இவ்வுயர்ந்த நூலைப் படித்து, ஸ்ரீ ஐயப்ப பெருமானின் பெருமையை உணர்ந்து இப்பெருமானை ஆராதித்து எல்லா மங்களங்களையும் அடைவார்களாக.

வைதிக தர்ம வர்த்தனி.

(10-1-1971)



திருவனந்தபுரம் ஸத்குருஜி ப்ரம்மஸ்ரீ
நீலகண்ட ஐயர் அவர்கள் (பக்த தாஸர்)

# முதல் பாகம்

ஸ்வாமியே ! சரணம் ஐயப்பா !

---

ஸ்வாமியே சரணம் ஐயப்பா! இதுதான் பக்தர்களது தாரக மந்திரம். சபரிமலேக்குச் செல்லுகின்ற ஒவ்வொரு பக்தனது சொல்லிலும், செயலிலும், நினைவிலும் இரண்டறக் கலந்து நிற்பது இந்தத்தாரக மந்திரம்தான். பூஜா விதிகள் அறிந்தவர்களும், அறியாதவர்களும், மந்திர தந்திரங்கள் புரிந்தவர்களும். புரியாதவர்களும், பஜனை பத்நதி தெரிந்து பகவான் மீது பாமாலே சூட்டத் தெரிந்தவர்களும் தெரியாதவர் களும், இவர்களில் எவராயிருப்பினும் சிறிது ஓயாமல் ஓதும் ஒரே தாரக மந்திரம் இதுதான்.

இந்தத் தாரக மந்திரத்தில் அப்படி என்னதான் சுவை அடங்கியிருக்கிறது? அதன் பொருள், தத்துவங்கள், உண் மைகள் என்ன? 'ஸ்வாமியே சரணம் ஐயப்பா' என்று அடிக்கடி விளிப்பதில் ஆனந்தம் காணும்படி என்ன இருக்கிறது? ''ஐயப்பா உன்னையே சரணமடைகிறேன்; உன் திருவடி மலரன்றி வேறு புகல் எனக்கு இல்லை'' என்பதுதான் இதன் பொருள்.

யாவருள்ளத்திலும் உறைபவன் கடவுள். நாம் அறியா மலும் நமது உள்ளத்தில் நிறைந்து நம்மை இயக்கி வருகின்ற வன் அவனே! அதனுல் தானே பகவானை, '‘பக்தர்களின் இதய கமல வாஸியே'' என்று அழைக்கிறோம். குணரகிதனை ஆண்டவனைச் சரணம் அடைகிறேன் என்று கூறுகிறோம். சரணம் என்ருல் என்ன?

சரணம் என்ற சொல்லுக்குப் பாதம், அடைக்கலம் என்று இரு பொருள் உண்டு. வடமொழியில் 'ஸரணம்? என்ருல் அடைக்கலம் என்றும், சரணம் என்று கூறும்போது பாதம் என்றும், அர்த்தம். 'ஸ' என்ற எழுத்துக்குச் சரியான தமிழ் எழுத்து இல்லையாதலால், இவ்விரண்டு சொற்களுமே தமிழில் சரணம் என்று குறிப்பிடப்படுகின்றன,

யாருடைய பாதுகாப்பை அண்டி அவன் பாத கமலங்களின் நிழலில் இருந்தால் பயமின்றி இருக்க முடியுமோ அவனை அடைக்கலம் புகுவதுதான் சரணுகதி அடைதல் எனப்படும்,

நமது வெளிப்பகைவர்களை அடக்க சிறந்த பலசாலிகளை அண்டலாம். ஆனால் உட்பகைவர்களையடக்க எவரை அண்டுதல் வேண்டும்? எவனை அண்டினல் உட்பகைவர்களையும் வென்று நிர்ப்பயமாய் இருக்க முடியுமோ அந்த ஆண்டவனை ஆச்ரயித்தால் இவ்வுலக மாயைகளில் சிக்காமல் நற்கதி பெற இயலும். இந்தத் தத்துவமே 'சரணுகதி' என்று பெரியோர்களால் போற்றப்படுகிறது. நமது தகுதி இன்மையையும் ஆண்டவனது பரிபூரண சக்தியையும் உணர்ந்து ஆணவம் அடங்கி எல்லாம் அவன் செயல் என்ற நிலையை உணர்ந்து நாம் நடக்கும் போதுதான் சரணுகதி பூரணத்வம் வாய்ந்ததாக ஆகிறது.

துச்சாதனன், சபை நடுவில் திரௌபதியின் சேலையைப் பற்றி இழுத்தான். அவமானத்தால் துடித்த பாஞ்சாலி தன்னிரு கரங்களாலும் சேலையை இறுகப்பற்றி நின்ருள். தனது கணவன்மார்களைத் துணைக்கு அழைத்தாள். பலன் இல்லை. அரக்கனின் கொடூர பலத்தின் முன் ஓர் அபலையின் கண்ணீர் என்ன செய்யும்? உள்ளமும் உடலும் ஒருங்கே சோர, மானம் அழியும் தருணம் கண்ணனின் நினைவு வந்தது. புதுபலம் பெற்ருள். தன்னை மறந்தாள். தன் நிலை மறந்தாள், ''கண்ணு! கார்முகில் வண்ணு! உன்னைச் சரணடைந்து விட்டேன். இனி இந்த அபலையின் மானம் உனது கையில்',

என்று அரற்றியபடி வான்நோக்கிக் கரங்களை உயர்த்தி ஆயனைச் சரணடைந்தாள். ஆச்சரியம் ! துச்சாதனன் புடவையை உருவி உருவிக் களைந்தும் முடிவுறுமல் களைத்து கீழே விழும்வரை கட்டிய கூறை குறைவின்றி நீண்டுகொண்டே வந்தது. சரணுகதியின் மகிமைக்கு இதைவிடச் சிறந்த சான்று ஏதும் வேண்டுமோ?

இத்தகைய சரணுகதியைத்தான் ஆண்டவன் எதிர்பார்க்கிருன். சரணம்! முழுமையான, ஆத்மார்த்தமான, நிபந்தனையற்ற சரணம். வெறும் வாய்ச் சொல்லோடு மட்டும் நிற்பதல்ல; வாழ்வின் இரட்டைகளான நன்மை-தீமை, வறுமை-செம்மை, உயர்வு-தாழ்வு என்ற மேடு பள்ளங்களை மாயையின் லீலை என்று உணர்ந்த பிறகு ''ஆண்டவனே! என்னிடம் எந்தத் தனி சக்தியும் இல்லை. நான் எனது சொந்த முயற்சியால் இயங்கவில்லை; இயங்கவும் முடியாது. ஒன்றுமே தெரியாத அறிவிலி நான். நல்லது எது, கெட்டது எது, தர்மம் எது, அதர்மம் எது, நிலையானது எது, நிலையற்றது எது என்று பகுத்தறியும் பாகுபாடு அறிய இயலாதவன் நான். உன் காலடியில் நான் ஒரு குழந்தை. நரன் அழுகிறேன்; பசியால் அழுகிறேனு, பிணியால் அழுகிறேனு என்பது கூடத் தெரியாமல் அழுகிறேன். என்னிடம் ஒன்றுமே இல்லை. எல்லாமே நீதான். உன் கைகளில் நான் ஒரு சிறிய கருவி; நீதான் என்னை இயக்க வேண்டும். நான் தெரிந்தும் தெரியாமலும் செய்திருக்கும் குற்றங்கள் கணக்கில் அடங்காது. அவற்றை நீ மன்னிக்காமல் வேறு யாரால் மன்னிக்க முடியும். என் தவறுகளை மன்னித்து என்னைக் கடைத்தேற்ற எனக்கு உன்னையன்றி வேறு கதியே கிடையாது'' என்று மனமுருகக் கதறி கண்களில் நீர் மல்க நிர்க்கதியாய் இருகைகளையும் மேலே உயர்த்தி, ''ஸ்வாமியே! சரணம்! உன் திருவடிகளே சரணம்!'' என்று அவனை அடைக்கலம் அடைவதல்லவா பூரண சரணுகதியின் அடையாளம்! மாடிப்படி ஏற முடியாமல் தவிக்கும் குழந்தை அழுதவுடன் தாய் வந்து அதைத் தூக்கிக்

கொண்டு படி ஏறுவது போல, நம்மால் ஒன்றும் செய்ய இயலாது என்ற உண்மையைப் பரிபூரணமாய் உணர்ந்து சரணுகதி அடைந்து அழுதால், அரற்றினுல் ஆண்டவன் கன்றின் குரலேக் கேட்ட தாய்ப்பசு போல ஓடிவந்து நம்மை அணேத்துக்கொள்ள மாட்டானு? அகங்கார மமகாரங்களே ஒழித்து 'ஆண்டவன் தான் எல்லாம்', என்ற உண்மையை உணர்விக்கச் செய்யும் வழி அல்லவா சரணம்! ''ஸ்வாமியே சரணம் ஐயப்பா'' என்ற சிறு சொற்றொடருக்குள், கடுகைத்துளேத்து ஏழு கடலேப் புகுத்தியது போல எவ்வளவு உயர்ந்த தத்துவங்களும் கோட்பாடுகளும் அடங்கி இருக்கின்றன! மோக்ஷத்தை அடைய வழி வகுக்கும் சாதனமாயிற்றே இந்தத் தாரக மந்திரம்!

## சரணுகத வத்ஸலனே! சரணம் ஐயப்பா!!

ஆண்டவனே அடைவதற்குச் சரணுகதி ஒன்றே சிறந்த மார்க்கம் என்பது யோகிகள் கண்ட சித்தாந்தம். பக்தனது தூய்மையான, நிபந்தனேயற்ற சரணுகதி மூலம் தான் ஆண்டவன் மனம் கனிந்து அருள்கிருர். 'பற்றுக பற்றற்ருன் பற்றினே' என்ற வள்ளுவர் வாக்குப்படி நாம் பற்றும் பாதங்கள் பகவானது பாதங்களேயன்றி வேறு யாருடையதாக இருக்க முடியும்?

அப்படியாளுல் சிவனேயோ, விஷ்ணுவையோ சரணம் அடையக்கூடாதா? அல்லது வேறு தெய்வங்கள் இல்லேயா? சிவனும் ஒன்றுதான். விஷ்ணுவும் ஒன்றுதான்; ஐயப்பனும் ஒன்றுதான். தெய்வம் ஒருவர் தான். அந்த நிர்க்குண பரப்பிரம்மம் பக்தர்களது நிலேக்கும் தகுதிக்கும் ஆசைகளுக்கும் ஏற்ப ரூபியாகவும், அரூபியாகவும், சகுணனுக எண்ணற்ற தெய்வ வடிவுடையவராகவும் நிர்க்குணனுகவும் காட்சி தருகிருர். பின் ஏன் ஸ்வாமியே சரணம் ஐயப்பா என்று குறிப்பிட்டுச் சொல்லுகிருேம்? பக்தர்களது குரலுக்குச் சீக்கிரமே

செவிசாய்த்து கலியுகத்தில் பிரத்யட்சமான பேசும் தெய்வமாக ஐயப்பன் விளங்கி வருவதுதான் காரணம், ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர் இயற்றிய 'ஹரிஹர புத்ரம் சாஸ்தாரம்' என்ற க்ருதி யில் 'கலியுகப் பிரத்யக்ஷம்' என்றே ஹரிஹரசுதன் மீது பாடி யிருக்கிறுர். பக்தர்களைச் சோதனை செய்ய விரும்பாத தெய்வம் அவர். யாரேனும் கஷ்டப்பட்டாலும் உடனே மனமிரங்கி விடும் குழந்தையுள்ளம் படைத்த காரணம் பற்றியே பன்னி ரண்டு வயது பாலகனுகக் காட்சி தருகிருர்.

தீராத தலைவலியால் துடிப்பவள்போல் நடித்த தாயாருக் காகப் புலிப்பால் கொண்டு வந்து கொடுத்தார் பகவான் என்ருல் உண்மையாகவே கஷ்டப்படுகிறவர்களிடம் ஏன் கருணை காட்டமாட்டார்? அன்புடன் ஒரு பிடியமுது அளித்து தன்னை மகிழ்வித்த ஒரே காரணத்தால் கம்பங்குடியார் வம்சத் துக்கே அடிமை என்று சாஸனம் எழுதிக் கொடுத்திருக்கிருரே! தினமும் அவரையே நினைந்து அவர் புகழ்பாடி மகிழ்விக்கும் பக்தர்களுடைய மன அபீஷ்டங்களைப் பூர்த்தி செய்து தர மாட் டாரா? அடியார்க்கும் அடியனுக ஊழியம் புரியத் தயங்காத வராயிற்றே! தன்னுடைய அவதார காலத்தில் தனக்குப் பல வாருகத் தீங்குகள் விளைத்துத் தன்னைக் கொன்றுவிடுவதற்காக வும் பலவாறு சூழ்ச்சிகள் செய்து அரசியின் மனத்தைக் கலைத்து துர்போதனைகள் செய்தானே ஓர் மந்திரி! அந்தப் பாவியின் மீதுகூட அவர் சினம்கொள்ள வில்லையே! ஆனுல் அனுதாபப் பட்டார். அவனது சிறுமதி கண்டு வருந்திஞர். அவனுக்குக் கர்மயோகம் உபதேசித்து அவனைத் திருத்தி நல்வழிப் படுத்திஞர்.

'இன்ஞ செய்தாரை ஒறுத்தல் அவர் நாண
நன்னயம் செய்து விடல்'

என்ற வள்ளுவர் வாக்கில் இவ்வுண்மை பரந்து கிடக்கிறது, அப்படியிருக்க அறியாமல் நாம் செய்யும் தவறுகளை மன்னித்து நம்மைக் காத்தருள்வார் என்பதில் ஐயமே இல்லை நாம் செய்கின்ற சகல குற்றங்களையும் பொறுத்துக் காத்து நம்மை ரட்சிப்பதற்குச் சபரிமலையைத் தவிர வேறு இடம் எங்கே இருக்கிறது? அங்குதானே ஐயன் சமஸ்தாபராத ரக்ஷகராய் விளங்கி வருகிறுர்? இப்படிக் கருணையங்கடலாய்ப் பரந்து நிற்கும் ஐயப்பனையே சரணுகதி அடைவதைவிட வேறு வழியும் உண்டோ?' 'அன்யதா சரணம் நாஸ்தி : த்வமேவ சரணம் மம' என்று அவரது பாதார விந்தங்களையே சரணம் அடைபவர்களுக்கு அபயப்பிரதானுக விளங்கிவரும் தாரக பிரம்மமே ஸ்ரீஐயப்பன் தான். ஆத்ம சுத்தியுடன் அவரைச் சகுணனுக பூஜித்தாலும் நிர்க்குணனுகந் தியானித்தாலும் அவரவர் எண்ணப்படி வந்து ஆட்கொள்கிறுர். அசையாத தெய்வ நம்பிக்கையும் வைராக்ய சித்தமும் உள்ளவர்கள் ஐயனுல் விரைவில் கடைத்தேற்றப் பட்டு விடுகிறுர்கள். சகுணனுக ஸ்ரீ ராமபிரானைப் பூஜித்த சபரி என்னும் பக்தைக்கு நிர்க்குணனுக ஐயப்பனை தியானித்த பிறகு தான் மோக்ஷம் கிடைத்தது. அவள் இருந்த மலைக்குச் சபரி மலை என்றே பெயர் வந்தது. இராமாயணத்தில் சபரிக்கு ஸ்தானம் உண்டு மோக்ஷம் ஐயப்பன் அவதார காலத்தில்தான் கைகூடிற்று. வைராக்ய சித்தத்தால் எளிதில் முக்திபெறலாம் என்பதற்குச் சபரி ஓர் எடுத்துக்காட்டு.

''இப்படிக் கருணைக் கடலாக விளங்கும் பகவான் அடர் வனத்தின் நடுவில், ஒருமைப்பட்ட தியானத்தில் லயித்த தவப் பிழம்பாய்க் காணப்படுகிறுர். அவரைக் காணச் செல்லுமுன் கடுமையான விரதங்கள் அனுஷ்டிக்க வேண்டியிருக்கின்றன. கல்லும் முள்ளும் நிறைந்த காட்டுப்பாதையில், வனவிலங்குகள் சஞ்சரிக்கும் பிரதேசத்தில் பல மைல் தூரம் நடக்க வேண்டியிருக்கிறது. பந்த பாசங்களை விடுத்து, சுகதுக்கங்களை விலக்கி பற்றற்ற யோகி போலக் கிளம்பி பல சோதனைகளுக்கும் ஆளாக வேண்டியிருக்கிறது'' என்று பலவிதமாக சபரிமலை

யாத்திரையைப்பற்றி அச்சத்துடன் பேசப்படுகிறது. அப்படி இருப்பினும் விரதங்களை வழுவாமல் அனுஷ்டித்து, பற்றற்ற உள்ளத்தோடு கடுமையான காட்டுப்பாதையில் நடந்து பகவானின் தரிசனத்தைக் காணவரும் பக்தர்களின் கூட்டமோ ஒவ்வொரு ஆண்டும் அதிகரித்துக் கொண்டே வருகிறது. இப்படிப் பலவாருகக் கஷ்டப்பட்டுச் செல்கின்ற யாத்திரையால் பக்தர்கள் அடையும் பலன் என்ன என்ற கேள்வி எழுகிறது. தொடர்ந்து அந்தக் கேள்விக்குரிய பதிலும் தானே கிடைக்கிறது.

'சபரிமலை யாத்திரை பொழுது போக்கிற்காகவும் கண்டு களிப்பதற்காகவும் சென்றுவரும் சுற்றுலா அல்ல. ஆண்டவனைத்தரிசித்து வரும் சாதாரண அர்த்தத்தை மட்டும் யாத்திரை எனும் பதம் குறிக்கவில்லை. ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஐக்கியம் ஆவதற்கான வழியில் ஜீவன் படிப்படியாக பரிபக்குவம் அடையும் நிலையை உணர்த்துவதே இதன் பொருளாகும். பரமாத்மாவை ஒரே சமயத்தில் யோகியாகவும் ஜோதியாகவும் தரிசித்து ஆனந்தபரவசம் அடைகிருர்கள். பரமனிடம் இரண்டறக்கலக்கிருர்கள். குற்றங்கள் களையப்பெற்று குணக் குன்றுகளாகப் புதுப் பிறவி எடுத்துவருகிருர்கள்' என்ற பதில் தான் உடனே கிடைக்கும்.

விசேஷமான சபரிமலை யாத்திரை பற்றிய விளக்கத்தையும் அதற்கு அனுகூலமாக ஐயனது அவதார மகிமையையும் அறிந்தால் நம்முன் எழும் அநேக சந்தேகங்களுக்குத்தானே விடைகிடைத்து விடும்.

பகவானின் புண்ணிய சரிதைகளைப் படிக்கும்போது ஒரு முக்கியமான விஷ்யத்தை மட்டும் பக்தர்கள் மனதில் தெளிவாக அறிந்து கொள்ள வேண்டும். ஆண்டவன் சர்வ வியாபி. காலம், இடம், பொருள், இவற்றுக்குக் கட்டுப்படாதவர். கட்டுப்படவேண்டிய அவசியம் இல்லாதவர். அவைகளையே

கட்டுப்படுத்தி தன் இச்சைப்படி மாற்றி அமைக்கும் சக்தி வாய்ந்தவர். இவற்றை மனதில் கொண்டு, பயனற்ற கேள்விகளையும் வீண்வாதங்களையும் தவிர்த்து ஆண்டவனின் அபார மகிமைகளைக் கேட்டு மகிழ்பவர்களுக்கு பகவானின் சன்னிதானம் எப்போதுமே திறந்திருககும்,

ஸ்ரீபூத நாதனே! சரணம் ஐயப்பா!!

---

பதினெண்புராணங்களில் ஒன்றாகிய பிரம்மாண்ட புராணத்தில் ஒரு பகுதியாகிய 'கேரள மஹாத்மியம், ''ஸ்ரீ பூத நாதோபாக்யானம்'' என்னும் புண்ணிய சரித்திரம் ஐயப்பனது வரலாற்றை விவரித்துக் கூறுகிறது.

மஹிஷாசுர மர்த்தனியே! சரணம் ஐயப்பா!!

தனுவின் புத்திரர்களான இரம்பன், கரம்பன் என்ற இரு அசுரர்கள் சந்தான பாக்யத்தை வேண்டி குல குருவாம் சுக்கிராச்சாரியாரின் உபதேசப்படி பஞ்சநதப் பிரதேசத்தை அடைந்து. இரம்பன் பஞ்சாக்னியின் மத்தியிலும், கரம்பன் ஜல மத்தியிலும் இருந்து ஈசனை நோக்கிக் கடுந்தவம் இயற்றினார்கள். அவர்களது தவவலிமையால் தனது பதவி போய் விடுமோ என்று அஞ்சிய இந்திரன் முதலை வடிவம் எடுத்துக் கரம்பனைக் கொன்றுவிட்டான். தம்பியின் முடிவைக் கண்டு மனம் வருந்திய இரம்பன் வாளால் தன் தலையை அரிந்து தானும் உயிர்விடத் துணிந்தான். அக்கினிதேவன் உடனே பிரத்யக்ஷமாகி அவனுக்கு வேண்டும் வரங்கள் தருவதாகக் கூறினான். இரம்பன், 'மூவுலகங்களையும் வென்று அடக்கி ஆளக் கூடியவனும், தேவராலும் அசுரராலும் மனிதராலும் கொல்ல முடியாத பலமும் சக்தியும் மிகுத்த ஒரு புத்திரனை அருளல் வேண்டும்'' என்று வேண்டினான். அக்கினிதேவனும் ''நீ

முதலில் வரிக்கும் பெண்ணால் அப்படிப்பட்ட புத்திரனைப் பெறு வாய்'' என்று அருளி மறைந்தான்,

வரம் பெற்றுத் திரும்பும் அசுரன் ஓர் பெண் எருமையைக் கண்டு மோகித்து அதனுடன் தன் இருப்பிடம் அடைந்தான். அந்த எருமையும் அவனால் கருவுற்றது. சூல் கொண்ட அவ் வெருமையை வேறொரு ஆண் எருமை கண்டு மால் கொண்டு நெருங்கவும், சினம் கொண்ட இரம்பன் அந்த எருமையை விரட்டியடிக்க முயன்றான். மதயானையையொத்த பலம் கொண்ட ஆண் எருமை இரம்பனைக் கொன்றுவிட்டுப் பெண் எருமையைத் துரத்தியது. பெண் எருமை யக்ஷர்களைச் சரண டையவும், யக்ஷகர்கள் ஆண் எருமையைக் கொன்றுவிட்டனர். கணவன் இறந்த துக்கத்தில் பெண் எருமை இரம்பனை எரித்த சிதையிலேயே பாய்ந்து உடன்கட்டை ஏறியது. அந்த சிதாக் கினியிலிருந்து தோன்றியவன் தான் எருமையின் கருவில் உதித் ததால் மஹிஷமுகமும், அசுர உடலையும் பெற்ற மஹிஷாசுரன் என்ற அரக்கன் ஆவான். இறந்து போன இரம்பன் 'இரக்த பீஜன்' என்ற அசுரனாய் மறுபிறவி எடுத்தான்.

மஹிஷாசுரன் தானும் தவமியற்றி நான்முகனிடமிருந்து புருஷஜாதியால் தனக்கு அழிவு ஏற்படக்கூடாது என்ற வரத் தைப் பெற்றான். இந்த வரத்துடன், தந்தைக்கு அக்னி தேவ னால் அளிக்கப்பட்ட வரபலமும் சேரமஹிஷாசுரன் தேவர்களை அடிமையாக்கிக் கொடுங்கோலாட்சி புரிந்து வந்தான். மஹி ஷாசுரனின் கொடுமைகளைத் தாங்கமாட்டாத தேவர்கள் மும் மூர்த்திகளைச் சரண் அடைந்தனர். அவனை வதம் செய்து உலகங்களைக் காப்பாற்றுவதற்காகவே மும்மூர்த்திகளும் தங் களது அம்சங்களை ஒன்று சேர்த்து மகாசக்தி வாய்ந்த சண்டிகா தேவியை சிருஷ்டித்தனர். தேஜோமய ரூபிணியான சண்டிகா தேவியின் மீது தேவர்கள் மலர்மாரி பொழிந்து வணங்கித்துதித் தனர். தேவர்களும், மூவர்களும் தங்களது ஆயுதங்களை அளிக்க, சண்டிகா தேவி சர்வாயுததாரியாக விளங்கினாள். அவர்களது தோத்திரப் பாடல்களால் ஆனந்த பரவசமடைந்த

சண்டிகாதேவி அண்டங்கள் அதிரும்படி இடி இடித்தாற்போல் பெருநகை புரிந்தாள்.

அந்த சப்தத்தைக் கேட்டதால் திகைப்பும் சினமும் கொண்ட மஹிஷாசுரன் அப்பேரொலியை எழுப்பியது யாரென அறியும் ஆவலுற்றான். தூதுவர்கள் மூலம். 'தேவலோகத்தில் வியப்பலங்காரமான தோற்றத்தோடு அப்போதே பிறந்த ஒரு பெண் இவ்வொலியை எழுப்பினாள்' என்று அறிந்த அசுரன் அவளை மணக்க விரும்பி தனது மந்திரியைத் தூது அனுப்பினான். வெகுண்டெழுந்த சண்டிகா தேவி அசுரனை இகழ்ந்து பேசி, மணம் பேச வந்தவனைத் துரத்தியனுப்பி விட்டாள். அவமானத்தால் பாதிக்கப்பட்ட அசுரன் ஓர் வலிய சேனையுடன் சென்று சண்டிகா தேவியுடன் யுத்தம் செய்தான்.

வெல்லற்கரிய அசுர சேனையைக் கண நேரத்தில் அழித்து விட்டுச் சண்டிகாதேவி சிம்மவாகனமீதேறி மஹிஷமுகம் கொண்ட அசுரனை எதிர்த்துப் போர்புரிந்தாள். மாயையின் வலிமையால் விதவிதமான ரூபங்கள் எடுத்து அரக்கன் மஹேஸ்வரியை எதிர்த்தான். சண்டிகா மாதா அசுரனைத் தனது சக்ராயுதத்தை ஏவி அவனது சிரத்தைத் துண்டித்து வதைத்து அழித்தாள். இவ்வாறு மஹிஷாகரன் மடிந்தவுடன் தேவர்கள் ஆனந்த மிகுதியால் தேவியைப் புகழ்ந்துபாடி மலர்மாரி பொழிந்து வணங்கி நின்றனர்.

மஹிஷாசுர மர்த்தனியான சண்டிகா பரமேஸ்வரி தேவர்களை அனுக்ரஹித்து தனது அவதார நோக்கம் பூர்த்தி அடைந்தவளாய் மும்மூர்த்திகளின் அம்சங்களில் கலத்தனள்.

---

கரம்பனின் புத்திரி கரம்பிகை தன் சகோதரன் மஹிஷா சுரனின் மறைவால் மனம் வருந்தி தேவர்களை அடக்கியாள விரும்பி குலகுரு சுக்ராச்சாரியாரிடம் உபதேசம் பெற்று அதன்படி விந்தியமலைச் சாரலில் பிரம்மனை நோக்கிப் பலகாலம் தவம் இயற்றினள். நான்முகன் பிரசன்னமாகாத தால் யாகாக்னியில் விழுந்து மடியத்தலைப்பட்டபோது, பிரம்மன் பிரசன்னமாகி வேண்டும் வரமருள்வதாகக் கூறினன். கரம்பிகை, பிரம்மனைப் பணிந்து, 'தீ, காற்று, கல், தாவரம், உலோகம் இவற்ருலும், நோயாலும் தான் மரணமடையக் கூடாதென்றும், மூவுலகளந்தவனும் முப்புரம் எரித்தவனும் சேர்ந்து அவர்களுக்கு ஓர் ஆண் குழந்தை பிறக்குமானல் அப்புதல்வன் பூமியில் ஓர் மனிதனுக்குப் பன்னீராண்டுகள் சேவகம் செய்த பிறகு அவனல் மட்டுமே தனக்கு மரணம் ஏற்படவேண்டுமென்றும், மூவுலகையும் வென்று தானே அரசாள வேண்டுமென்றும், தான் எண்ணும்போதெல்லாம் தனது ரோமக்கால்களிலிருந்து எண்ணற்ற மகிஷிகளை படைக்கவும், மீண்டும் அவர்களை மறையச் செய்யும் ஆற்றலும் வேண்டும்' என்றும் பிரார்த்தித்தாள். நான்முகன் அவள் கேட்ட வரங்களையருளி மறைந்தான்.

வரபலத்தால் ஆணவம் மிகுந்த கரம்பிகை உடனே தன் உடலிலிருந்து எண்ணற்ற மகிஷிகளைத் தோற்றுவித்து அவர்க ளோடு இந்திரலோகத்திற்குச் சென்று தேவர்களைச் சண்டைக்கு இழுக்க யுத்த முழக்கம் செய்தாள். தேவேந்திரனும் சினந்து தேவர் படையுடன் மகிஷியோடு போர் தொடுக்க ஆயத்த மானன். அதுசமயம் தேவ குருவாம் பிரகஸ்பதி தேவர்களைத் தடுத்து மகிஷமுகியின் தவபலத்தையும் வரபலத்தையும்

எடுத்துக் கூறி அவளுடைய பூர்வ சரித்திரத்தையும் விளக்கினார்.

முன்னொரு காலத்தில் மும்மூர்த்திகளின் அம்சமாக அத்திரி மகரிஷிக்கும் அனுசூயா தேவிக்கும் தத்தாத்ரேயன் புத்திரனாக அவதரித்தான். திரிசக்திகளின் அம்சமாக சாலப மாமுனிக்கு லீலாவதி என்னும் பெண் பிறந்தாள். லீலாவதிக்கும் தத்தனுக்கும் திருமணம் நடந்து தம்பதியர் இருவரும் இல்லறத்தை இனிதே அனுபவித்து வந்தனர். தனது அவதாரகாலம் முடியும் நேரம் நெருங்குவதை யுணர்ந்த தத்தன் கானகம் சென்று துறவு பூண்டு தவமியற்றித் தனது உற்பவஸ்தானங்களான மும்மூர்த்திகளிடம் கலக்க எண்ணி, தனது பத்தினியிடம் இல்லறத்திலிருந்து விலகித் துறவறம் பூண விடை கேட்டான். மாயையின் பிடியில் கட்டுண்டிருந்த லீலாவதி இல்லற இன்பங்களில் நாட்டம் கொண்டு கணவனைப் பிரிந்துவாழ மறுத்தாள், தத்தன் இறைவனடி நாடிச் செல்வது என்ற உறுதி பூண்டு லீலாவதியிடம் மிகவும் மன்றாடினன். அவளோ, ''நான் தங்களது மகிஷி. எனக்குச் சுகபோகங்களை அளிப்பது தங்கள் கடமை. தங்களைப் பிரிய என்னால் முடியாது'' என்று அடம்பிடித்தாள். சினங்கொண்ட தத்தன், 'எனது மகிஷி எனும் உறவால் எனது நல்வழியை நீ மறைத்து நிற்கிறாய். ஆகையால் நீ ஒரு மகிஷியாகவே அசுர குலத்தில் பிறப்பாயாக' என்று சபித்தான். மாயை வசப்பட்டிருப்பினும், கற்பில் சிறந்த லீலாவதி, ''தங்களது தர்ம பத்தினி என்பது உண்மையானால் நான் மகிஷியாகப் பிறக்கும்போது நீரும் ஓர் மகிஷமாகப் பிறந்து என்னுடன் கூடி வாழ்ந்து என்னை மகிழ்விப்பீராக'' என்று எதிர் சாபமிட்டாள். முக்காலமும் அறிந்த தத்தன் மனம் கலங்காமல் கானகம் சென்று தவமியற்றி தவ உற்பவஸ்தானங்களை அடைந்தான்.

ஒரு புனிதமான சரித்திரத்தைப் படிக்கும்போது அதில் பொதிந்து கிடக்கும் கருத்துக்களைப் புரிந்து கொள்ள வேண்டும்.

தத்தன், லீலாவதி சம்வாதத்தில் ஆசையும் அதன் விளைவு களும் விவரிக்கப்படுகின்றன. மூன்று தேவிகளின் அம்சமான லீலாவதி மாயை என்னும் அம்சங்கள் பொருந்தியவள். தத்தன் ஞானம்சம் நிறைந்தறன். ஞானத்தோடு மாயை பொருதும் பொழுது இறுதியில் ஞானம்தான் வெல்கிறது; மாயை கலைகிறது. கற்பில் சிறந்தவளானாலும் லீலாவதியின் சிற்றின்ப இச்சையே அவளைச் சாபத்தால் எருமை ரூபமாக்கு கிறது.

''கணவனின் சாபத்தால் லீலாவதி கரம்பனின் புத்திரி யாக மகிஷமுகி என்ற பெயருடன் பிறந்திருக்கிருள். அவள் பிரம்மனை வேண்டித் தவமிருந்து அநேக வரங்கள் பெற்று தன் வரபலத்தால் மூவுலகையும் அடக்கி ஆள வந்திருக்கிருள். அவளை அடக்க உங்களால் ஆகாது. ஆகவே மும்மூர்த்திகளைச் சரணடையுங்கள்'' என்று பிரகஸ்பதி கூறினுர். தேவர்களும் தங்களைக் காத்துக்கொள்ள மும்மூர்த்திகளை நாடிச் சென்றனர்.

மும்மூர்த்திகள் மீண்டும் தங்கள் அம்சமான தத்தாத் ரேயனை ஓர் சுந்தர மகிஷமாகப் படைத்தனர். தேவ லோகத்தில் ஆட்சி புரியும் மகிஷமுகியை மயக்கி அவளை தேவ லோகத்திலிருந்து அழைத்துக்கொண்டு பாதாளலோகம் சென்றுவிட வேண்டுமென்று தக்க சமயத்தில் தங்களுடன் தத்தன் கலந்துவிடலாம் என்றும் மும்மூர்த்திகள் கூறினர், சுந்தர மகிஷமும் அவர்களைப் பணிந்து அமராவதி நகருக்கு ஏகினுன்.

அமராவதி நகரில் மகிஷி கோலாகலமாகக் கொலு விருக்கையில் சுந்தர மகிஷத்தின் மோகாவேசமான கனைப் புச்சத்தம் கேட்டது. அழகு மிகுந்த சுந்தர மகிஷத்தின் எழில் வடிவில் மயங்கிய மகிஷி தேவலோகத்தை ஆளும்ஆசையையும் மறந்து சுந்தர மகிஷத்துடன் கூடி மகிழ்ந்தாள். சுந்தர மகிஷியுடன் சில நாட்கள் தேவலோகப் பூங்கா வனத்தில் மகிழ்ந்து திரிந்தபின்னர், தேவ கட்டளை நினைவுக்கு வர,

மகிஷியை அழைத்துக் கொண்டு பூவுலகம் சென்றது. இந்தச் சந்தர்ப்பத்திற்காகவே காத்திருந்த தேவர்கள் அசுரர்களை வென்று இழந்த பதவிகளை மீட்டுக்கொண்டனர்.

இங்கும் ஆசை அழைத்துச் செல்லும் அழிவுப்பாதைதான் புலனாகிறது. கடுந்தவமியற்றி கிடைத்தற்கரிய வர பலங்களுடன் கூடிய மகிஷி கேவலம் உடலாசையால் உந்தப் பெற்று தேவலோகத்திலிருந்து பூவுலகிற்கு வந்துவிட்டாள். ஆசையும் காமமும் அவளை மேல் மட்டத்திலிருந்து கீழ் மட்டத்திற்கு இறக்கிவிட்டன என்பதை அறியவேண்டும்.

இது இப்படி இருக்க, பறக்கும் பர்வதங்களின் இறக்கைகளைச் சேதித்து ''பர்வதாராதி'' என்று புகழ் பெற்ற தேவேந்திரன் ஐராவதத்தின் மீது பவனி வருகையில், துர்வாச மாமுனி அளித்த மேன்மையான மலர் மாலையை யானைமேல் இட, ஐராவதம் அதைத் தன் துதிக்கையால் கீழேபோட்டுக் காலால் மிதித்து நசுக்கி விட்டது. அது கண்டு கோபமடைந்த முனிவர், மமதை கொண்ட தேவர்களுக்கும் மனிதர்களைப் போலவே மூப்பு நரைகள் ஏற்படட்டும் என்று சபித்துவிட்டார். இந்திரன் கர்வ பங்கமடைந்து முனிவரைப் பணிந்து சாப விமோசனம் வேண்டினன். பாற்கடலைக் கடைந்தால் கிடைக்கும் அமிர்தத்தை தேவர்கள் அருந்தினல் சாப விமோசனம் ஏற்படும் என்று முனிவர் அருளினர்.

தேவர்கள் அமிர்தம் பெற அசுரர்களின் உதவியைக் கோரினர். அவர்களும் மரணத்தை வெல்லும் அமிர்தத்தை வஞ்சனையால் கவர்ந்து விடலாம் என்ற ஆசையால் அதற்கு இணங்கினர். மந்தர மலையை மத்தாகவும், வாசுகியைக் கயிருகவும் உபயோகப்படுத்தி தேவர்களும் அசுரர்களும் இரு புறங்களிலும் நின்று பாற்கடலைக் கடைந்தனர். பல அற்புதப் பொருள்கள் தோன்றின. இறுதியில் அமிர்த கலசம் தோன்றவும் அசுரர்கள் அதைப் பறித்துக் கொண்டு ஓடினர்கள். தேவர் துயர் தீர்க்க மாயாவதாரியான திருமால் அழகு நிறைந்த மோகினியாக ரூபமெடுத்தார். எல்லோருக்கும் அமிர்தத்தைப் பங்கிட்டு வழங்குவதாய் அசுரர்களுக்கு ஆசை காட்டி அமிர்த கலசத்தை மோகினியான திருமால் வாங்கிக் கொண்டார். மோகினியின் பேரெழிலில் அசுரர்கள் மயங்கி இருக்கும் சமயம் திருமால் அமிர்தத்தை தேவர்களுக்கே பங்கிட்டுக் கொடுத்துவிட்டார். தேவர்களும் ஜரா நரை நீங்கப் பெற்றவர்களாக அமராவதி திரும்பினர். அசுரர்கள் ஏமாற்றத்துடன் தங்கள் இருப்பிடம் சென்றனர்.

திருமாலின் மோகினி அவதாரத்தைப்பற்றிக் கேள்விப் பட்ட சர்வேசன் மீண்டும் மாதவனே மோகினியாய்த் தானும் கண்டு மகிழ எண்ணினன். அதற்கும் ஒரு சந்தர்ப்பம் வந்தது.

சூர்ப்பகாசுரன் என்ற அரக்கன் ஈசனே நோக்கிக் கொடிய தவமியற்றினன். தவத்தால் மகிழ்ந்த ஈசனும், அசுரன் வேண்டியபடி, யார் தலையில் அவன் கை வைத்தாலும் அவர்கள் உடனே சாம்பலாகிப்போக வேண்டும் என்ற வரத்தை அளித்தார். வரமருளிய சிவபெருமானின் தலையிலேயே கை வைத்து வரத்தைப் பரீட்சிக்க அசுரன் எண்ணிச் சிவனைத் துரத்தவும் சிவனும் ஓடிமறைந்து ஐவரளிக் காயினுள் ஒளிந்து கொண்டார். இது விவரம் அறிந்த தரணீதரனுகிய திருமால் மீண்டும் மாயமோகினியாக உருவமெடுத்து அதிரூபலாவண்ய தேவதைபோல் அசுரன் முன்போய் நின்ருர். மோகினியின் அழகில் மனதைப் பறிகொடுத்து நின்றபோது, மோகினி அசுரனை மயக்கி அவனது கையினலேயே அவன் தலைமேல் வைத்துக் கொள்ளும்படி செய்யவே, சூர்ப்பகாசுரன் எரிந்து பஸ்பமானன். 'தன் வினை தன்னைச் சுடும்' என்ற பழமொழி இது பற்றியே எழுந்ததுபோலும்! அரக்கன் இறந்ததும் பரமசிவன் வெளியே வத்தார். திருமாலை மோகினி ரூபத்தில் கண்டு மனமகிந்து அவரை அணைக்கவும், இருமூர்த்திகளின் அம்சங்களும் ஒன்ருக இணைய தாரகப்பிரம்மமாய், சச்சிதானந்த குருவாய், தர்மஸ்வரூபியாய், ஸ்ரீ பூதநாதன், தர்மசாஸ்தா என்ற பல பெயர் பெற்ற சைதன்ய மூர்த்தி திரு அவ்தாரம் செய்தருளினர்.

ஹரிஹர சுதனே ! சரணம் ஐயப்பா !

இந்த இடத்தில் பக்தர்களது சிந்தனைக்குப் பல அரிய விஷயங்களைக் கூற வேண்டியிருக்கிறது. கருத்தைத் தன்னுள் அடக்கிக்கொண்டிருப்பதுதான் கதையாகும். கதையில் உள்ள கருத்தைப் புரிந்து கொண்டால்தான் கதையைப் படித்ததன்

பலன் கிட்டும். அந்தக்கருத்தைச் சாதாரண மனிதனின் அறிவுக்கும் எட்டும் வகையில் சூழ்நிலையை உருவாக்கிக் கருத்தை விளக்குவதே புராணங்களின் புனிதமான நோக்க மாகும். கதையம்சத்தை மட்டுமேகூறி, உலக வழக்கிற்கு ஒவ்வாத விஷயங்கள் இருக்கின்றன என்று சாதாரண மனித னுடைய அறிவைக் குழப்புவது மனித இனத்துக்கே செய்யும் துரோகமாகும்.

''தனக்குத் தேவியான பார்வதியிடம் மோகம் ஏற்பட வேண்டும் என்ற நோக்கத்துடன் மன்மதன் மலர்க்கணைகளைத் தன்மேல் தொடுத்ததையறிந்து சினந்து தனது நெற்றிக் கண்ணால் அவனை எரித்த சிவபெருமானா, மோஹினி அவரதாரத்தில் வந்த விஷ்ணுவிடம் மனம் மயங்கித்தன்னை மறந்து அவரைக்கூடிப் புணர்ந்தார்? ஞான வைராக்கியத்தின் உருவமான சிவனும், காக்கும் கடவுளான திருமாலுமா கேவலம் பாலுணர்ச்சிக்கு அடிமைப்பட்டனர்? ''ஐயப்பன் அயோநிஜன்'' என்று கூறுகிறார்களே? இது எப்படி உண்மை யாகும்?'' இவ்வாறான கேள்விகள் எழும்ப இடமிருக்கின்றன. இந்த சந்தர்ப்பத்தில் சரித்திரத்தின் உட்கருத்தை ஆராய வேண்டி இருக்கிறது.

பிரம்மன் இறவா வரத்தைத் தவிர வேறெதுவும் தருவ தாக வாக்களித்தபோது, ஹரி-ஹரன் இவர்களது சேர்க்கை யால் ஓர் புத்திரன் உண்டானால் அவன் மூலமே தனக்கு முடிவு ஏற்பட வேண்டுமென்று மகிஷி வரம்பெற்றாள். மனிதர்களின் கற்பனைக்கும் எட்டாத வகையில் இரண்டு புருஷர்களின் சேர்க்கையில் ஓர் மகவு பிறக்கும் என்பது எப்படிச் சாத்திய மாகும்? பிறந்தவர்கள் இறப்பது உறுதி. தீயவர்கள் அழிய வேண்டும் என்பதும் இயற்கையின் நியதி. மகிஷி அதற்கு விதிவிலக்கல்ல. அவளுக்கும் ஒரு நாள் அழிவு நிச்சயம். அதற்கு ஹரி ஹர சுதன் அவதரிக்க வழி இருந்தேயாக

வேண்டும் என்று முக்காலமும் உணர்ந்த பிரம்மன் வரம் கொடுக்கும் போதே அறிந்திருக்க வேண்டும். அதற்குப் புராணங்களில் வழி செய்து வைக்கப்பட்டன.

பாற்கடலில் திருமால் மோகினி அவதாரம் எடுத்தபோதே ஹரி-ஹர சேர்க்கைக்கு, அதாவது இரு மூர்த்திகளின் அம்சங்கள் ஒன்று சேர்ந்து பிறிதொரு மூர்த்தியாக அவதரிப் பதற்கான சாத்தியக் கூறுகள் தோன்றிவிட்டன. மறுமுறை திருமால் மோகினி ரூபமெடுத்தபோது திருமாலும், சங்கரனும் இணைந்து (அவர்களது அம்சங்கள் இரண்டறக் கலந்து) ஹரிஹரசுதன் அவதரிக்க வழி பிறந்து விட்டது. கதையில் மட்டும் நாட்டமுள்ளவர்களைத் திருப்திப்படுத்தும் வகையில் விஷ்ணுவை மோகினியாக்கி இரண்டு பரம புருஷர்களுக்கும் புத்திர லாபம் உண்டாயிற்று என்று கூறப்படுகிறது. இதனால் இயற்கையின் தன்மையிலும் மாறுதல் ஏற்படவில்லை, கதையின் தொடர்ச்சியும் அறுபடவில்லை.

தீயசக்திகளை அழிக்கும் பொருட்டு ஒரு அவதாரம் ஏற்பட வேண்டும் என்ற நியதியில் தான் இருமூர்த்திகளும் செயல் பட்டார்களே யன்றி வேறு நோக்கங்களுடன் அல்ல. உண்மையில் உற்பவித்தது ஹரிஹர அம்சங்களின் சமஷ்டி ரூபமேயன்றி வேறல்ல. எனவே ஐயப்பனை ''அயோநிஜன்'' என்று அழைப்பது முற்றிலும் பொருத்தமே.

உலகத்தை ரக்ஷித்துக் காப்பாற்றும் பொறுப்பு ஹரியி னுடையது. ஆகையால் அவர் ஜகன்னாதராகக் காட்சி தருகிறார். கருணையே உருவாக, யாவரையும் தன்பால் ஈர்க்கும் அழகோடு காட்சி தருகிறார் மஹாவிஷ்ணு.

''போகே பவான் புருஷேஷு விஷ்ணு
க்ரோதேச காளி சமரேஷு துர்கா''

எனும் வாக்குக்கேற்ப மாலும் சிவபெருமானின் சக்தியின் ஒரு அம்சம் என்பதும் இங்கு குறிப்பிடத்தக்கது.

பரமசிவனே மயானத்தில் ஊர்த்வ தாண்டவமாடியபடி உலக அநித்தியத்தை உணர்த்துகிறார். புலித்தோல் போர்த்திக் கரித்தோலுடுத்தி எவராலும் கலைக்கப்பட முடியாத ஒரு நிலைப்பட்ட தியானமும் மௌனமும் சேர்ந்த தவயோக நிலையில் 'என்னை அறிய என்னை நினை' என்று கூறுகிறார். சுற்றுப் புறங்களாலோ விஷயாதி வாசனைகளாலோ மாறுபாடு ஏதும் அடையாதவர். மனமும் வாக்கும் கடந்த ஞான வைராக்ய அம்சமாய்க் காட்சி தருகிறார் சிவபெருமான்.

ஹரியின் அம்சங்களான கருணையும், சாந்தப் பொலிவும், ஹரனின் அம்சங்களான தியானமும் ஞான வைராக்ய தவயோகமும் ஒன்று சேரும்போது கருணையின் ஒளியும் வைராக்கியத்தின் சுடரும் இணைந்து ஓர் தனிப் பெரும் ஜோதி உண்டாகிறது. அதுவே காந்தமலையில் ஜோதி ரூபமாய் விளங்கும் ஹரிஹர புத்திரன் ஆகும்.

பக்தர்களின் மனத்தில் பதிய வேண்டிய கருத்து இது வன்றி வேருக இருத்தல் புனிதத்தன்மைக்கு மாசு கற்பிக்கும் தோஷமாகும். இதற்கு மாறுபட்ட கருத்துக்களை மனதால் நினைத்தலும் புனிதத் தன்மையை நம்மிடமிருந்து பறிக்கும் பாபச் செயலாகும். கூறியது கூறல் என்ற குற்றத்திற்கு ஆளாகி மீண்டும் ஒரே விஷயத்தைப் பன்முறை விளக்குவது நமது கருத்தைச் சுத்தப்படுத்துவதற்கே.

தர்மஸ்வரூபியே ! சரணம் ஐயப்பா !!

இவ்வளவு சர்ச்சைகளுக்கும் இடமளிக்கும் வண்ணம் பகவான் திரு அவதாரம் எடுக்கவேண்டிய அவசியமென்ன? பகவான் கொடுத்த வாக்கை நிறைவேற்றுவதற்காக பகவானே மனம் உவந்து செய்யும் லீலைகள்தான் இவை. பக்தர்கள்பால் கொண்ட கருணையால் அவர்களது துயர் தீர்க்க பல்வேறு அவதாரங்கள் எடுப்பார். பன்றி உருவெடுத்தார்; மீன் வேடம் தாங்கினுர்; நரசிம்மமாய்த் தூணிலிருந்து வெளிப்பட்டார். உருவத்தையும் செயலையும் ஒப்பு நோக்காமல் செயலையே பெரிதாக நினைக்க வேண்டும் என்று வலியுறுத்தும் வண்ணம் ஐந்தறிவு படைத்த மிருகங்களின் உருவில் கூட அவர் அவதாரம் எடுத்தது நீதியை நிலைநாட்டி தர்மத்தைக் காப்பதற்கே.

'பரித்ராணுய ஸாதூனும் விஞசாயச துஷ்க்ருதாம்
தர்மஸம்ஸ்தாபஞர்த்தாய சம்பவாமி யுகே யுகே

—*கீதை.*

'தீயவர்களை நாசம் செய்து நல்லவர்களைக் காப்பாற்றி தர்மத்தை நிலைநிறுத்துவதற்காகத்தான் நான் அவ்வப்போது தோற்றம் எடுக்கிறேன்,' என்று கீதையில் பகவான் திருவாய் மலர்ந்தருளியிருக்கிருர். கொடுத்த வாக்கை நிறைவேற்றுவதைப் தனது கடமையாகக் கொண்டு செயல்படுகிருர். பகவத் கீதையில் அர்ஜுனனிடம், ''எந்த கடமையையும் செய்ய வேண்டிய அவசியம் இல்லாதவன் நான்; இருந்தும் என் கடமைகளை லோக க்ஷேமத்திற்காக நான் விடாமல் செய்து வருகிறேன். பரப்பிரம்மமான நானே என் கடமைகளை வழுவாது செய்து வரும்போது, மனித ஜாதியில் பிறந்தவர்களான நீங்கள் உங்கள் கடமைகளை மறக்கலாமா? மறுத்து ஒதுக்கலாமா?'' என்று கேட்கிருர். கடமையைச் சரிவர செய்யாதவனுக்கு மோட்ச சாம்ராஜ்ய வழி அடைத்திருக்கும் என்றும்

சுட்டிக் காட்டுகிறார். கடமையை மறந்து வாழ நினைக்கும் கீழ்த்தர மனிதர்களுக்கு அவர்களது கடமையை ஞாபகப்படுத்துவதற்குத்தான் பகவான் பல கஷ்டங்களுக்கும் ஆளாகிப் பல்வேறு அவதாரங்கள் எடுத்து வருகிறார்.

ஹரிஹர புத்திரனின் தெய்வ அவதாரத்தைக் கண்டு மகிழ்ந்து கலைமகளும் அலைமகளும் மலைமகளும் அன்புடன் ஆசி கூற, நான்முகன் நாமகரணம் செய்து வைத்தான். தன்னுள் பரதத்துவங்களை அடக்கிக் கொண்டு இருப்பதால் 'பராயகுப்தன்' எனவும், பூதகணங்களின் தலைவனாகவும், பஞ்ச பூதங்களுக்கு ஆதியாகவும் விளங்குவதால் 'பூதநாதன்' எனவும், அதர்மத்தை வதைத்து ஸ்வதர்மத்தைப் பரிபாலிப்பதால் 'ஸ்ரீ தர்மசாஸ்தா' எனவும், நமது அன்பிற்கும் மதிப்பிற்கும் உரியவர் என்பதைக் குறிக்க 'ஆரியதாதா' எனவும் பற்பல நாமங்கள் சூட்டப்பட்டன. சாஸ்தா என்றால் ஸ்ருதி, ஸ்ம்ருதி இவைகளால் நீதியைப் போதிப்பவர் என்று பொருள். தர்ம சாஸ்தா என்றால் மேற்படி ஸ்ருதி, ஸ்ம்ருதி இவற்றால் ஏக தர்மத்தை போதிப்பவர் என்று பொருள், அதாவது--

ஸர்வ தர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ
அஹம் த்வம் ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி
மாஸுச

என்றபடி தர்மத்தைப் பூரணமாகச் செய்து, அதனால் அடையும் ஞான வைராக்கியத்தில் ஸ்வதர்மங்களைச் செய்வதையும் விடுத்து, 'என்னை அடைய வேண்டுமானால் என்னைச் சரணாகதி அடைவதையே ஒரே தர்மமாகக் கொள்; நான் உன்னை சகல கர்ம பந்தங்களிலிருந்தும் விடுவிக்கிறேன்; வருந்தல் வேண்டாம்'' என்று கூறி ஒரே தர்மமாகிய சரணாகதியை போதிப்பதால் தர்மசாஸ்தா என்ற பெயர் பெற்றார்.

ஆரியன் என்றால் மதிப்பிற்குரியவர். தாதா என்றால் அன்புக்குரிய தந்தை—அப்பா. ஆரிய அப்பா—நமது

மதிப்பிற்கும் அன்பிற்கும் உரியவர் தந்தை என்று பொருள். இந்தச் சொல்லே நாளடைவில் ''ஐயப்பா'' என்று மருவியது எனலாம்.

புருஷோத்தமனுன திருமால் அணைந்துமகிழ, தந்தையாம் சிவபெருமான் மைந்தனையழைத்துக்கொண்டு கைலையங்கிரியை அடைந்தார். ஐயன் சகல கலைகளையும் கற்றுணர்ந்தார்.

**வில்லாளி வீரனே! வீரமணிகண்டனே ! !**

**சரணம் ஐயப்பா !**

மகிஷி சம்ஹார காலம் சமீபிக்கவே, கைலையில் மகா தேவன் தன் மைந்தனையழைத்து, மகிஷியின் பூர்வோத்தி ரங்களையும், வரபலங்களையும் எடுத்துரைத்து ஐயனின் அவதார நோக்கத்தை உணர்த்தினுர். சாஸ்தா பூமியில் பிறந்து பன்னிரண்டுகள் ஒரு மனிதனுக்குச் சேவை செய்த பிறகுதான் மகிஷியை சம்ஹாரம் செய்ய முடியும் என்பதையும் விளக்கினுர். 'கேரள நாட்டில் பம்பா நதி தீரத்தில் ஐயன் ஒரு குழந்தை உருக்கொண்டு கிடந்தால் பந்தள பூபதியான இராஜ சேகர பாண்டியன் கண்டு எடுத்து வளர்த்து வருவான். பன்னிராண்டுகள் அவனிடம் சேவகம் செய்துவரும் நாளில் கானகம் செல்லும் சூழ்நிலை நேரும். அப்போது மகிஷியை வதம் செய்து அவளுக்குப் சாப விமோசனம் கொடுக்கலாம்' என்று கூறி ஒரு இரத்தின மணிமாலையை பகவான் கழுத்தில் அணி வித்து மணிகண்டன் எண்று நாமகரணம் செய்தருளினுர். அவதார நிமித்தத்தை உணர்ந்து கொண்ட பகவான் குழந்தை உருவெடுத்து, இராஜசேகர பாண்டியனின் வரவை எதிர் நோக்கியிருந்தனன்!

## பம்பையில் அவதரித்த பாலனே! சரணம் ஐயப்பா !

அஹிம்ஸை, ஈச்வர பக்தி, இராஜ நீதி இவைகள் வழுவாமல் செங்கோல் ஓச்சி வந்தான் பாண்டிய வம்ச ஜாதனை பந்தளத்து அரசன் இராஜசேகர பாண்டியன். அரச தம்பதியர்க்கு எல்லாச் செல்வங்கள் நிறைந்திருந்தும் மக்கட் செல்வம் இல்லாத குறையோடு வாழ்ந்து வந்தனர்.

ஒருநாள், வனவிலங்குகளின் தொல்லே பொறுக்காமல் முறையிட்ட ஜனங்களைப் பரிபாலிக்க மன்னவன் கானகம் சென்று துஷ்டமிருகங்களை வேட்டையாடினன். களைப்புற்ற அரசன் சற்றே இளைப்பாறி ஓர் மரத்தடியில் ஈஸ்வர தியானத்தில் ஈடுபட்டிருக்கும்போது அடர்ந்த வனப்பிர தேசத்தின் ஊடே ஒரு சிசுவின் இனிய அழுகுரல் ஒலித்தது கேட்டான். ஆச்சரியமும் திகைப்பும் கொண்டவனாய் மந்திரி யுடன் அழுகையொலி வந்த திக்கை நோக்கிச்சென்ற மன்னன், தேஜோ மயமாக அழகுக்கே அழகூட்டும் சுந்தரவடிவுடன் பச்சிளம் குழந்தையொன்று கைகால்களை உதைத்துக் கொண்டு அழுவதைச் கண்ணுற்ருன். மகப்பேறில்லா மன்னன் மிகுந்த ஆச்சரியத்துடன் இது என்ன மாயையோ என்ற அச்சத்தையும் மீறிய புத்திர பாசம் கொண்டான். கனிவுடன் இமை கொட்டாமல் குழந்தையை மன்னன் பார்த்துக்கொண்டே இருந்தபோது ஆல காலமுண்டோன் ஓர் அந்தணப் பெரியவர் வடிவில் வந்து மன்னவனை நோக்கி, ''மன்னர் மன்ன! புத்திர சோகத்தால் வாடும் உன் வாழ்வை மலர வைக்கவே வந்திருக் கிறது இந்தக் குழந்தை. இந்தச் சிசுவை எடுத்துக் கொண்டு போய் பாலூட்டி, சீராட்டி வளர்த்துவா. இது சாதாரணக் குழந்தையல்ல. தெய்வாம்சம் பொருந்திய குழந்தையாகும். இக்குழந்தையின் மகிமையைப் பன்னிரண்டாண்டுகள் கழித்த வுடன் நீயே தெரிந்து கொள்வாய். கழுத்தில் மணிமாலேயுடன்

பிறந்ததால் இந்தக் குழந்தையை ''மணிகண்டன்'' என்று அழைத்து வளர்த்து வருவாயாக'' என்று அருளி மறைந்தான். அரசனும் மட்டற்ற மகிழ்ச்சியுடன் குழந்தையை வாரி அணைத்துக்கொண்டு, அரண்மனையை அடைந்து அரசியிடம் தான் அடைந்த மகவைக் கொடுத்தான். புத்திர வாஞ்சை நிரம்ப ஆனந்த பரவசத்துடன் அரசி குழந்தையை எடுத்துக் கண்ணின் மணிபோல பேணிக் காத்து வரலானாள்.

முன்னைத் தவப்பயனாகத் தங்களுக்குக் கிடைத்த ஓர் வரப்பிரசாதமாகவே கருதி இராஜ தம்பதியர் மனமகிழ்ந்தனர். அவர்களுக்கு மட்டுமா? இந்த உலகுக்கேயன்றோ ஒரு வரப் பிரசாதியாக பகவான் அவதரித்திருக்கிறார்! அப்போது பகவானின் அவதார விஷயமோ, அவதார நோக்கமோ அவனன்றி யாருக்குத் தெரியும்? அவனது சித்தத்தை அவனன்றி யாரே அறிவர்?

## குருவின் குறை தீர்த்தவனே! சரணம் ஐயப்பா!!

நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக மணி கண்டன் அரண்மனையில் வளர்ந்து வந்தான். பால்யப் பருவத்தில் தக்க குருவையணுகி சகல கலைகளையும் கற்றுத் தேர்ந்தான். குரு தம்பதியர் இருவரும் மணிகண்டனின் அருமை பெருமைகளைப் பூர்வ புண்ணிய வசத்தால் அறிந் தவர்களாக இருந்தனர். வித்தியாப்பியாசம் முடிந்து குரு தட்சணையாக வேண்டுவது என்ன என்று மணிகண்டன் கேட்டனன். குருநாதர் மனம் நெகிழ்ந்து, ''அப்பா! நீ எனக்கு சீடன் என்று சொல்லிக் கொள்கிறாய். என்னை உனது குருநாதன் என்று அழைக்கிறாய். இவ்வாறு கூறியதைவிட வேறு குருதட்சணை எதுவும் எனக்கு வேண்டுமோ?'' என்றார்.

அருகிலிருந்த குருபத்தினி, மணிகண்டனை நோக்கி, ''நீ சாதாரணமான மானிடக் குழந்தையல்ல. தெய்வீகம் பொருந்திய பாலகன் என்றுதான் நாங்கள் நினைக்கிறோம். பரமகுருவான உனக்கு இவர் குருநாதராக அமைந்ததே எங்கள் பல ஜன்ம பாக்யமாகும். நீ எங்களுக்கு குருதட்சணை யாக வேறு எதுவும் கொடுக்க வேண்டாம். ஆனால் நீ எங்களுக்கு ஓர் வரம் தந்து உதவ வேண்டும். கண்பார்வை இல்லாத பிறவிக் குருடனாகவும் பேச நாவில்லாத ஊமை யாகவும் ஓர் மகன் எங்களுக்கு இருப்பது உனக்குத் தெரியும். அவனது ஊனத்தைக் கருணையோடு அகற்றி இதர குழந்தை களைப்போல் என் மகனும் பேசி ஓடி ஆடி எங்களை மகிழ்விக்கச் செய்யவேண்டும்'' என்று இறைஞ்சினாள். பெற்றமனம் அல்லவா? ஊனமான குழந்தையின் தாபத்தால் தவிக்கும் தாயுள்ளத்தை பகவான் அறியாதவரா என்ன? உள்ளத்தின் ஊனத்தையும் முன்னை ஊழ்வினைப் பயனையும் ஒருங்கே போக்க வல்லவனுக்கு உடல் ஊனத்தைப் போக்குவது ஒரு சிரமமான காரியமா? உத்தமதயாளன் தனது பிஞ்சுக்கரங்களால் குருவின் மைந்தனைத் தடவிக் கொடுத்த மாத்திரத்தில், குருவின் மகன் ஊனங்கள் நீங்கப்பெற்று எழுந்து பெற்றோரையும் மணி கண்டனையும் வணங்கி நின்றான். மட்டற்ற மகிழ்ச்சி கொண்ட குருநாதர், மணிகண்டனை நோக்கி, ''எங்களது மனங்களைக் குளிர வைத்து எங்கள் நெஞ்சில் நிறைந்து ஆட்சி செலுத்தும் நீ, அகில புவனங்களுக்கும் சக்கரவர்த்தியாகி, தங்கமயமான உத்தம விமானத்தில் இரத்ன கசிதமான சிம்மாசனத்தில் கொலுவிருந்து லோக பரிபாலனம் செய்யவேண்டும்'' என்று ஆசீர்வதித்தார். பூவுலகில் தன் அவதார நோக்கம் பூர்த்தி யான பிறகு குருநாதரின் வாக்கு பொய்க்காமல் இருக்க வேண்டும் என்பதற்காகவே, குருவின் ஆசியையும் கட்டளை யாகவே கொண்டு, பொன்னம்பலத்தில் ஸ்வர்ணமயமான விமானத்தில் நவரத்ன சிம்மாசனத்தில் பகவான் அகில லோக சக்கரவர்த்தியாகக் காட்சி தருகிறார், இது பின்னால் விரிவாகக் கூறப்படுகிறது.

பித்ருவாக்ய பரிபாலனே! சரணம் ஐயப்பா !!

குருநாதரின் ஆசிகளைப் பெற்றுக்கொண்டு தனது தெய்வத் தன்மையை வெளியில் யாருக்கும் வெளிப்படுத்த வேண்டாம் என்று பகவான் குருநாதரைக் கேட்டுக்கொண்டு அரண்மனை வந்தடைந்தார். பகவானின் லீலைகளையும் மாயைகளையும் யாரால் அறிய முடியும்? புத்திர சோகத்தில் வாடிய அரச தம்பதியருக்கு மணிகண்டன் வருகையால் அக்குறை நீங்கிய தோடல்லாமல், ராணியின் மலட்டுப் பட்டத்தையும் அகற்ற விரும்பிய பகவான் திருவருளால், ராணி ஓர் ஆண் மகவை ஈன்றெடுத்தாள். அந்தக் குழந்தைக்கு இராஜராஜன் என்று நாமம் சூட்டினர். இதன் பிறகும் மணிகண்டன் மீது அவர்களுக்கு இருந்த பாசமும் வாத்ஸல்யமும் சிறிதளவும் குறையாமல் தங்களது மூத்த பிள்ளையாகவே பாவித்து அன்பைப் பொழிந்தனர்.

பித்ரு வாக்கிய பரிபாலனம் இராமாவதாரத்தின் தனிச் சிறப்பு ஆகும். ஸ்ரீ ஐயப்பன் அவதாரத்திலும் அது விசேஷச் சிறப்புடன் விளங்குகிறது. தந்தையாம் சிவனார் ஆக்ஞைப்படி மகிஷிமர்த்தனத்திற்காக பூவுலகில் பிறந்து பன்னிரண்டு ஆண்டுகள் ஓர் நாளுக்குச் சேவை செய்து வரவேண்டும் என்ற மகிஷியின் வரத்திற்கேற்ப மணிகண்டன் மன்னனுக்கு மெய்க் காப்பாளனாய், அந்தரங்க ஊழியனாய் அரச சேவகம் செய்து வந்தான். 'இவன் தந்தை என்னோற்றான் கொல்' என்று மக்கள் அதிசயிக்கும்படி தந்தை மகிழும் தனயனாய் பன்னிரண்டாண்டுகள் அரச கட்டளை ஏற்று செயல்பட்டு வந்தனன்.

மன்னன் முதுமை அடைந்துவிடவே அரசபதவியினின்று விலகி வானப்பிரஸ்தம் செல்ல விரும்பினான். ஆகவே அரசுப் பொறுப்பை மணிகண்டனிடம் ஒப்புவிக்கத் தீர்மானித்து,

தனது அவையைக் கூட்டி மணிகண்டனின் முடிசூட்டு விழா வுக்கு வேண்டிய ஏற்பாடுகளை விரைவில் செய்யுமாறு பணித் தான். ஆனால் மந்திரியோ, ''அனாதையாய்க் காட்டில் கண்டெடுத்த குலப் பிறப்பு கூடத் தெரியாதவனுக்கா முடி சூட்டுவது'' எனப் பொருமினான். மணிகண்டன் மேல் பொறாமை கொண்டு அவருக்குக் கேடு விளைவிக்கச் சதியா லோசனை செய்தான். மந்திரவாதிகளைத் தருவித்து ஆபிசார மந்திரத்தால் தீய சக்திகளை மணிகண்டன் மேல் ஏவி விடுமாறு பணித்தான். இதனால் மணிகண்டன் உடல் முழுவதும் புண் கள் நிறைந்து வருந்தினான். எந்த விதமான வைத்தியமும் பலன் தராமல் போகவே மன்னன் கவலையே உருவாகிச் செய லற்று நின்று விட்டான். அப்போது உமாபதி ஓர் துறவியின் உருவில் வந்து மணிகண்டனின் உடலைத் தடவி திருநீறு அணி வித்து நோயைக் குணப்படுத்தி மறைந்தார். ஆபிசாரப் பிர யோகம் செய்த மாந்திரிகர்கள் அழிந்தனர். ஆதிபரம் பொரு ளான ஆலம் உண்டவனே வந்து மணிகண்டப் பெருமானின் நோயைக் குணப்படுத்தவும் முன்னிலும் அதிக பலத்தோடும் தேஜஸோடும் மணிகண்டன் விளங்கினான்.

அவதாரம் என்று பகவான் பூவுலகில் வரும்போது எடுக் கின்ற அவதார ரூபத்துக்கும் அதைச் சார்ந்துள்ள அப் போதைய சமுதாயத்தின் கட்டுப்பாடுகளுக்கும் சூழ்நிலைகளுக் கும் ஏற்ப நடந்து காட்ட வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. சர்வ சக்தி படைத்த தெய்வத்தின் அவதாரமாக ஐயன் இருந் தாலும் அவதார நோக்கம் பூர்த்தியாகும் வரையில் தனது மகிமையை வெளியே காட்டிக் கொள்ளாமல் இருக்க வேண் டியதாயிற்று. மனிதப் பிறவி எடுத்தால் மனிதனுடைய அடிப் படைக் குணங்களை மிகுதியாகக் காட்டி அந்தந்த சூழ்நிலைகளி லும் தர்மத்தை வழுவாது நடத்திக் காட்டமுடியும் என்று நிருபிப்பதாலேயே இராமாயணம் போன்ற புண்ணிய சரிதங் கள் காலத்தால் கெடாமல் அழியா தர்மத்தை இன்றும் போதித் துக் கொண்டு வருகின்றன. ஸ்வதர்மத்தைத் தானே நடத்திக்

காட்டி அதன் மூலமே தர்மத்தை நிலைநிறுத்த எடுத்த அவ தாரங்களில் அமானுஷ்யமான செயல்களை புரிவதன் மூலம் தர்மத்தை உலகமறியச் செய்துவிட முடியாது. அதே போல சர்வரோக நிவாரண தன்வந்திரி மூர்த்தி என்று சகலராலும் போற்றி வணங்கப்படுகின்ற பவரோக வைத்தியனாகிய ஐயப்பன், தனது உடல் நலம் கெட்ட போது அதற்குக் கட்டுப் பட்டு, தானே நிவாரணம் செய்து கொள்ளாமல் உடலைப் புண் களுடன் வருத்திக் கொண்டதற்கு அவதார நோக்கம் தான் முக்கிய காரணமாகும்.

பலவிதமான வழிகளில் மணிகண்டனைத் துன்புறுத்தி யும் தனது முயற்சிகள் யாவும் தோற்றதால் மந்திரி இன்னும் அதி தீவிரமாகத் துராலோசனை செய்து மணிகண்டனை அழிக்க முயன்றான். அதன் கடைசி அஸ்திரமாக இதுகாறும் மணி கண்டன் மேல் அன்பு வைத்திருந்த இராணியின் மனதையும் கலைத்தான். மணிகண்டனுக்கு முடிசூட்டினால் மகாராணியும் அவளது மகனும் அரச பதவியையும் அரசபோகங்களையும் இழந்து மணிகண்டனுக்கு அடிமைப்பட்டிருக்க நேரிடும் என்றும், இராஜராஜன் அரச பதவியைக் கனவிலும் அடைய முடியாது என்றும் மந்திரி கூறி இராணியின் மனதைக் கலைத்து விட்டான்.

''நீங்கள் தீராத தலைவலியால் துடிப்பவர் போல நடிக்க வேண்டும். அதைத் தீர்க்க புலிப்பால் ஒன்றுதான் சிறந்த மருந்து என்று வைத்தியர்களைக் கூறச் செய்கிறேன். அன்னை யாம் தங்கள் மேல் அதிக அன்பு கொண்ட மணிகண்டனும் தாயின் தலைவலி தீர்க்க, தானே புலிப்பால் கொண்டு வருவ தாகக் கிளம்பி அடர்வனம் செல்வான்- சிறுவன் புலிப்பால் கொண்டு வருவது எங்ஙனம்? அங்கே கொடிய துஷ்ட மிருகங் களால் தாக்கப்பட்டு மடிந்து விடுவான். அரசன் சிறிது நாள் புத்திரனை இழந்த காரணத்தால் மனம் வருந்தினாலும் பிறகு இராஜராஜனுக்குப் பட்டம் சூட்டிவிடுவான்'' என்று தனது

திட்டத்தைக் கூறினன். தனது சொந்த மகன் மேல் கொண்ட வாத்ஸல்யத்தால் மதியிழந்த மகாராணி சூழ்ச்சிக்குப் பலியாகி ஐயப்பனுக்கு முடி சூட்டுவதைத் தடுக்கச் செயல் பட்டாள்.

## தாயின் தலைவலி தீர்த்தவனே!

சரணம் ஐயப்பா!!

---

இராணி தலைவிரி கோலமாகப் படுத்துப் புரண்டு தீராத தலைவலியால் துடிப்பவள் போல் நடிக்கிருள். எந்த வைத்தியமும் பலன் தரவில்லை. இல்லாத வியாதிக்கு எந்த வைத்தியம்தான் பலன்தரும்? மன்னனே கலங்கி நிற்கின்ருன். மந்திரி உலகிலேயே சிறந்த வைத்தியன் என்று ஒருவனை அழைத்து வந்தான். அவனும், மந்திரி ஏற்கெனவே சொல்லிக் கொடுத்தபடி 'இது ஓர் அபூர்வமான தலைவலி; இதைத் தீர்க்க ஓர் ஒப்பற்ற ஔடதம் உண்டு; ஆனல் அதைத் தயாரிக்க புலிப் பால் இன்றியமையாத உபபொருள் ஆகும்', என்று உரைத்தான். புலிப்பாலுக்கு எங்கே போவது? காட்டின் நடுவில் இரத்தத்தையே ருசி பார்த்துப் பழகியிருக்கும் வேங்கை. அதுவும் குட்டி போட்டு இருக்கும் தாய் வேங்கையை எப்படி அணுக முடியும்? இவ்வாறு பலவாருக நினைத்து ஒன்றும் தோன்ருமல் இராஜசேகரபாண்டியன் கவலையே உருவாக நின்று விட்டான்.

மணிகண்டனின் அவதார காலம் முடிவடையும் கட்டம் நெருங்கிவிட்டது. அவதார நிமித்தமாக வனம் செல்வதற்கான சூழ்நிலையும் அரண்மனையில் ஏற்பட்டு விட்டது. தந்தையின் துயர் துடைக்க விழைந்த தனயன், தாயின் தலைவலி தீர தானே வனம் சென்று புலிப்பால் கொண்டு வருவதற்காகத்

தந்தையிடம் அனுமதி கேட்டு நின்றான். புலிப்பால் கொண்டு வருவதில் இருக்கும் சிரமங்களை நன்கு அறிந்த இராஜசேகரன் தன் உயிருக்கும் மேலான பாலகனை அதன் பொருட்டு வனம் அனுப்ப மனம் இல்லாமல் தவிக்க, மைந்தனே பலவிதமாக சமாதானங்கள் கூறித்தாயின் தலைவலி தீர்ப்பது தனது கடமை யாகும் என்பதையும் உணர்த்தி இறுதியில் தந்தையின் சம்மதத் தையும் ஆசிகளையும் பெற்றான். மன்னன் உடன் அனுப்புவ தாகச் சொன்ன சேனைகளை வேண்டாமென நிராகரித்துவிட்டுத் தன்னந்தனியனாக வனம் செல்லத் துணிந்தான், வங்கக்கடல் கடைந்த மாதவனின் திருமகன்.

இராமாயணமும் பூதநாதோபாக்கியானமும் பெருமளவில் ஒத்து வருவதை இதுவரை பார்த்திருக்கலாம். 'நாராயணாய' என்னும் மந்திரத்தின் இரண்டாவது எழுத்தான 'ரா' வும் 'நமசிவாய' என்னும் பஞ்சாக்ஷரத்தின் இரண்டாவது எழுத் தான 'ம' வும் சேர்ந்து 'ராம' என்று ஆயிற்று என்று கூறு கிறார்கள். அதாவது 'ராம' என்பதும் ஹரி-ஹர சமஷ்டி ரூபமே என்று கருதப்படுகிறது. எனவே இராமாவதாரத்துக் கும் ஹரி-ஹர சுதனின் அவதாரத்துக்கும் வேறுபாடுகள் ஏதும் இல்லை என்பது இவ்விரு அவதார புராணங்களின் கதைப் போக்கிலிருந்தும் வெளியாகிறது.

இராமபிரானுக்கு முடி சூட்டுவதைத் தடுத்து அவனைப் பதினான்கு ஆண்டுகள் வனம் அனுப்பும்படி, மந்தரையின் போதனையால் மனம் மாறிய கைகேயி தசரதன் முன் தலைவிரி கோலமாக அழுது அரற்றி இரண்டு வரங்களைப் பெற்றாள். அதே போல நல்மனம் படைத்த இராணி கோப்பெருந்தேவி துன்மந்திரியின் போதனையால் மதியிழந்து, மணிகண்டனுக்கு முடி சூட்டுவதை விரும்பாது, தலைவலியால் துடிப்பவள் போல் நடித்து மன்னனை மனம் வருந்தச் செய்தாள். தந்தையின் துயர்தாளாத தனயன், தாயின் தலைவலி தீர்க்கப் புலிப்பால் கொண்டு வருவதற்காக வனம் செல்கிறான். ஆக இரு புரா

ணங்களின் நடப்பும் ஒன்றுதான். சம்பவங்கள்தான் காலத்திற் கேற்ப மாறியுள்ளன.

## புலிப்பால் கொணர்ந்த தேவனே!

சரணம் ஐயப்பா!

சிவபக்தனான இராஜசேகர பாண்டியன் தனது குலதெய்வமான முக்கண்ணனைத் தியானித்து முக்கண் படைத்த தேங்காயொன்றை இறைவனின் பிரதிநிதியாக எடுத்துச் செல்லும்படி கொடுத்தான். உணவிற்காகத் தின்பண்டங்கள் சிலவும் போட்டு இருமுடி கட்டி மணிகண்டனிடம் கொடுத்து வழியனுப்பினான். இதைக் கருத்தில் கொண்டு தான் சபரிமலை செல்லும் அடியார்கள் தலையில் இருமுடி ஏந்திச் செல்கிறார்கள். பன்னிரண்டு வயது நிரம்பாத பச்சிளம் பாலகன் தன்னந் தனியனாய், தான் செய்யவேண்டிய காரியத்தை மட்டுமே கருத்தில்கொண்டு அன்புடன் வளர்த்த பெற்றோரையும் குருவையும் பணிந்து புலிப்பால் கொண்டுவர இருள் சூழ்ந்த அடர்வனத்திற்குப் புறப்பட்டான். நாடே அதிசயித்தில் ஆழ்ந்தது. கண்பெற்று இழந்த குருடன் போல் இராஜசேகர பாண்டியன் துயரத்தில் ஆழ்ந்தான்.

தன்னைப்பெற்ற தாய் தந்தையருக்குத் தான் ஆற்ற வேண்டிய கடமையையும் தியாக உணர்ச்சியையும் மக்கள் புரிந்து கொள்ளவேண்டும். தன்னை வளர்த்த தாய் தந்தையர் நலனுக்காக மணிகண்டன் உயிரையும் திரணமாக மதித்துக் கானகம் செல்லக் கிளம்புகிறான் என்றால் பெற்ற தாய் தந்தையர்க்கு மகன் செலுத்தவேண்டிய தலையாய கடமையின் அவசியத்தை மேலும் சொல்லியா விளக்க வேண்டும்? 'மாதா, பிதா, குரு, தெய்வம்'. இதை வெறும் வாய்ச் சொல்லாகக் கொண்டால் மட்டும் போதாது. செயலிலும் காட்ட வேண்டும் என்பதைத் தான் பகவான் இங்கே நமக்குக் குறிப்புணர்த்துகிறார்.

முனிவர்கள் பணியும் பாதனே!

சரணம் ஐயப்பா!

ஐயப்பன் கானகம் அடைந்ததும், ஈசனுல் அனுப்பப்பட்ட பூதகணங்கள் அவனை வணங்கிப்பின் தொடர்ந்தன. பகவான் பம்பா நதி தீரத்தை அடைந்தார். அங்கே தவம் செய்து கொண்டிருந்த முனிவர்கள் பலரும் பகவானை பக்தியுடன் தரிசனம் செய்தனர், தங்களது தபோ பலத்தால் தங்கமய மான ஒரு ஆலயம் அமைத்து நவரத்னங்களால் ஆன சிம்மா சனத்தில் பகவானை அமர்த்தி மணி மகுடம் சூட்டி உளமுருக வந்தனை வழிபாடுகள் செய்து மகிழ்ந்தார்கள். தக்ஷிண கைலாசம் என்று போற்றப்படும், 'பொன்னம்பலமேடு' என்று இன்று பக்தர்களால் அழைக்கப்படும் இடம் அதுவாக இருக் கலாம். அந்த ஆலயம் தற்போது காண இயலவில்லை என்றுல் அது முனிவர்களின் தவ பலத்தால் நமது புறக்கண்களுக்குப் புலப்படா வண்ணம் அமைக்கப்பட்டிருப்பதாகக் கொள்ள லாம்.

## பங்குனியில் உதித்தவனே! சரணம் ஐயப்பா !!

சுந்தர மகிஷத்துடன் பூவுலகில் மகிஷமுகி சுகபோகங்களை அனுபவித்துத் திரிந்த வண்ணம் இருக்கையில், தேவர்கள் அரக்கர்களை முறியடித்து அமராவதி அரசுக் கட்டிலைக் கைப்பற்றினார்கள். அசுரர்கள் மனமொடிந்து பூவுலகில் மகிஷ முகியிடம் தங்களது திக்கற்ற நிலையை உணர்த்தி வருத்தத் துடன் வணங்கி நின்றார்கள். அவர்களது கஷ்டங்களை அறிந்த மகிஷமுகி, தனது காம மயக்கம் நீங்கப் பெற்றவளாய் விழித் தெழுந்து, தேவர்களை வென்றுவரத் தன்படை பலத்துடன் அமராவதி ஏகினாள். தத்தனின் அவதாரமான சுந்தரமகிஷம் மகிஷியின் பிரிவால் விடுதலை பெற்று, மூல ஸ்தானமான மும்மூர்த்திகளில் கலந்தது.

தனது ரோமக் கால்களிலிருந்து உருவாக்கப்பட்ட எண்ணற்ற மகிஷமுகிகளுடனும் அரக்கர் சைன்யத்துடனும் மகிஷி அமராவதி சென்று தேவர்களைப் புறமுதுகு காட்டி ஓடச் செய்தாள். மீண்டும் தேவர்கள் தங்கள் இருப்பிடத்தை விட்டு மறைந்து வசிக்க வேண்டியதாயிற்று. தங்களைக் காப்பாற்ற ஹரிஹரபுத்திரனால் தான் முடியும் என்ற உண்மையை உணர்ந் தவர்களாய் வானோர் தர்மசாஸ்தாவை மனமுருகித் துதித்தார் கள்.

தேவர்களின் தோத்திரங்களைக் கேட்டு கருணாகரக் கடவுள் மனம் கனிந்து தேவலோகத்தில் பங்குனி மாதம் உத்திர நக்ஷத்திரம் கூடிய சனிக்கிழமையில் பிரவேசித்து தேவர்களுக் குக் காட்சி தந்தார். அன்றுதான் முதன் முதலாக தேவர் களுக்குப் பகவானின் திவ்யதரிசனம் கிடைத்ததால் அதுவே ஆதி அந்தம் இல்லாத அருட்பெரும் ஜோதியின் அவதார தின மாகக் கொண்டாடப்படுகிறது. ஒரு சாரார் ஹரிஹரசுதன் திரு அவதாரம் செய்தது மார்கழி மாதம் விருச்சிக லக்னம், உத்திர நக்ஷத்திரம் கூடிய சனிக்கிழமையாகும் என்று கூறு கிறார்கள்.

ஆனல் நாட்டு பாடல்களில் ''பங்குனியில் ஈராறில் உதித்தவனே'' என்றும், ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர் அவர் களுடைய ''ஹரிஹர புத்ரம் சாஸ்தாரம் பஜேஹம்'' என்ற க்ருதியில் ''பால்குணமாஸ பௌர்ணி மாவதாரம்'' என்றும் வழங்குவதைக் கொண்டு பார்க்குமிடத்து பகவானின் தேவ லோக ப்ரவேச தினமாகிய பங்குனி மாதம் உத்திர நக்ஷத்திரம் கூடிய சனிக்கிழமையே பகவானின் அவதார தினமாகக் கொள்ளப்பட வேண்டும் என்பதே பொருத்தமாக உள்ளது. பகவான் நமது சிற்றறிவுக்கு எட்டிய காலவரையறைக்கு அப் பாற்பட்டவர் என்பதும் இதனின்று புலனுகிறது.

**மகிஷி சம்ஹாரனே!** **சரணம் ஐயப்பா!!**

தேவர்களின் குறைகளைக் கேட்டு அதனுல் எழுந்த பெருங் கோபத்துடன் தேவலோகத்தில் நுழைந்த சுரிகாயுததாரி தன்னிருகரங்களால் மகிஷியின் கொம்புகளைப் பிடித்துத் தூக்கி கரகரவென்று சுழற்றி அவளைப் பூவுலகிற்கு விட்டு எறிந்தார். மகிஷியின் உடல் ''அலஸா'' நதி தீரத்தில் வந்து விழுந்தது. அவள் மீண்டும் எழும் முன்பே பகவான் அவ்விடம் பாய்ந்து சென்று அரக்கி முதுகின்மேல் ஏறிக் கோர தாண்டவமாடி அவளை வதைத்தார். மகிஷியின் அரக்கர் கூட்டம் பூதநாத னின் பூதகணங்களிடம் சிக்குண்டு அழிந்தது.

மஹிஷி மர்த்தனனே! சரணம் ஐயப்பா!!

மஹிஷி மர்த்தனராக மணிகண்டேச்வரன் அவள் மீது சம்ஹார தாண்டவம் ஆடும் கண்கொள்ளாக் காக்ஷியை தேவர் கள் மட்டுமா கண்டுகளித்தனர்! நாரதர் வீணுகானம் முழங்கி ஞர். காளிங்க நர்த்தனரான திருமால் கோகுலத்தில் தனது ஆடல்பாடல்களை நிறுத்தி விட்டு இந்த நடனத்தைக் காண வந்துவிட்டார். தில்லையில் ஒரு காலைத் தூக்கி நின்று ஆடும் அம்பலத்திறைவனும் தன் ஆடலை விட்டு பூவுலகம் நாடலைக் கொண்டார். பகவானின் நடனத்தில் மயங்கித் தன்னையே மறந்து லயித்து விடுவோம் என்று அஞ்சிய ஆடலம்பதி வாணன் தனது வாகனமாகிய காளையைப் பக்கத்தில் உள்ள மரத்தில் கட்டி வைத்தார். அவ்விடம் இன்றும் ''காளை கட்டி நிலையம்'' என்று அழைக்கப்படுகிறது.

இறைவன் திருப்பாதங்கள் தாங்கி நின்ற மகிஷ முகிக்குத் தான் கேட்டவரமே தனக்கு முடிவாக வந்து விட்டது என்பதை அறிய முடிந்தது. உலகில் எது நடக்காது என்று இறுமாந் திருந்தாளோ அது நடந்து விட்டது என்று தெரிந்து கொண் டாள். அவளைச் சம்ஹாரம் செய்யும் மூர்த்தி கால காலனுக்கும் கீதா லோலனுக்கும் பிறந்த தர்மசாஸ்தா என்பதை உணர்ந் தாள். பழவினை யடங்கத் தவவினை தலை தூக்கியது. ஆணவம் அடங்கினல் இறையுணர்வு தானே வெளிப்படும். இதையே அருணை முனிவர் கந்தர் அலங்காரத்தில்,

''தடுங்கோள் மனத்தை! விடுங்கோள்
வெகுளியை! தானமென்றும்
இடுங்கோள்! இருந்தபடி
இருங்கோள்! எழுபாரும்
உய்யக் கொடுங்கோபச் சூருடன்
குன்றம் திறக்கத் துளைக்க வைவேல்
விடுங்கோன் அருள்வந்து
தானே உமக்கு வெளிப்படுமே''

என்று நமக்கு உபதேசம் செய்கிருர்.

மாளிகைப் புரத்தம்ம தேவி லோக மஞ்சமாதாவே!
சரணம் ஐயப்பா!!

இனி அவனையே சரணமடைவது தவிர உய்யும் வழி வேறு இல்லை என்பதை உணர்ந்தவளாய் மகிஷி தனது பிழைகளைப் பொறுத்துத் தனக்குச் சாப விமோசனமும் பக்தி முக்தி யானந்த நிலையும் அருள வேண்டும் என்று பிரார்த்தித்தாள். பிழை பொறுத்தருளும் பெருமான் மனமிரங்கி மகிஷியைத் தனது கரங்களினால் கருணையுடன் வருடினான். ஐயப்பனின் கர ஸ்பரிசம் பட்டமாத்திரத்தில் தனது மகிஷ உருவம் நீங்கப் பெற்றுச் சாப விமோசனம் அடைந்த லீலாவதி அதி சௌந்தர்ய லாவண்ய தேவதையாக விளங்கினாள். மணிகண்டனைப் பணிந்து தன்னை மனைவியாக ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று வேண்டினாள். ஹரிஹர குமாரன், இந்த ஐயப்பன் என்னும் அவதாரத்தில் தான் நித்ய பிரம்மசாரியாக இருக்கப் போவதால் அவளைத் தன் மனைவியாக ஏற்றுக் கொள்ள இயலாத நிலையை விளக்கினான். ஆயினும் சக்தி அம்சமாக சபரிமலையில் தனது ஆலயத்தின் வடக்கு திசையில் சற்றுத் தள்ளி மாளிகை புரத்தம்மை மஞ்சமாதா என்ற பெயருடன் விளங்கித் தன்னை பூஜித்து வரலாம் என்று அருளினான். லீலாவதியும் தான் பெற்ற வரங்களால் மனம் மகிழ்ந்தாள் என்றாலும் அவரை மணந்து கொள்ள வேறு உபாய மில்லையா என்று கேட்டாள். வேறு மார்க்கமில்லையாயினும் எந்த வருடம் தன்னை தரிசிக்க 'கன்னி ஐயப்பன்' (முதல் தடவையாக சபரி மலை செல்லும் பக்தன்) ஒருவன் கூட வராதிருக்கிறானோ அந்த வருடம் அவளை மணந்து கொள்வதாக ஐயன் கூறினார். கன்னி ஐயப்ப சகோதரர்களின் வருகையைக் குறிக்கும் சரங் குத்தி ஆல் ஒரு தனி மலை போலவே வருடாவருடம் உருவாகி வருவதைப் பார்க்குமிடத்து பகவானுக்குத் தன் வைராக்யத்தில் உள்ள உறுதியும் பக்தர்களின் மீதுள்ள நம்பிக்கையும் அன்பும் நன்றாகப் புலனாகிறது.

மகிஷி சம்ஹாரம் முடிந்த பிறகு சங்கரன் தன் மைந்தனிடம் 'குழந்தாய்! உன்னுல் ஆக வேண்டிய காரியங்கள் இன்னும் பல இருக்கின்றன- நீ வனம் வந்த பிறகு உன்னைப் பிரிந்து துயரால் வருந்தி வாடிக் கொண்டு இருக்கும் இராஜ சேகர பாண்டியனை ஆட்கொண்டு அவனுக்கு முக்தி அளிக்க வேண்டும். நீ இராமாவதாரம் எடுத்தபோது சகுணனுக உன்னைப் பூஜித்து உபசரித்த சபரி என்னும் வேடுவ பக்தை அந்தப் பிறவியில் முக்தி கிட்டாமல் மீண்டும் நீலிமலைச் சாரலில் அதே பெயரில் பிறந்து உன்னை நிர்க்குணனுகத் தியானித்துக் கொண்டு உன் வரவை எதிர்பார்த்து இருக்கிருள். நீ சென்று அவளை அனுக்ரஹித்து அவளுக்கு மோட்சம் அளித்து அருள் வாய். அந்தப் புண்யவதியின் நினைவாக அந்த மலைக்குச் சபரி மலை என்றே பெயர் வழங்கப்படட்டும். சபரிமலையில் உனது தந்தை இராஜசேகரன் நிர்மாணிக்கும் ஆலயத்தில் நீ சகுணனுகவும், முனிவர்களால் ஏற்படுத்தப்பட்ட காந்தமலையில் நிர்க்குணனுகவும் விளங்கி வருவதோடு உத்தம பக்தர்களின் உள்ள மென்னும் கோவில்களிலும் உறைவாயாக. உன் தாயின் தலைவலியைத் தீர்க்கப் புலிப்பால் கொண்டு செல் வாயாக. தேவதைகள் பெண்புலிகளாகவும் தேவர்கள் புலிக் கூட்டங்களாகவும் தொடர, அமரேந்திரன் வேங்கையாக வருவான். அவன் மீது ஆரோகணித்த வண்ணம் நீ நாடு திரும்பலாம்'' என்று அருளி மறைந்தான்.

இறந்த மகிஷமுகியின் சரீரம் மலைபோல் வளர்ந்து சூரிய சந்திரர்களையே மறைக்கக்கூடும் என்பதையறிந்து பகவான் மகிஷியின் உடலைப்பாதாளத்தில் அழுத்தி அதன் மீது கல் லிட்டு மூடினுர், பூதகணங்களும் கற்களால் அவள் உடலை மூடின. அப்படி கற்களால் மூடப்பட்டு மகிஷி அடக்கம் செய்யப்பட்ட இடமே ''கல்லிடும் குன்று'', என்று தற்போது வழங்கி வருகிறது.

பகவான் கானகத்தில் பூதகணங்களை நிறுத்தி விட்டுக் கரந்தையர் பாளையம் என்னும் சிற்றூருக்குச் சென்றார். அங்கு ஈசனடியார்களை உண்டி முதலியன கொடுத்து உபசரிப்பதையே கடமையாகக் கொண்டு தொண்டு செய்து வரும் ஓர் வயோதிக ஏழை அந்தணத் தம்பதியர் இருந்தனர். மாலை மயங்கும் நேரத்தில் தனது குடிலின் வாயிற் புறத்தில் ஓர் பாலகன் வந்து நிற்பதைக் கண்டு அக் குழந்தையை வரவேற்று உபசரித்தனர், முதியோர் இருவரும் குழந்தையைத் தங்கள் மடியில் அமர்த்திக் கிண்ணத்தில் அமுது பிசைந்து தங்கள் கைகளால் ஊட்டி மகிழ்ந்தார்கள். அவர்களது அன்பையும் பாசத்தையும் கண்டு மகிழ்ந்த பம்பா பாலகன் மனம் மகிழ்ந்து தனக்கு அன்போடு அமுதளித்த முதியோர் இருவருக்கும் முக்தி அருளக் கருணை உள்ளம் கொண்டான். அன்று இரவே முதியவர் இருவருக்கும் தேஜோமூர்த்தியாய் திவ்ய தரிசனம் தந்தான். ஆனந்த பரவசமாகிக் கண்ணீர் பிரவாகமாகப் பெருக்கெடுத்தோடத் தன்முன் பக்தியுடன் கை கட்டி நிற்கும் பெரியோரைக் கண்ட பகவான், ''ஏன்னருமை பக்த தம்பதிகளே! என்மீது தாங்கள் காட்டிய பாசத்தையும் பரிவையும் அறிந்து மட்டிலா மகிழ்ச்சி கொண்டேன். தாங்கள் ஏன் கை கட்டி நிற்கவேண்டும்? நானல்லவா தாங்களிருவருக்கும் தங்களது அன்புக்கு அடிமையாகிக் கைகட்டி நிற்கவேண்டும்! இனி தங்களுக்கு மட்டுமல்ல; தங்களது கம்பங்குடி வம்சத்திற்கே தலைமுறை தலைமுறையாக யான் அடிமை. எனது அடிமை சாஸனத்தை ஏற்றுக்கொள்ளுங்கள். நாளும் எம்மைப் பணிந்து இன்புறுவீராக!' என்று வாழ்த்தி மறைந்தார். என்னே பகவானின் தனிப் பெரும் கருணை! பகவான் எல்லோருக்கும் உரியவர் என்றாலும், தன்னையே நினைத்து தன்னை எதிர்நோக்கும் பக்தர்களிடமே விரைவில் சென்று அவர்களது குறைகளை நிவர்த்தி செய்கிறார். வயோதிக அறவாழி

அந்தணர் அகத்தில் அளித்திட்ட அமுதுண்டு அழிபசி அகன்று அகமகிழ்ந்து அன்னமிட்ட அன்பருக்கு அனவரதமும் அவர் அடிமை என்று பகர்ந்தார் என்றல் பக்திக்கு எந்த அளவு அவர் கட்டுப் படுகிறர் என்பதைத் தெள்ளெனத் தெரிந்து கொள்ளலாம். பக்தி மார்க்கத்தால் மட்டுமின்றி இறைவன் அடியார்க்குத் தொண்டு செய்வதாலும் பரம் பொருளைக் கட்டுப் படுத்த முடியும் என்பதற்கு உலகுக்கு இது ஓர் எடுத்துக் காட்டு.

**வன்புலிவாகனனே! சரணம் ஐயப்பா!!**

பகவானது கட்டளைக்கிணங்க தேவர்கள் புலிகளாகவும் தேவேந்திரன் வேங்கையாகவும் மாறி நிற்க, வில்லாளி வீரன், வீரமணிகண்டன், வன்புலிவாகனனுய்ப் புலிகள் பின் தொடரப் பந்தள நாட்டை அடைந்தார். நகர மாந்தர் அனைவரும் சீறி வரும் புலிக் கூட்டத்தையும் அதன் நடுவே ஒரு வேங்கை மேல் மணிகண்டன் ஏறிவரும் பாங்கையும் அதிசயத்துடன் கண்டு திகைத்துப் பீதி அடைந்தனர். தங்களைக் காப்பாற்றிக் கொள்ளும் வகையறியாது ஓடினர்.

மக்களின் நிலையைக் கேள்வியுற்ற மன்னன் கோட்டை வாயிலில் வந்து பார்க்கும்போது வேங்கைமீது அமர்ந்து புலிக் கூட்டம் புடைசூழ மைந்தன் பவனி வருவதைக் கண்டு ஆச்சரியத்தாலும் பயத்தாலும் செயலற்று நின்றுவிட்டான். மந்த ஹாஸவதனுன மணிகண்டன் கீழேயிறங்கித் தந்தையைப் பணிந்து தாயின் தலைவலி தீர, வேண்டிய அளவு புலிப்பால் எடுத்துக் கொள்ளும்படி கூறி நின்றுன். தன் மைந்தன் சாதாரண மனிதப் பிறவி அல்ல, பகவானின் திரு அவதாரமே என்ற உண்மையை மணிகண்டனின் முக காந்தியிலிருந்தே தெரிந்துக்கொண்ட மன்னன், ''நீ சாக்ஷாத் எம்பெருமானே அன்றி வேறுயாருமல்ல. பிழை ஏது நடந்திருப்பினும் பொறுத்தருள வேண்டும். நீ.வனம் சென்ற உடனேயே அரசி

யின் தலைவலி மறைந்து விட்டது. இந்தச் சீறும் புலிக் கூட்டத்தை மறையச் செய்து நின் சுய ரூபத்தைக் காட்டி அருளவேண்டும்'' என்று வேண்டி நின்றான்.

## அகத்தியர் குருவே! சரணம் ஐயப்பா!!

அந்தச் சமயத்தில் பகவானின் கட்டளைக்கிணங்க அகத்திய மாமுனிவர் அங்கு வந்து சேர்ந்தார். பந்தள ராஜனுக்கு ஹரிஹரபுத்திரனின் அவதார மகிமையை எடுத்துக் கூறி, மைந்தனாக வந்துள்ளவன் தாரகப் பிரம்மமே என்பதையும் விளக்கி அவனைச் சரணடைந்து சாயுஜ்ய பதவி பெறுமாறு உப தேசித்தார். பரம்பொருள் தன் வீட்டிலே மகனாக வளர்ந்ததை யும், சேவகனாகப் பணி புரிந்ததையும் இன்ன பல லீலைகளையும் எண்ணி எண்ணி சித்தனாய், பித்தனாய், கண்கள் ஆறாக ஆனந்த பாஷ்பத்தைப் பெருக்க, நெஞ்சு மட்டற்ற மகிழ்ச்சியினால் வெடித்தே விடுமோ என்ற நிலையில் பூரித்திருக்க, எப்படி பகவானைப் புகழ்வது என்று ஒன்றும் புரியாமல் பேச எழும் நாவோ தழுதழுக்க, உடல் நிலை கொள்ளாமல் துடிதுடிக்கப் பலவாறான உணர்ச்சிகளின் சங்கமமாய் பந்தள மன்னன் இராஜசேகர பாண்டியன் பகவானை வணங்கி நின்றான். சின் மயானந்த ஸ்வரூபியைப் பலவாறு தோத்தரித்து, தனது மாளிகையில் பாலகனாய் இருந்த போது மகன் என்ற சுதந்திரத் துடன் ஒருமையில் அழைத்ததையும் மந்திரியின் துர்ப்போதனை யால் விளைந்த பிழைகளையும் பிற இன்னல்களையும் பொறுத்துக் காத்து மன்னித்து அருளும்படி வேண்டினான். புலிகளை மறையச் செய்து மக்களின் பீதியைப் போக்கவேண்டும் என்றும் இறைஞ்சினான். கருணைக் கடவுளின் கட்டளைப்படி புலிகளான தேவர்கள் மறைந்தனர். மக்களும் மன்னவனும் மகிழ்ந்து மணிகண்டனைப் பணிந்து எழுந்தனர்.

நீலமேக ஸ்யாமளன், மன்னனிடம் தனது அவதார நோக்கத்தைக் கூறி, அது முடிவதற்குச் சாதகமான சூழ்நிலை

அரண்மனையில் உருவானது தன் மாயா விநோதங்களே அன்றி மந்திரியின் குணக்குறைவு இல்லை என்றும் அவரது காரியங்களால் தான், தனது மகிமை உலகுக்கு வெளிப்பட ஏதுவாக இருந்தது என்றும் மனமுவந்து கூறி அனுக்ரஹித்தார். சாஸ்வத பரபிரம்மத்திடம் அரசன் பிறவிப் பிணியிலிருந்து தனக்கு விடுதலை அளித்து பக்தி முக்தியானந்த நிலையை அருளுமாறும், நல்லுபதேசம் புரிந்து தன்னையும் தன் குலத்தையும் கடைத்தேற்றுமாறும், தன் நாட்டைக் காத்து ரக்ஷித்து அந் நாட்டிலேயே வாழ்ந்து வரவேண்டும் என்றும் வரங்கள் பல கேட்டான்.

பூத நாத கீதையருளியவனே !

சரணம் ஐயப்பா! !

---

பகவான் அரசனிடம் ‘அரசே! தனது கரும வினைகள் தீராமல் வீடு பெறுதல் இயலாத காரியமாகும். ஆகையால் கரும வினையகல ஓர் ஸத்குருவிடம் உபதேசம் பெற்று வருவாயாக’’ என்று கூறி, அகத்திய முனியை அரசனுக்கு முறைப்படி உபதேசம் செய்யுமாறு பணித்தார். அரசனும் கும்ப முனியைப் பணிந்து மாமுனியின் நல்லாசிகளையும் உபதேசங்களையும் பெற்று மணிகண்டனைப் பணிந்தான். ஞான குருவிடம் உபதேசம் பெற்ற மன்னனுக்கு ஜகத் குருவான மணிகண்ட தேவன், உலகுய்யும் வழி வகுக்கின்ற ‘‘பூதநாத கீதை’’ யைத் திருவாய் மலர்ந்து அருளினர்.

பகவானின் ‘பூத நாத கீதை’ உபதேசத்தால் மனம் மகிழ்ந்து, பக்தி பரவசத்தில் அரசவை ஆழ்ந்தது. மகனது உபதேச மொழிகளால் மனம் கனிந்து, கண்ணீர் புனலாகப் பெருக்கெடுத்தோட மன்னன், ஸத்குருவான பகவானைப் பணிந்து, அவர் தன் நாட்டிலேயே இருக்கவேண்டும் என்றும் அவருக்கு ஆலயம் அமைத்துத் தரும் பாக்கியம் தனக்கு

கிடைக்க அருளவேண்டும் என்றும் இறைஞ்சினுன். ஐயன் சம்மதம் தெரிவித்துத் திருவாய் மலர்ந்தருளினுன்.

சபரிகிரிவாசனே! சரணம் ஐயப்பா!!

''பம்பா நதிக்கரையில் நீலிமலைச் சாரலில் என்னை நிர்குணுகத் தியானித்துக் கொண்டு என்னை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் 'சபரி' என்னும் பக்தைக்கு நான் முக்தியளிக்க வேண்டும். உத்தம பக்தையான அவளது நினைவாக அந்த மலைக்குச் 'சபரிமலை' என்றே பெயரிடப்படும். அந்த சபரிமலையில் நான் தேர்ந்தெடுக்கும் இடத்தில் எனக்கு ஒரு ஆலயம் அமைக்க வேண்டும். என்னைப் பிரதிஷ்டை செய்து அதன் கீழ் பதினெட்டுப் படிகளை அமைக்க வேண்டும். பஞ்ச இந்திரியங்கள், அஷ்ட ராகங்கள், திரிகுணங்கள், வித்யை, அவித்யை ஆகிய பதினெட்டு தத்துவங்களாகிய படிகளைக் கடந்து நிர்குணப் பிரம்மமான என்னைப் பணிந்து பக்தர்கள் சாயுஜ்ய பதவி அடைவார்கள். வடக்குப் பக்கத்தில் எனது சக்தியாக விளங்கும் மஞ்சமாதாவிற்கு ஓர் மாளிகையமைத்து வழி பட வேண்டும். எனது சேனைத் தலைவனுன கடுவரனுக்கும் கறுப்பனுக்கும், எனது தோழன் வாபுரனுக்கும் ஆலயங்கள் அமைத்து வழிபடவேண்டும். பக்தியின் சிறப்பை உலகோர் அறியும் வண்ணம் சபரிக்கு ஓர் பீடம் அமைக்கப் படட்டும்; சபரிமலை காசிக்கு ஈடான புனிதத்தன்மையும், சாந்நித்யமும் பெற்றுச் சிறப்புடன் விளங்கும். பம்பா நதியும் தட்சிண கங்கையாகக் கருதப்படும்''.

இவ்வாறு கூறிய பகவான், பக்தர்கள் சபரிமலைக்கு வருவதற்கு முன் கடைப்பிடிக்க வேண்டிய விரதங்கள் பற்றி விவரமாக எடுத்துக் கூறினுர். அவை பின்னுல் விரிவான முறையில் விவரிக்கப்பட்டிருக்கின்றன,

இங்கு பகவான் ஏன் சபரிமலேயைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்ற கேள்வி எழக்கூடும். சபரிமலேப் பிரதேசத்தின் மேற்கில் பொன்னம்பலத்தில் தர்மசாஸ்தாவிற்கு முனிவர்கள் செய்த அபிஷேகத் தீர்த்தம் கும்பளந் தோடாகப் பிரவாகித்து ஓடுகிறது. சபரிமலேக்குக் கிழக்கில் தட்சிண கங்கையாகப் போற்றப்படும் பம்பா நதி ஓடுகிறது. ஆகையால்தான் இவ்விரண்டு புண்ணிய தீர்த்தங்களுக்கும் நடுவில் அமைந்திருக்கும் சபரிமலேபகவானின் ஆலயம் அமைக்கப்படுவதற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்டது. பகவான் தனது ஆலயம் நிர்மாணிக்கப்பட வேண்டிய இடத்தை அறிவிக்கும் வண்ணம் ஒரு அம்பை எய்தான். அரசன், பகவானின் கருணேயால் ஞான திருஷ்டி மூலம் அம்பைப் பின்தொடர்ந்து அது விழுந்த இடத்தைத் தெரிந்துக் கொண்டான். அந்த இடத்தில் தனக்கு ஆலயம் அமைத்து வழிபடுமாறு மன்னனே அனுக்ரகித்துப் பகவான் மறைந்தார்.

**பூர்ணு புஷ்களா காந்தனே! சரணம் ஐயப்பா!!**

பகவான் கைலேயில் இருப்பதாகக் கூறப்படுகிறது கைலாயத்தில் தர்மசாஸ்தாவிற்கு பூர்ணு, புஷ்களா என்று இரு தேவியரும் சத்யகன் என்ற செல்லப் பிள்ளேயும் உண்டு என்று நூல்கள் கூறுகின்றன.

ஆக்ஞா சக்கரத்தில், அதாவது இரு புருவங்களுக்கும் மத்தியில் உள்ள ஸ்தானத்தில் ஸ்ரீ தர்ம சாஸ்தா வஸித்து வருவதாகப் பெரியவர்கள் கூறுகிருர்கள். அதாவது ஜீவனுக்கும் ஈச்வரனுக்கும் சந்திப்பு (ஸங்க்ரமணம்) ஏற்பட்டு, ஜீவனிடம் ஈச்வரனுடைய ஆக்ஞை பிரகாசிக்கும் சக்கரமே ஆக்ஞா சக்கரம் என்று சொல்லப்படும். அதில் ஒளிர் விடும் தாரகப்பிரம்மம், ஸகுண சக்தி, நிர்குண சக்தி என்ற இருசக்திகளால் இருபுறமும் அலங்கரிக்கப்பட்டு வருகிறது. காசி

க்ஷேத்திரத்தில் துர்க்கை, விசாலாக்ஷி என்னும் இரு சக்திகள் பிரஸித்தமாக விளங்கி வருவது போல கைலாயத்தில் பூர்ண புஷ்களா என்ற அவ்விரு சக்திகளும் ஸத்குருநாதனும் சபரி கிரீசனை அலங்கரித்து வருகின்றன.

லலிதா ஸஹஸ்ர நாமத்தில், பூர்ண, புஷ்கரா என்று இரு நாமங்கள் உண்டு. அதன்படி பூர்ண என்றால் காலம் தேசம் வஸ்து இவற்றிற்கு உட்படாமல் எங்கும் நிறைந்தவள் என்று பொருள். வடமொழியில் 'ர, ல' என்ற அக்ஷரங்கள் அபேத மாகையால் 'புஷ்கரா' என்னும் நாமத்தைப் 'புஷ்களா' என்றும் சொல்லலாம். அநற்குப் புஷ்டியை அளிப்பவள் என்று அர்த்தம். ஸ்ரீ தர்ம சாஸ்தாவே எங்கும் நிறைந்த பரப்பிரம் மம். அவரது சக்திகளும் அதே பொருள்பட பூரணமாகவும் புஷ்களமாகவும் அமைந்திருப்பது பொருத்தம்தானே!

பகவானை அடைவதற்குப் பக்தி மார்க்கமும் யோக மார்க்க மும் சிறந்தனவாகக் கருதப்படுகின்றன. பகவானை யடைந்து அவர்தம் அருகிலேயே கொலுவிருக்கும் இரு சக்திகளும் மேற் கூறிய இரு மார்க்கங்களைக் குறிக்கின்றன. இதன்படி பூர்ண பக்தி பாவத்தையும், புஷ்களா யோக பாவத்தையும் வெளிப் படுத்துவதாகத் தெரிந்து கொள்ளலாம்.

பகவான் மணிகண்டன் மறைந்த பின்னர், மன்னன் களை யிழந்து செயலிழந்தான். சதா சர்வகாலமும் தனது மகனை மீண்டும் காண முடியுமா என்று உருகி, அவன் தனது அவதார காலத்தில் அரண்மனையில் நடத்திய லீலா விநோதங்களையும், தான் அவனுடன் கொஞ்சி விளையாடியதையும் நினைந்து நினைந்து, மீண்டும் தன் மகனைக் காணும் நாள் வருமோ என்று மனம் வருந்தி நின்றான். அப்போது அகத்திய முனி அவ்விடம் வந்து மாயையில் கட்டுப்பட்டுக் கிடக்கும் மன்னனுக்கு ஆறுதல் மொழிகள் கூறி உபதேசங்கள் பல மொழிந்து மன்னனைத் தேற்றினர்.

'மன்னு! பகவான் உன்னைக் கடைத்தேற்றும் நாள் நெருங்கி விட்டது. அவனது கருணையால் ஞான மார்க்கத்தில் செல்லும் பாக்கியம் உனக்குக் கிடைத்துவிட்டது. இந்த மாயைத் தளையை அறுத்து எறிந்துவிட்டு மகனென நினையாமல் இறைவன் என்று மனதை நிலைப்படுத்து. உன் பூர்வ ஜன்மபலனுக பகவான் உனக்கு மகனுக வந்தார். அவரது அவதார நோக்கத்திற்கு நீ ஒரு கருவி; அவ்வளவுதான். ஆசையை அறுத்துத் தவம் செய்வாய். இனி உன் மனத்தில் வேறு ஆசைக்கோ பற்றுக்கோ இடம் வைக்காதே. தீ நற்கதி யடைவாய். உன் பூர்வ விருத்தாந்தங்களைக் கூறுகின்றேன் கேள்.

குமபளந்தோடே! சரணம் ஐயப்பா!!

---

பூர்வ ஜன்மத்தில் விஜயன் என்ற ஒரு பிராமணன் இருந்தான். அவன் புத்திர பாக்கியம் அடைய வேண்டிப் பலவித தான தருமங்களும் விரதங்களும் அனுஷ்டித்தும் பயனில்லை. ஒருநாள் ஓர் துறவி அவன் வீட்டிற்கு வந்து அவனுல் உபசரிக்கபபட்டு மகிழ்ந்தார். அவனது குறையைக் கேட்டு, ''அப்பா! நீலிமலைச் சாரலில் சபரி என்னும் பக்தை தாரகப் பிரம்மமான ஸ்ரீபூதநாதனை நிர்குணனுகப் பூஜித்து வருகிருள். அவளைக் கண்டு வணங்கினுல், உனக்கு சந்தானப் பிராப்திகிடைக்கும் மார்க்கத்தைப் போதிப்பாள்'' என்று கூறினுர். அந்தணனும் பக்தை சபரியை அணுகி வணங்கித் தன் குறைகளைத் தெரிவித்தான் சபரி ''சற்று வடக்கே சென்ருல் ஒரு அருவி புலப்படும். தக்ஷிண கைலாயமாகிய பொன்னம்பலத்தில் தர்ம சாஸ்தாவை ரிஷிகள் அபிஷேகம் செய்வித்த தீர்த்தமானது அருவியாக வந்து கொண்டு இருக்கிறது. அதைக் கீழே விழாமல் ஓர் குடத்தில் பிடித்து ஸ்நானம் செய்தால் உனது பாபங்கள் விலகி இஷ்டகாரியங்கள் நிறைவேறும்'' என்று கூறி

ஓர் குடத்தைக் கொடுத்தாள். அந்தணன் குடத்தில் நீரைப் பிடிக்க முயலுகையில், அருவியின் வேகத்தில் குடம் நழுவிக் கீழே விழுந்து நொறுங்கியது. அந்த இடத்தில் ஓர் சிறு மடு தோன்றி நீர் அங்கு தங்கியது. அந்தணன் அந்த மடுவில் ஸ்நானம் செய்து பாபங்கள் அகலப் பெற்ருன், கரையேறிய அந்தணன், கண்டவர் மயங்கும் அழகான பாலகனைக் கண்டு வணங்கினான். கடைத்தேற்றும் கருணாகரன். 'வேண்டும் வரம் யாதென' வினவ, ''நான் புத்திரனில்லா சோகத்தால் பீடிக்கப்பட்டிருக்கின்றேன். நீயே எனக்குப் புத்திரனாகப் பிறக்க வேண்டும்'' என்று வேண்டினான். ஐயனை 'பிறப்பு-இறப்பு' அற்ற நிலையை வேண்டும் அறிவுடையவனாக ஆகும் பரிபக்குவம் அடையப் பெற்ருன் இல்லை. பகவான் மனமுவந்து ''முன்பிறவியில் நம்பிக்கைத் துரோகம் என்னும் மாபெரும் பாபம் செய்ததால் இப்பிறப்பு எடுத்தனை. இந்த தீவினை தீர்க்கும் கும்பஜதடினியில் பக்தியுடன் ஸ்நானம் செய்த புண்ணியத்தால் நீ பாபங்கள் நீங்கப் பெற்றனை: செய்தற்கரிய தவம் செய்து என்னைக் காணும் பேறு பெற்றும், நித்திய சுக வஸ்துவுடன் கலக்கும் மோக்ஷ சாம்ராஜ்யம் கேட்கும் பரிபக்குவம் பெற்ருயில்லை. ஆயினும் அடுத்த பிறவியில் உனக்கு மோக்ஷம் தருகிறேன். சந்தானப் பிராப்தி வேண்டிய ஆசை பூர்த்தியாவதற்காக மீண்டும் ஓர் பிறப்பு எடுப்பாய்; அப்போது நானே உன் மகனாய் வந்து உன்னைக் கடைத்தேற்றுவேன்'' என்று அருளினான்:

விஜயன் குளித்த ஆற்றையே கும்பஜதடினி, கும்பள தீர்த்தம், கும்பளந்தோடு என்ற பல பெயர்கள் பெற்று ஓடும் ஆருக அறிகிரோம். இந்தப் புண்ணிய நதியில் ஸ்நானம் செய்தவர்கள் எல்லா பாபங்களும் கழுவப் பெற்று புண்ணியம் செய்தவர்களாக ஆகிருர்கள்.

யுகாதிகளைப் பற்றியும் 'பிறப்பு-இறப்பு' என்னும் சக்கரச் சுழலின் தன்மையையும் விளக்கிய பிறகு பகவான்

அந்தணோத்தமனை விஜயனின் வேண்டுகோளுக்கு இணங்கித் தனது விச்வரூபதரிசனத்தைக் காட்டியருளினன்.

''அந்த மகா பக்த சிரோன்மணியான அந்தணன் நீயே தான். இப்போது அரசனுய்த் தோன்றியிருக்கிருய். நீ வீடு அடையும் நாள் நெருங்கிவிட்டது,'' என்று அகத்தியர் கூறினுர். தாரகப் பிரம்மத்தின் பெருமையையும், பம்பா தீர்த்த மகிமையையும் கூறி, சாஸ்தா பூஜை விதிகளையும் உபதேசித்து அருளினுர். மன்னனைக் காலம் கடத்தாமல் ஆலய நிர்மாணத் திருப்பணியில் இறங்குமாறு பணித்து விட்டுச் சென்ருர்.

ஓர் நல்ல நாளில் அரசன் பரிவாரங்கள் புடைசூழ சபரி மலையை நோக்கி ஆலயத் திருப்பணிக்காகக் கிளம்பினுன். முதலில் எருமேலியை யடைந்து பகவானின் தோழனை வாபுரனுக்கு ஆலயம் கட்டிப் பிரதிஷ்டை செய்த பிறகு அழுதா நதி, அழுதா மேடு, கரிமலை, இவற்றைக் கடந்து பம்பா நதியையும் தாண்டி சபரிமலையை யடைந்தனர். மாலையும் மறைந்தது; இருள் சூழ்ந்தது. அனைவரும் உறக்கத்தில் ஆழ்ந்திருக்கும் நேரம், அரசன் மட்டும் விழிப்புடன் ஆலயத் திருப்பணி பற்றிய சிந்தனையிலாழ்ந்திருந்தான். அப்போது வாபுரன் மன்னவனைப் பொன்னம்பல தரிசனம் காணும் பொருட்டு அழைத்துச் சென்ருன். தங்கமயமான ஆலயத்தில் சத்தியமும் தர்மமும் வாயிற்படியைக் காத்துவர, நவரத்னகசிதமான சிம்மாசனத்தில் ஆலவட்டக் குடை பிடிக்க, சர்வாலங்கார பூஷிதனுய் எம்பெருமாள் லோக சக்ராதிபதியாகக் காட்சி தருவதைக் கண்ட மன்னன் மகிழ்ச்சிப் பெருக்குடன் கண்கள் குளமாகப் பகவானைப் பணிந்து வணங்கினுன். பேச நா எழாமல் நின்ருன்.

**பொன்னம்பல வாசனே! சரணம் ஐயப்பா!!**

மந்தஹாஸ வதனத்துடன் பகவான், 'மன்னு, எல்லாவற்றையும் துறந்து விட வேண்டும் என்று உபதேசித்த நான்

இவ்வளவு அலங்கார ஆடம்பரங்களோடு காட்சி தருகிறேனே என்று நினைக்கிறாயா? இது எனக்காக அல்ல! முனிவர்கள் விருப்பத்தால் மட்டும் அன்று. அன்றொரு நாள் குருகுல வாசத்தில் என்னிடம் மன ஈடுபாடு கொண்ட எனது குருநாதர் தங்கமயமான விதானத்தின் கீழ் நவரத்ன கசிதமான சிம்மா சனத்தில் அகில லோகாதிபதியாக நான் காட்சி தரவேண்டும் என்று ஆசைப்பட்டார். எனது குருநாதரது ஆசிகள் பொய்க் கக்கூடாதல்லவா? அந்த நோக்கத்தில் தான் நான் இப்படிக் காட்சி தருகிறேன்'' என்று கூறிப் புன்முறுவல் பூத்தான். பொன்னம்பல தரிசனத்தால் தன்னை மறந்திருந்த மன்னனுக் குத் தனது சுரிகாயுதத்தையும் கொடுந்து அருளினான். மன்னனும் தன் இருப்பிடம் திரும்பினான்.

மன்னனுக்குப் பரம்பொருளிடம் உள்ள பக்தியையும் பக்தனிடம் பகவான் காட்டும் ஈடுபாட்டையும் கண்டு தனது இந்திர பதவி பறி போய்விடுமோ என அஞ்சிய தேவேந்திரன் மன்னவனை ஒழிக்க எண்ணி ஓர் வேடுவன் போல வேடம் பூண்டு, ''எனது எல்லைக்குள் என் உத்தரவு இன்றி நுழைந்து மரங்களை யெல்லாம் வெட்டிய நீ யார்? இங்கே நுழைய உனக்கு ஏது உரிமை? உடனே இவ்விடம் விட்டு வெளியேறி விடு. இன்றேல் நீ அழிக்கப்படுவாய்'' என்று பயமுறுத் தினான். பாண்டியனும் சினந்து பதிலிறுக்க, இருவருக்கும் பலத்தசண்டை மூண்டது. இந்திரன் தனது வஜ்ராயுதத்தை ஏவ, மன்னன் சாஸ்தாவைத் தியானித்துச் சுரிகாயுதத்தைப் பிரயோகித்தான். சுரிகை அக்னிப் பிழப்பாக வஜ்ராயுதத்தை விழுங்கி இந்திரனைத் துரத்தியது. பயந்து நடுங்கிய இந்திரன் திரிமூர்த்திகளை ஒருவர் பின் ஒருவராகச் சரணடைந்தான் இந்த சுரிகாயுதத்தை அடக்கத் தங்களால் இயலாது என்று அவர்கள் கூறிவிட்டார்கள், பிறகு தர்ம சாஸ்தாவின் நினைவு இந்திரனுக்கு வரவே ஓடிச் சென்று தர்மசாஸ்தாவைச் சரண டைந்தான். இறைவனே ''அதை யான் அந்தப் பாண்டிய மன்னனுக்குக் கொடுத்துவிட்டேன். அதை அடக்கவோ ஆளவோ என்னால் இயலாது. ராஜனால்தான் முடியும். ஆகை

யால் அவனிடமே சரணடைவதுதான் நல்லது'' என்று கூற தேவேந்திரன் பாண்டிய மாமன்னனைப் பணிந்து மன்னிக்க வேண்டினான். மன்னனும் ஆயுதத்தைத் தன்னிடம் மீட்டுக் கொண்டு, தேவேந்திரனை மன்னித்தருளினான். நன்றிக் கடனாகத் தேவேந்திரன் தேவலோகச் சிற்பியான விஸ்வகர் மாவை ஆலய நிர்மாணத்துக்கு அனுப்பி வைப்பதாகக் கூறி மறைந்தான். அடியவர் மகிமையை அகிலமும் அறிந்திட இதுவும் ஐயன் நடத்திய திருவிளையாடலன்றோ?

**சாஸ்வத தெய்வமே ! சரணம் ஐயப்பா !!**

---

கார்த்திகை மாதம் முதல்நாளில் (பக்தர்கள் விரதம் ஏற்கும் தினம்) சபரிமலை தர்மசாஸ்தாவின் ஆலயத் திருப்பணி துவங்கியது. ஐயனது ஆலயம் அமைப்பதற்கான பிர தேசத்தைத்தான் ஐயன் தேர்ந்தெடுத்தான். ஆலயத்திற் கான இடத்தைத் தேர்ந்தெடுத்தது தேவலோகச் சிற்பியான விஸ்வகர்மாவாகும். ஆலயம் அமைக்கப்படும் விதத்தைப் பார்த்தால் அதில் என்றாவது தீப்பற்றிக் கொண்டுவிடும் என்று தோன்றியது. எனினும் 'அக்னியின் உபாதையால் கலி காலத்தில் ஏற்படும் தோஷங்களுக்குப் பிராயச்சித்தம் ஏற்படும். அதுவும் நல்லதே, என்று அசரீரி முழங்கவே ஆலயத் திருப்பணி தொடர்ந்தது.

சாஸ்தாவிற்கு எந்த வகையில் விக்கிரகம் அமைப்பது என்று மன்னன் எண்ணியபோது, பரசுராமர், ஓர் சிற்பியைப் போல் பலவித ரூபங்களில் சாஸ்தாவின் சிற்பங்களை எடுத்து வந்தார். இரு கால்களையும் குத்திட்டு இணைந்து யோக பட்டத்துடன் பந்தனம் செய்தவண்ணம், தத்வமஸி என்னும் சின் முத்திரையுடன் கூடிய பகவானின் திரு உருவமே ஏற்றது என்பதை ஆண்டவன் கட்டளைப்படி அறிந்திருந்த மன்னன், பரசுராமரைப் பணிந்து அதையே ப்ரதிஷ்டை செய்ய ஏற்பாடு

செய்தான். பரசுராமரும் தான் யார் என்பதை வெளிப்படுத்த, அனைவரும் அவரை வணங்கினார்கள். மார்கழி மாதம் கடைசி நாளில் திருப்பணிகளும் இனிதே முடிந்தன. மகர சங்கிரமண தினமான தை மாதப் பிறப்பு நன்னாளில் சனிவாரம், கிருஷ்ண பக்ஷம் பஞ்சமி திதி, உத்திர நக்ஷத்திரம் கூடிய சுப தினத்தில் பரசுராமர் ஸ்ரீ தர்ம சாஸ்தாவைப் பிரதிஷ்டை செய்ய, குலகுருவாம் அகத்தியர் துணையிருந்து பூஜா விதிகளைக் கிரமமாக நிறைவேற்றி வைக்க, வேதியர்கள் வேதகோஷம் முழங்க, தேவர்கள் மலர்மாரி சொரிய, மன்னனும் மந்திரி பிரதானிகளும் இதர பக்த ஜனங்களும் ஆனந்த பரவசத்துடன் கண்டு களித்தனர்.

ஐயப்பனைப் பிரதிஷ்டை செய்த பரசுராமர் பகவான் மணிகண்டன் கூறியது போலவே சபரிமலை, தக்ஷிண காசியையும், பம்பா நதி கங்கையையும் புண்ணியத்துவத்தில் நிகர்க்கும் என்று கூறினார். காந்தமலையிலிருந்து ஸ்ரீ பூதநாதன் ஜோதி ஸ்வரூபமாக எழுந்தருளி யோகி ஸ்வரூபமாகத் தன்னை பிரதிஷ்டை செய்து வழிபடுவதைக் கண்டு ஆசீர்வதித்தார். இன்றும் தைமாதம் மகர சங்கரமண தினத்தன்று பகவான் சபரி மலையில் யோகியாகவும், காந்த மலையிலிருந்து ஜோதியாகவும் காட்சிதந்தருளுகிறார். மஞ்ச மாதா முதலிய இதர தேவதைகள் அனைவருக்கும் கோயிலெடுத்துப் பிரதிஷ்டை செய்து முடித்தனர். சன்னிதானத்தில் பூஜைகள் நடைபெற வேண்டிய ஏற்பாடுகளைச் செய்துவிட்டு பரசுராமரின் ஆசிகளுடனும் அகத்திய முனிவரின் ஆசிகளுடனும் மன்னன் பந்தள நாடு திரும்பினான். சிறிது காலத்திற்குப் பிறகு இளவல் இராஜராஜனுக்கு முடிசூட்டி அரசுப் பொறுப்பை அவனிடம் ஒப்படைத்துவிட்டு, குலகுருவுடன் பம்பாதீரம் அடைந்து தாரகப் பிரம்மத்தைத் தியானித்து தவம் செய்து பந்தள ராஜரிஷி பரம்பொருளுடன் ஒன்று கலந்து சித்தியடைந்தான்.

மனோலயம் மகிழ்தரும் செல்வன் சத்ய
சபரிகிரி நாதனே! சரணம் ஐயப்பா !!

இவ்வாறு பாண்டிய ராஜனால் எழுப்பப்பட்ட கோயிலே ஐயன் வாழும் சபரிமலைக் கோயிலாகும். இன்றும் கண் கண்ட தெய்வமாய் பக்தர்களுக்கு அவரவர்கள் விரும்பிய வரங்கள் அளித்து மகிழ்விக்கும் வள்ளலாய்த் திகழ்கிறார். ஊனக் கண்களால் இறைவனைக் காண முடியாது என்று சொல்பவர் வாக்கு பொய்க்க, மகர சங்கரமண காலத்தில், இறைவனுடன் ஆத்மா கலக்கும்பொழுது உண்டாகும் பேரின்ப அனுபூதி நிலையைச் சற்றே நமக்கு அருள்கிறார். இந்த அனுபவம் அனுபூதிப் பெருங்கனலின் சிறுபொறியாகும். நம்முடைய முயற்சியுடன் இப்பொறியால் ஐம்பொறிகளை அவித்தால் ஞான மாகிய பெருங்கனல் மூண்டெழுந்து பிராரப்த வினைகளை எரிக்கும் தவம் செய்தவர்கள் ஆவோம்; ஜீவன் முக்தியை எங்கெங்கோ போய்த் தேடவேண்டாம். நம்முள்ளே நமது முயற்சியின் பயனாகவே முக்தியை இப்பிறவியிலேயே அனுபவிக்கலாம். இனிப்பிறவாத் தன்மை வந்தடைந்தால் அதுவே முக்தி நிலை. இம்மாய உடம்பு அழிந்த பிறகு சீவன் சிவத்துடன் கலந்து விடும்.

இந்த உண்மையை அறிந்து அன்பு கலந்த பக்தியோடு உன் புகழைத் தினந்தோறும் மறவாமல் பாடும் பணியே பணி யாய் அருள்வாய்! வேறொன்றும் யான்விரும்புகில்லேன். அறிந்தும் அறியாமலும் நான் செய்த பிழைகளை எல்லாம் பொறுத்துக் காத்து ரக்ஷித்து அருள்வாய்! சத்தியமான பொன்னு பதினெட்டாம் படிமேல் வாழும் என் சத்குருநாதன் சபரிமலை மேவும் ஐயன் ஐயப்ப சுவாமியே சரணம் ஐயப்பா!

துள்ளு மறியா மனது பலி கொடுத்தேன்,
கர்மதுட்ட தேவதைகள் இல்லை,
துரிய நிறை சாந்த தேவதையாம் உனக்கே
தொழும்பன்; அன்பு அபிஷேக நீர்,
உள்உறைஇல், என் ஆவி நைவேத்தியம்,
பிராணன், ஓங்குமதி, தூபதீபம்,
ஒரு காலமன்று, இது சதாகால பூஜையாய்
ஒப்புவித்தேன்; கருணைகூர்
தெள்ளியமறைவடியிட்ட அமுதப்
பிழம்பே! தெளிந்ததேனே! சீனியே!
திவ்ய ரசமியாவும் திரண்டு ஒழுகு
பாகே! தெவிட்டாத ஆனந்தமே!
கள்ளன் அறிவூடுமே மெள்ள மௌ
மௌனியாய்க் கலக்கவரு நல்ல உறவே!
பெருமை பெறுசபரிகிரி யோகத்
தமர்ந்த திரு கருணைகரக் கடவுளே!

சுவாமியே! சரணம் ஐயப்பா !!

# இரண்டாம் பாகம்

சச்சிதானந்த குருவே! சரணம் ஐயப்பா !!

---

கேரள தேசத்தைச் சமுத்திரத்திலிந்து அகழ்ந்து எடுத்த பரசுராமர், அந்தப் பிரதேசத்தைக் காக்கும் பொருட்டு, மேற்குக் கடற்கரை ஓரமாக தேவியையும், அதன் கிழக்கே உள்ள மலைப் பிரதேசத்தில் ஸ்ரீ தர்ம சாஸ்தாவையும் பிரதிஷ்டை செய்து, ஆலயங்கள் அமைத்தார். ஸ்ரீ தர்ம சாஸ்தாவின் ஆலயங்கள் பதினெட்டு ஆகும். அவற்றில் மிகவும் முக்கியத்துவ்ம் வாய்ந்தது சபரிமலை.

சபரிமலையில் சச்சிதானந்த குருவாய் விளங்கும் தாரகப் பிரம்மத்தைத் தரிசித்து முக்திபெற ஆண்டு தோறும் லட்சக் கணக்கான பக்தர்கள் சபரிமலை யாத்திரையில் ஈடுபட்டு வருகின்றனர். யாத்திரை துவங்கு முன் பக்தர்கள் சில முக்கியமான விரதங்களை அனுஷ்டிக்க வேண்டும். இந்த விரதங்களையும், மலைக்கு வரும் நெறிமுறைகளையும் பகவானே பந்தளத்து அரசன் இராஜசேகர பாண்டியனுக்கு ஆலய நிர்மாணத்தைப் பற்றி விளக்கும்போது திருவாய் மலர்ந்து அருளியுள்ளார்.

''என்னைக் காணவரும் பக்தன் குருமுகமாக மாலையணிந்து உபதேசம் பெற்று எனது முத்திரை தரித்து, தீவிர பிரம்மச்சரிய விரதம் அனுஷ்டித்து வரவேண்டும். புலால் உண்ணுதலை ஒழிக்க வேண்டும். சத்தியம், தர்மம், அஹிம்சை இவற்றைக் கடைப்பிடிக்கவேண்டும். என்னையே சதா நினைந்து, சகல சுக துக்கங்களையும் என்னிடமே சமர்ப்பித்துப் பற்றற்ற நிலையில் என்னைக் காண வரவேண்டும். இரு

முடியேந்தி, பதினெட்டு தத்துவங்களை விளக்கும் பதினெட்டுத் திருப்படிகளையும் கடந்து மகர சங்கரமணதினத்தன்று சபரி மலையில் யோகியாகவும், ஜோதியாகவும், ஒரே சமயத்தில் என்னை எவன் ஒருவன் தரிசிக்கின்றானோ அவன் சகல பாபங் களிலிருந்தும், ஜனன மரணக் கட்டிலிருந்தும் விடுபட்டு ஜீவன் முக்தன் ஆகின்றான்'' என்று பகவான் கூறி இருக்கிறார்.

வேறு எந்த ஆலயத்திற்குச் செல்வதற்கும் இப்படி சட்ட திட்டங்கள் இல்லையே! சபரிமலை யாத்திரைக்குமட்டும் இந்த விரதங்கள் தேவையா என்றால் 'ஆம்' என்றுதான் கூற வேண்டும்.

சபரிமலை யாத்திரை சாதாரணமாகச் சென்றுவரும் தேவாலய தரிசனம் போன்றதல்ல. இது சபரி சங்கமம் என்று போற்றப்படும் புனித யாத்திரையாகும். இதில் பங்குபெறும் பக்தர்கள் பகவானின் தரிசனத்திற்காக மட்டும் செல்லவில்லை. ஜீவாத்மாவையும் பரமாத்மாவையும் சங்கமமாக்கும் புனித நோக்கத்துடன் செல்கிறார்கள். வாழ்க்கை என்பதே ஒரு நீண்ட யாத்திரையாகும். வாழ்க்கையின் இலட்சியம் இறைவனுள் ஒடுங்குவதாகும். பிறந்து, உலகில் உழன்று, செய்திருக்கும் பாப கருமத்தால் மீண்டும் மீண்டும் பிறவி எடுக்கும் வழியை அழித்து இப்பிறவியே கடைசிப் பிறவி என்னும் நிலையை ஜீவன் அடையவேண்டும். ஜீவன் பரமாத்மாவில் ஒடுங்கும் வழி ஏதும் சொல்லப்பட்டு இருக்கிறதா? ஆம். இறைவனைக் கண்ட பெரியோர்கள் வகுத்துள்ள வழியே பக்தி மார்க்கமும் யோக மார்க்கமும் ஆகும். இந்நெறிமுறையில் வகுக்கப்பட்ட உள்முக (ஆன்மீக) யாத்திரையின் வெளிப் பிரதிபலிப்பே சபரிமலை யாத்திரை ஆகும்.

மனிதனுடைய சரீரத்திற்குள் மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநாஹதம், விசுத்தி, ஆக்ஞா, என்று ஆறு சக்கரங்கள் (ஷடாதாரங்கள்) ஸுஷும்ன நாடிக்குள் விளங்கி வருகின்றன. இந்த ஆறு சக்கரங்களும், முறையே பிருத்வி, அக்னி, ஜலம், வாயு, ஆகாசம், மனஸ் என்ற ஆறு தத்துவங்களாக வர்ணிக்கப்பட்டு இருக்கின்றன. இந்த ஆறு விதமான சக்கர ஸ்வரூபம்தான் ஸ்ரீ சக்கரம் என்பது. இவை இரண்டு இரண்டு சேர்ந்து ஓர் கண்டமாகச் சொல்லப்படும். ஒவ்வொரு கண்டத்தின் மேலும் ஓர் கிரந்தி (முடிச்சு) இருக்கிறது. இந்தக் கண்டங்கள், அக்னி சூரிய சந்திராத்மக மானவை. முதல் கண்டமாகிய அக்னி கண்டத்தில் மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம் இரண்டும் அடங்கியுள்ளன. அதன்மேல் இருக்கும் முடிச்சு ப்ரம்மக்ரந்தி எனப்படும். இது அக்னி ஸ்தானம். அதற்கடுத்த சூரிய கண்டத்தில் மணிபூரகமும் அநாஹதமும் அடங்கியுள்ளன. அதற்கு மேல் இருக்கும் முடிச்சு விஷ்ணுக்ரந்தி ஆகும். இது சூர்ய ஸ்தானம். இதற்கும் மேல் உள்ள சந்திர (ஸோம) கண்டத்தில், விசுத்தி, ஆக்ஞா இவையிரண்டும் அடங்குபவை. அதற்கு மேல் இருக்கும் முடிச்சு ருத்ரக்ரந்தி என்று பெயர்படும். இது ஸோமஸ்தானம் இவையனைத்துக்கும் மேலாக ஸஹஸ்ரகமலம், த்வாதசாந்தம். பிரம்மரந்திரம் என்று பலவிதமாகச் சொல்லப்படும் ஆயிரம் தளமுள்ள தாமரை மலர்போல் விளங்கிவரும் மகா சக்கரம் இருக்கிறது.

மூலாதாரத்தில் தேவி, குண்டலினி சக்தி என்ற பெயருடன் சர்ப்பம் போல குண்டலம் போட்டுக்கொண்டு உறங்குகிருள், இராஜ யோகிகள் பத்மாஸனத்தின் மீது இருந்து யோகாப் பியாசத்தால் தேவியைத் தியானிக்க, குண்டலினி சக்தி விழித்தெழுந்து மேலே கூறிய ஆறு சக்கரங்கள், மூன்று கண்டங்கள், மூன்று க்ரந்திகள் ஆக பன்னிரெண்டு ஸ்தானங்களையும்

பேதித்துக்கொண்டு இவற்றின் முடிவில் துரீய கண்டத்தி லிருக்கும் ஸஹஸ்ர கமலத்தில் சிவசக்தி ரூபியாய், ஜோதி பிழம்பென தரிசனம் தருகிருள். அந்த யோகியும் ஜோதியில் கலந்து இவ்வுலக விவகாரங்களுக்கு அப்பாற்பட்ட சமாதி நிலே எய்துகிருன்.

இது ராஜ யோகிகளின் பாதை. குடும்பத்தைத் துறந்து, பற்று சிறிதும் இல்லாத நிலேயில், கடுமையான தவம் இருந்து, தியான நிலேயினின்றும் சிறிதும் வழுவாமல் ஐம்புலன்களே அடக்கி வென்று, தனது யோக மார்க்கத்தில் எதிர்ப்படும் சித்திகளே எல்லாம் புறக்கணித்துவிட்டு முன்னேறும் யோகிகளே தங்கள் ஆன்மீக யாத்திரையின் இலட்சியத்தை அடைகிருர்கள்.

மாயையின் பிடியில் அகப்பட்டு, சம்சார பந்தங்களிலிருந்து விடுபட வழியறியாமல் தினமும் உழன்று கொண்டிருக்கும் அற்ப மானிடப் பிறவிகளான நமக்கு மேற்கூறிய யோக மார்க்கத்தில் செல்வது கனவிலும் எட்டாத காரியமாகும், ஆகையால்தான் யோக மார்க்கத்தை அடிப்படையாகக் கொண்டு பக்தி மார்க்கத்தில் பின்னப்பட்டிருக்கும் சபரிமலே யாத்திரையில் பங்கு பெறும் பக்தர்கள், படிப்படியாகத் தங்கள் கரும விஃனகளே யொழித்து ஜீவாத்மாவை பரமாத்மாவுடன் இணேக்கும் மகா நிர்வாண நிலேயை அடையும் தகுதி பெறு கிருர்கள்.

நமது தேகத்திலிருக்கும் ஷடாதாரங்களுக்கு ஏற்ப ஐயனது ஆலயங்கள் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது. இப்புவியில், குளத்துப்புழை மூலாதாரத்தையும். ஆரியங்காவு ஸ்வாதிஷ்டானத்தையும், அச்சன்கோவில் மணிபூரகத்தையும், சொரிமுத்தையன் கோவில் அநாஹதத் தையும், சபரிமலே (புருவ) ப்ருமத்ய பீடத்தையும், காந்தமலே ஸஹஸ்ராரத்தையும் குறிக்கின்றன. புருவமத்தியில் இருக்கும் பீடம் ஸத்குருவின் ஸ்தானமாகும். அதனுல் தான் சபரிகிரி வாஸனே ''ஸத்குரு நாதனே'' என்று அழைக்கிருேம். விரத

அனுஷ்டானங்களைக் கருத்துடன் பூர்த்தி செய்து, சபரி மலையை அடைந்து, அஷ்டராகங்கள், முக்குணங்கள், பஞ்ச இந்திரியங்கள், வித்யை, அவித்யை, ஆகிய பதினெட்டு தத்துவங்களையும், பதினெட்டுப் படிகளாகக் கடந்து, பரப்பிரம்மத்தின் வாயிற் காவலராக விளங்கும் சத்ய, தர்ம தேவதைகளைப் போற்றித் துதித்து, ஸத்குருநாதனின் தரிசனம் கண்டு ஆனந்த புள்கிதமடைகிறோம். நிர்க்குணனாக ஜீவாத் மாவைப் பரமாத்வாவிடம் ஐக்கியப்படுத்தும் பொழுது ஏற்படும் ஆத்ம சைதன்ய ஜோதி இருக்கிறதே, அந்த ஜோதியைத்தான் ஸஹஸ்ரகமலம் என்னும் மகா சக்கரத்திற்கு ஈடான காந்த மலையில் ஜோதி ஸ்வருபமாகக் கண்டுகளிக்கிறான் பக்தன்! பிறவி பெற்ற பெரும் பேறடைந்து, பிறவிப் பிணி நீங்கும் வழி உணர்ந்து திரும்பி வருகிறான்.

நித்ய பிரம்மசாரியே ! சரணம் ஐயப்பா !!

---

யானை முகன் தம்பியும், பன்னிருகையன் சோதரனும் ஆன தர்மசாஸ்தாவாம் சபரிகிரீசன் ஐயப்பனை தரிசனம் செய்யும் ஆவல் கொழுந்து விட்டு எரிய ஆரம்பிக்கிறது. கார்த்திகை முதல்நாள் என்று வரும் என்று ஆவலுடன் நாட்கணக்கை எண்ணிக் கொண்டு இருக்கிறோம். அன்று தான் சபரிமலை யாத்திரைக்காக விரதமேற்கும்நாள். அதற் கான மாலை தரிக்கும் நாள்.

அன்று விநாயகரையும், தேவியையும், ஐயப்பனையும் வணங்கித் துதித்து, ஸத்குருவை யணுகி அவர் மூலமோ அல்லது பெற்றோர் மூலமோ மாலை தரித்துக் கொள்ள வேண்டும். பெற்றோர்களோ, குருவோ அருகில் இல்லாதவர்கள் அருகிலிருக்கும் கோவிலுக்குச் சென்று அர்ச்சகர் மூலம் மாலை தரித்துக் கொள்ளலாம்.

கார்த்திகை மாதம் முதல் தேதியன்று சபரிமலையில் பகவான் குடிகொள்வதற்கான தேவலாய நிர்மாணப் பணி துவங்கியது. அதைக் கருத்தில் கொண்டுதான், கார்த்திகை மாதம் முதல் தேதி மாலை தரிக்கும் வழக்கம் இருந்து வருகிறது. எனினும் முதல் ஏழு நாட்களுக்குள் மாலை தரிக்க நாள் பார்க்க வேண்டிய அவதியம் இல்லை என்று கற்றறிந்த பெரியோர்கள் கூறுகின்றனர்.

துளசிமணி மார்பனே! சரணம் ஐயப்பா !!

பகவானுக்கு மிகவும் பிடித்தது துளசி மாலை. தாமரை மணி, உருத்திராட்சம், ஸ்படிகம், இவற்றில் ஏதேனுமொன்ருல் ஆகியமாலையையும் தரித்துக் கொள்ளலாம். முருகவேளிடம் சிவாம்சங்கள் மிகுந்திருப்பதாகவும், தர்ம சாஸ்தாவிடம் விஷ்ணு அம்சங்கள் அதிகமாக இருப்பதாகவும் கூறப்படுகிறது. விஷ்ணுவிற்கு துளசி மிகவும் பிடித்தமான பத்திரமாகும். ஆகையால் அவரது அம்சங்கள் மிகுந்து இருக்கும் ஐயப்பனுக்கும் துளசி மணி மாலையே விசேஷமாகக் கூறப்படுகிறது. மாலைக்குப் பூஜை செய்து, காப்புத் தெய்வங்களாம் ருத்ர கணங்களை மாலையில் ஆவாஹனம் செய்து மாலையை நம்மை காப்பாற்றும் இரட்சகனுகவே பாவித்து அணிந்து பக்தியுடன், ஐயனே! உன் சந்நிதி வரவிழைந்தேன்; விரதமேற்றேன். வழுவாது விரதம் காத்து உன் தரிசனம் கிடைக்க அருள வேண்டும்'' என்று வேண்டிக் கொள்கிருேம். ஆண்டவன் அருளைப் பெறுவதற்கு ஓர் வழி காட்டி வேண்டும். வழிகாட்டியின் உதவி இன்றி அவனை அணுக முடியாது. ஆண்டவனுக்கும் அடியாருக்கும் இடையில் பாலமாக அமைந்து அவன் அருளை விரைவில் கிட்ட வழிவகுப்பவரே குருவெனப்படுவார். இவ்வாறு குருவினுடைய ஆக்கிணையின் பேரிலும் அவர் தம் அருளுடனும் மாலை தரித்துக் கொண்ட பிறகே நாம் விரதம் காத்து யாத்திரை தொடங்குவதற்கு அருகதை உள்ளவர்களாக ஆகிருேம்.

முத்திரையைத் தரித்தவர்கள் மலேக்குச் சென்று திரும்பும் வரையில் அதைக் கழற்றவே கூடாது. ஏதும் தீண்டல் காலம் போன்ற அசந்தர்ப்பம் நேர்ந்தால் குருநாதரின் உத்திரவுப்படி மாலையைக் கழற்றிவிட வேண்டும். மாலையைத் தரித்துக் கொள்ளும் போது ருத்ர கண்களில் ஒன்று நமது ரக்ஷகனுக மாலேயில் குடிகொள்கிறது. தீண்டல் காலங்களில் மாலையைக் கழற்ருமல் இருந்தால் மாலேயில் ஆவிர்பாகம் ஆகி இருக்கும் ருத்ர கணத்தை அசுத்தப்படுத்துவதை ஒக்கும். இதைத் தவிர்ப்பதற்காகவே அசம்பாவிதமான சூழ்நிலேயில் மாலையைக் கழற்றிவிடவேண்டும். இவ்வாறு மாலையைச் கழற்றியவர்கள் மீண்டும் மாலே தரித்து அவ்வருடமே மலேக்குச் செல்வது பற்றித் தங்கள் குருநாதரிடம் கேட்டுத் தெரிந்து அதற்கேற்ப நடந்து கொள்ளவேண்டும்.

பக்தர்கள் அணியும் மாலே பகவானின் முத்திரைக்குச் சமம். முத்திரையணிந்த பக்தர்கள் மீது பகவான் எழுந்தருளி இருக்கிருர் என்றே கருதப்படுகிறது. அதனுல் தான் முத்திரை தரித்தவர்கள் ஒருவருக்கொருவர் கூப்பிட்டுக் கொள்ளும் பொழுது மற்றவரைத் தெய்வமாக நினேத்து ‘ஐயப்பா’ என்று அழைக்கின்றனர். உள்ளத்தில் ஐயன் உருவத்தைப் பதித்த வர்களே, ஐயப்பா என்று கூப்பிடலாமே!

முதல் தடவையாக மலேக்குச் செல்பவரைக் ‘கன்னி ஐயப்பன்’ என்று அழைக்கிருேம். கணவனது கைத்தலம் பற்றும்வரை மகள் கன்னிதானே! அதே போன்று இறையருளே முதற்கண் நுகர்வதற்கு விழைந்தோர், நுகர்தலே அனுபவித் தறியா நிலேயைக் கன்னியென்றே அழைப்பதும் பொருத்த மன்ருே?

கன்னி ஐயப்ப அன்பர்கள் விரதங்களேப் பற்றியும், தாங்கள் செய்ய வேண்டிய காரியங்களேப் பற்றியும், மாலே யிடும் குருவை அணுகி விசாரித்துத் தெரிந்து கொள்ள வேண்டும்.

நமக்கு யாத்திரை முடியும்வரை அவரைப் பலமுறை சந்தித்து, காக்க வேண்டிய நோன்பினைப் பற்றியும் அதன் பயனையும் தெரிந்து கொள்ளவேண்டும். அச்சத்தினாலோ அல்லது கூச்சத்தினாலோ நமது சந்தேகங்களைத் தெளிவு படுத்திக்கொள்ளாமல் இருக்கக் கூடாது. குருவிற்கு நமது தகுதியின்மை நன்கு தெரியும். ஆதலால் இரக்கத்துடன் கருணை பாலித்து நம் தகுதியின்மையை நீக்க முயலுவார். நாம் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்களை ஆவலுடன் கேட்டால் அவர் மனதில் மிகுந்த சந்தோஷம் அடைவார்; நாம் என்றென்றும் நினைவு வைத்துக் கொள்ளுமாறு தத்துவ விளக்கங்களைக் குழந்தைக்கும் புரியும் வண்ணம் விளக்கிக் கூறுவார். நல்ல குருவை அடைவிக்கச் செய்த நம் வினைப் பயனை வாழ்த்தி, அவரது உபதேசங்களால் நாம் உய்யும் மார்க்கத்தைநாடிக் கண்டு கொள்ளலாம்.

இனி மலைக்குச் செல்லும் பக்தன் ஓர் ஐயப்பன். அவன் காண்பது எல்லாம் ஐயப்பன் மயம். ஸ்தாவர, ஜங்கம ஜீவராசிகள் அனைத்தும் அவனுக்கு ஐயப்பன் வசிக்கும் கோயில்களாகவும், நடமாடும் ஐயப்பனின் வடிவங்களாகவும் தென்படும். 'சர்வம் பிரம்ம மயம் ஜகத்' என்னும் சீரிய கொள்கையையுணர்ந்து செயல்படும் நிலை அவனுக்குக் கிடைக்கிறது. எல்லா ஜீவன்களிலும் அவனுக்கு ஐயப்பனே தென்படுவதால், ஜீவ ஹிம்ஸையை ஒழித்து அஹிம்ஸா மார்க்கத்தைப் பின்பற்றுகிறான்.

கார்த்திகை மாதம் முதல் நாளில் மாலைபூண்டு விரத மேற்றவர்கள் மார்கழி மாதம் கடைசி நாள் வரையுள்ள இரண்டு மாத காலங்கள் தொடர்ச்சியாக விரதம் அனுஷ்டிக்கின்றனர். இதன் காரணம் என்ன? முன்பே கூறியபடி பந்தள மன்னன் சபரிமலையில் ஐயனின் கோயில் கட்டுவதற்குத் துவங்கிய நாள் கார்த்திகை முதல் தேதியாகும். கோயில் திருப்பணி முடிந்து பரசுராமரால் செய்யப்பட்ட விக்கிரகத்தைத்

தன் கரங்களால் அவரே பிரதிஷ்டை செய்த தினம் மார்கழி மாதம் கடைசி நாள். இவ்விரு தேதிகட்கும் உள்ளிட்ட நாட்களையே விரதம் அனுஷ்டிக்க உகந்த நாட்களாகப் பெரியோர் வகுத்துள்ளனர். விரதாதிகளின் முக்கிய நோக்கம் நம் தேகத்தினுள்ளிருக்கும் நாடிகளும், மனமும் சுத்தி அடைய வேண்டும் என்பது தான்.

சாதகன் கடைப்பிடிக்க வேண்டிய தலையாய விரதம் பிரம்மச்சரிய விரதம், அதாவது, புலனடக்கம் ஆகும். உடல் தூய்மையுடன் உள்ளத் தூய்மையையும் பகவான் எதிர்பார்க்கிருர்; மனத்தாலும், சொல்லாலும், செயலாலும் பெண்பாலோரைப் பற்றிய சிந்தனையே இல்லாத நிலையே பிரம்மச்சரியமாகும். எந்தப் பெண்ணைக் கண்டும் மனதில் கபட எண்ணமோ, சற்றேனும் சபலமோ, சஞ்சலமோ கொள்ளாமல் அனைவரையும் தாய்மார்களாய், உடன் பிறந்த சகோதரிகளாய், ஆதிபராசக்தியின் நடமாடும் ஸ்வரூபங்களாய் எண்ணுவதே உண்மையான, தூய்மையான பிரம்மச்சரிய விரதத்தின் தன்மையாகும். இதன் மூலம் பெண்ணென்னும் மாயையை வெல்லுவதற்கான வழி புலனுகிறது. இந்திரிய நிக்கிரஹத்தின் மூலம் உடலில் தனிச்சக்தி பெருகிறது. இன்று பளபளப்புடன் இருந்து நாளை மங்கி மறுநாள் அழிந்து போகும் சரீரங்களின் மீதுள்ள ஆசையை அழிப்பதற்குப் பிரம்மச்சரிய விரதம் ஓர் இணையற்ற சாதனமாகும். பகவானும் சபரிமலையில் பிரம்மச்சாரியாக அமர்ந்திருப்பது இவண் குறிப்பிடத்தக்கது.

உணவு, விரதம் எடுத்துக் கொள்பவர்களின் விசேஷ கவனத்திற்கும், கட்டுபாட்டிற்கும் உரியது.

சோற்றிலே விருப்பஞ் சூழ்ந்திடில் ஒருவன் நுன்னு
நற்றவ மெலாஞ் சுருங்கி
ஆற்றிலே கரைத்த புளியெனப் போமென்று
அறிஞர்கள் உரைத்திடல் போற்றிலேன்! உன்னைப்

போற்றிலேன்! சுவையில் பொருந்திய நற்
காரசாரஞ்சேர்ந்த நற்
சாற்றிலே கலந்த சோற்றிலே ஆசை தங்கினேன்
என் செய்வேன் எந்தாய்?

என்று ஸ்ரீராமலிங்க சுவாமிகள் கூறியபடி 'இரை'யின் மீது வைக்கும் அன்பை ''இறை''யின் மீது வைக்க வேண்டுமென்பது ஐயப்ப சித்தாந்தம். தன்னையடக்க முடிந்தவனுக்கு எதிலும் தடையில்லை. அந்தப் பக்குவநிலையை அடையாத நாம் ஓர் சில கட்டுப்பாடுகளைக் கடைப்பிடித்தேயாக வேண்டும். உணவு மனிதனது தராதரத்தைத் தீர்மானிக்கும் முக்கிய அம்சமாகும். நல்ல உணவு வகைகளால் நல்ல இரத்தம் பெருகுவது போல், சாத்விக உணவு சாந்தத்தை வளர்க்கும். சொல்லிலும் ருசியிலும் நாவையடக்க வேண்டும். சத்வ உணவு மனிதனின் சத்வ குணத்தை விருத்தியடையச் செய்து இரஜோ, தமோ குணங்களைப் பலவீனப்படுத்தி புலனுணர்ச்சிகளை அடக்கி ஆளும் சக்தியைத் தருகின்றது. உடல் இச்சைகளைத் தூண்டி விடும் உணவு வகைகளை ஒதுக்குதல் பிரம்மச்சரிய விரதத்தைச் சீரிய முறையில் அனுஷ்டிக்கப் பெருமளவு உதவி செய்யும். மிருக இசையைத் தூண்டி விடுவதாலும், அஹிம்ஸையின் கண்ணோட்டத்திலும் புலால் உண்ணுவதை அறவே விலக்குவது மிகவும் அவசியம்.

பசித்துப் புசித்தலும், உயிர் வாழ உடல் இயங்கும் அளவிற்கு மட்டும் புசித்தலுமே சாலச் சிறந்ததாகும். குறைந்த அளவு உணவு உட்கொள்ளுவதால் வயிற்று உறுப்புக்கள் சம்பந்தமான பல வியாதிகள் வராமல் உடல் ஆரோக்கியத்துடன் செயல்படும். நோன்பிருக்கும் நாட்களில் ''ஒரு பொழுது உணவு'' என்னும் பழக்கம் பெரியோர்களால் மேற்கொள்ளப் பட்டதற்கு இவையே காரணமாகும். அதனால்தான் அவர்கள் நீண்ட காலம் வாழ முடிந்தது.

தற்காலத்தில் சத்வ உணவு மட்டும் உட்கொள்ளுவோர் மிகவும் குறைவு. புளி, மிளகாய்போன்ற பதார்த்தங்களை விலக்குவது இயலாத நிலையில், நோன்பிருக்கும் இரண்டு மாத காலத்தை மூன்று மாதங்களாக மேலும் அதிகப்படுத்திக் கொள்வது தேவையாகிறது. பால், பழம், உப்பிட்ட கீரை போன்ற சத்வ உணவு உண்பவர்க்கு இரண்டு மாத விரதகாலம் போதுமானது. ஆனால் பலருக்கு இது இயலாது. எனவே மூன்று மாதகாலமாவது பகவான் பெயரைச் சொல்லி நோன்பு இருத்தல் சிறப்புடைத்து.

மாலையணிந்த நாள் முதலேயே ஒவ்வொரு பக்தனும் பொது நிகழ்ச்சிகளிலிருந்து ஒதுங்கி நின்று, பகவானது நினைவையே மனதில் கொண்டு, ஓர் வரையறுக்கப்பட்ட வாழ்க்கை முறையை மேற்கொள்ளுகிறான். கேளிக்கைகளில் பங்கு கொள்வதும் அவற்றைக் கண்டு களிப்பதும், மதிமயக்கும் மதுவகைகளையும், ஏனைய லாகிரி வஸ்துக்களையும் உபயோகிப்பதும் நல்லதல்ல. ஏனெனில் நமது நோக்கம் மதிமயங்கிச் சிற்றின்பங்களிலேயே உழல்வது அல்ல. வற்றாத பேரின்பமாகிய பரம்பொருளை நோக்கி முன்னேறும்போது சிற்றின்பங்களை ஒழிப்பது இன்றியமையாதது.

மாலை தரித்த நாள் முதல் இருபொழுதும் ஸ்நானம் செய்து, உள்ள சுத்தியுடனும் உடல் சுத்தியுடனும் பகவானை ஆராதிக்க வேண்டும். தெரிந்த தோத்திரங்கள், பாடல்கள், ஜபங்கள் பூஜை முதலியன அவரவர் இஷ்டப்படி செய்யலாம். ஐயப்பன் பூஜை இஷ்ட பூஜைதான். தூய்மையான எண்ணங்களை மலர்களாகப் பகவானுக்குச் சூட்டி ஞான ஒளி சுடர் விடுவதற்காக விளக்கேற்றி வைத்து, எடுத்த கருமங்கள் கனிந்து வர வேண்டும் என்ற பிரார்த்தனையுடன் கனிகளைச் சமர்ப்பித்து, பிராரப்த கருமவினைகளும் இகவாழ்வின் கஷ்டங்களும் கற்பூரம் போல மீதியில்லாமல் எரிந்து அழியட்டும் என்று குறிக்கும் வண்ணம் கற்பூரம் காட்டியும் நாம் பூஜைகள் செய்கிறோம். பூஜா விதி தெரியாதவர்கள் கூட 'ஸ்வாமியே சரணம் ஐயப்பா'

என்ற தாரக நாமத்தை மட்டும் ஜபித்து வந்தால் கடைத்தேறி விடுவார்கள். அந்தச் சரணங்களில் பகவான் மனம் கனிந்து விடுகிருர் ஆகையால் 'ஸ்வாமியே சரணம்! ஐயப்பா சரணம்!!' என்று நெக்குருகிக் கூப்பிடவேண்டும். பல பக்தர்கள் பூஜா காலத்தில் நீண்ட நேரம் சரணத்தை நீட்டிக் கூறுவார்கள். ஏனென்ருல் நீண்ட நேரம் கூறும் சரணங்கள் மூலம் பிராணன் ஊர்த்வ கதியாக மேல் நிலேக்கு எழுப்புவதற்குச் சாதகமாகிறது. நமது லக்ஷியமும் பிராணனை ஜீவனே மேலே உயர்த்துவ தற்குத்தானே! ஆனல் நடக்கும் போதும் மலேயேற்றத்தின் போதும் இவ்வாறு நீண்ட நேர சரணங்கள் கூறலாகாது. ஏனெனில் அது உடல் நிலேயைப் பாதிக்கும். அப்போது குறுகிய நேர சரணங்களேயே கூறுவதுதான் நல்லது.

பகவான் விசேஷமான பூஜைகளேயும் பண விரயம் செய்து நடத்தும் நிவேதனங்களேயும் மட்டுமே கண்டு மகிழ்பவர் அல்லர். ஆத்ம சுத்தியையே அவர் பெரிதாக விரும்புகிருர். எளிதில் கிடைக்கும் துளசி பத்திரங்களும், சிறிதளவு பானகமும், கற்பூரமும் இருந்தாலே அவர் திருப்தியடைந்து விடுகிருர். அதனல் தான் ஐயப்பனே 'ஏழை பங்காளனே' என்று அழைக்கிருேம்.

அந்தணர் குலத்தில் பிறந்தவர்கள் சந்தியாவந்தனங்களே, முக்கியமாக காயத்ரீ ஜபத்தை விடாது செய்யவேண்டும். இந்த நித்ய கர்மானுஷ்டானங்களே மறந்து எவ்வளவு பூஜைகள் செய் தாலும், எவ்வளவு க்ஷேத்திரங்களேத் தரிசித்து வந்தாலும் அவனுக்கு எள்ளளவு பலன்கூட கிட்டாது. இது, தாயை வீட்டில் பசியால் வாடச் செய்துவிட்டு, ஊராருக்கு அன்ன தானம் செய்வதற்கு ஒப்பாகும். மூன்று வேதங்களின் சார மாவது காயத்ரீ மந்திரம். அதற்கு ஈடான மந்திரமே உலகில் வேறு எதுவுமில்லே. இடைவிடாமல் காயத்ரீ ஜபம் செய்து வருபவனுக்கு எங்கு சென்ருலும் பயம் இல்லே; எந்த நேரத் திலும் உணர்ச்சி வசப்பட்டுத் துள்ளுவது இல்லே; எல்லாத் தீய சக்திகளேயும் கட்டுப்படுத்தி அமைதியையும், ஆனந்தத்தையும்

மங்களகரமான பலன்களையும் தரும் அபார சக்தி வாய்ந்த மந்திரம் காயத்ரீ. அதைப் புறக்கணிப்பவனுக்குப் புகலிடமே இல்லை எனலாம்.

இக்காலங்களில் அநேக பொது இடங்களில் பகவத் விஷய மான பிரசங்கங்கள், ஐயப்ப சகோதரர்களின் கூட்டு பூஜை முதலியன நடைபெறுகின்றன. இவற்றுக்குத் தவருது சென்று பயன் அடையவேண்டும். ஒருபோதும் பகவானை மறவாது அவர்களைப் பின்பற்றி நடப்பதற்குத்தான் பகவானின் பூஜை களில் கலந்து கொள்வது. தினசரி, பக்கத்தில் உள்ள கோவில், எந்த கோவிலானுலும் சரி, சென்று சுவாமி தரிசனம் செய்வதும் சத்சங்கத்தில் ஈடுபாடு கொள்வதும் நல்லது. கீழ்மையான எண்ணங்கள் சூழ்ந்த உலகில் நடமாடும் நம்முடைய மனதில் படியும் அசுத்தங்களைக் கழுவிக்களையும் பொறுப்பும் சக்தியும் நல்ல ஆத்மாக்களுக்கு உண்டு. அதனுல்தான் அறிவில் முதிர்ந்த பெரியோர் இருக்கும் சத்சங்கத்தில் கலந்து கொள்ள வேண்டும். 'அல்லவை தேய அறம் பெருகும் நல்லவை நாடி இனிய சொலின்' என்பது தெய்வப்புலவர் திருவள்ளுவர் வாக்கு.

கர்மம் செய்வது மனிதனின் கடமை. ஆயினும் பலன் கருதாத நிஷ்காம்யமாகக் கர்மங்களைச் செய்யவேண்டும். அவை எங்கும் நிறைந்த அகண்டபரி பூரணத்தைச் சுலபமாக அடை விக்கும் வழிகளாகும். பலனை இச்சியாமல் ஈச்வர அர்ப்பண மாகவே தன் கருமங்களை வழுவாதுசெய்து வருவதும், பிறருக்குத் தம்மால் துன்பம் நேராது நடத்தலும், சுய தேவை களைத் தானே பூர்த்தி செய்து கொள்வதும், மற்றவர்க்குத் தம்மால் இயன்ற அளவு உதவி செய்வதும், சுயநலத்தை அறவே அழித்துப் பிறர் நலம் பேணலும், ஆடை விஷயத் திலும், சிகை மற்றும் இதர அலங்காரங்களிலும் விசேஷ கவனம் செலுத்தாமல் இருப்பதும், பித்தனுயின்றி சித்தனுய் வாழ வழி வகுக்கும் கர்மயோகியின் லக்ஷணங்களாகும். இவற்றைப் பின்பற்றுவது அவசியமான தொன்ருகும்.

நீலம், கறுப்பு, காவி ஆகிய நிறங்களில் ஐயப்ப பக்தர்கள் உடையணிகிறார்கள். பகவானை நீலமேகச் ஸ்யாமள வர்ணன் என்று வர்ணிக்கிறோம். பகவான் நீல நிறத்தில் உடையணிந் திருக்கிறார். ஆகையால் தங்களைப் பகவானுடன் ஐக்கியப் படுத்திக் கொண்டதை வெளிப்படுத்தும் வகையில் நீல ஆடை அணிகிறார்கள். சனீஸ்வரன் கரிய நிறமுடையவர். சனி தோஷத்திற்கு ஆளாகியிருப்பவர்கள் தங்களது கஷ்டங்களி லிருந்து விடுவிக்கவேண்டும் என்று அவரைப் பிரார்த்திக் கிறார்கள். அப்படி உபாஸிப்பவர்கள் சனி பகவானைப் பன்னிரு நாமங்களால் துதித்து மகிழ்விக்கிறார்கள். அவற்றின் கடைசி இரு நாமங்களில் சனிபகவானின் கரிய வண்ணம் பற்றியும் அவரது நீலநிற வஸ்திரத்தைப் பற்றியும் குறிப்பிடப்பட்டிருக் கிறது. சனி தோஷம் அகல சாஸ்தாவைத் துதிக்கும் பூஜைகள் விதிக்கப்பட்டுள்ளன. எனவே சனி தோஷம் நீங்க சாஸ்தாவைத் துதிக்கும் முகமாகக் கறுப்பு உடை அணிகின்றனர். பற்றற்ற நிலையில் சன்னியாசிகளைப் போல சபரிமலை யாத்திரை மேற் கொள்வதாகக் கருதும் பக்தர்கள் அவர்களைப் போலவே காவி யுடை உடுத்துகின்றனர். தங்களைப் பற்றியோ தங்களது யாத்திரை பற்றியோ வெளிக்காட்டிக் கொள்ளாத அடக்கத் துடன் நிர்க்குணனைகப் பகவானைத் தியானித்துச் செல்பவர்கள் வெண்ணிற ஆடை அணிகிறார்கள். இப்படி ஒவ்வொரு சிறு விஷயத்திலும் கூட பக்தர்கள் தங்களைப் பரப்பிரம்மத்துடன் ஐக்கியப் படுத்திக் கொள்வதில் கருத்தைச் செலுத்துவது, ஐயப்ப பக்தர்கள் எந்த அளவிற்கு பகவானிடம் ஈடுபாடு கொள் கிறார்கள் என்பதற்கு ஓர் எடுத்துக் காட்டாகும்.

வீட்டுக்கு விலக்காயுள்ள பெண்களின் அருகில் செல்லாது இருத்தல் நலம், மாதவிடாயின்போது வெளிப்படும் போக்கு ஆடவரின் உடல் நலனைப் பாதிக்கும் ஒருவித விஷத்தன்மை

வாய்ந்ததாக இருக்கிறது. இது காற்றில் கலந்து பரவி சுவாசிக்கும்போது, அகவொளி பெருகுவதற்குக் காரணமான பரிணமங்களை அழித்து விடுகிறது. தூய புலன் அடக்கத்தால் ஏற்படும் அனுகூலங்கள், விடாய்ப் போக்கின் நச்சுகலந்த காற்றைச் சுவாசிப்பதால் அழிந்து விடுகின்றன. அதன் பொருட்டே வீட்டு விலக்கான பெண்களின் அருகில் செல்லக் கூடாது என்று தடை செய்யப்பட்டிருக்கிறது.

இது காரணம் பற்றியே பூப்படைந்த மடந்தையர் சபரிமலை யாத்திரையில் பங்கு கொள்ளக்கூடாது என்று விதிக்கப்பட்டிருக்கிறது. எனினும் பெண்மை மலரா நிலையில் இருக்கும் பத்து வயதிற்குட்பட்ட பெண் குழந்தைகளும், மாதப்போக்கு நின்று ஏழு ஆண்டுகள் பூர்த்தியானபின் தாய்மார்களும் இந்த யாத்திரையில் கலந்து கொள்ள அனுமதிக்கப்படுகின்றனர். பெண்மைக் கோலத்தில் இருந்தபோதும், காலப்போக்கில் சன்னியாச ஆச்ரமத்தைப் பின்பற்றுவதற்கான தகுதி இத் தாய்மார்கள் இருப்பதால் யாத்திரையில் கலந்துகொள்ள அனுமதிக்கப்படுகிறார்கள்.

இவ்வாறு வீட்டுக்கு விலக்கான பெண்டிர் அருகில் செல்லக் கூடாது என்பது சந்தடியும் இடநெருக்கடியும் நிறைந்த நகரங்களில் வாழும் பெரும்பான்மையோருக்கு ஒரு சாத்தியமுமற்ற வழியெனத் தோன்றலாம். இந்த நச்சை முறிக்கும் சக்தி வாய்ந்த மருந்து இல்லாமல் போகவில்லை. முறைப்படி தயாரித்து இறைவனுக்கு அர்ப்பணிக்கப்பட்ட பஞ்சகவ்யம் (பசுவின் சாணம், சிறுநீர், நெய், தயிர், பால், இவற்றால் தயாரிக்கப்படுவது) இவ்விஷத்திற்கு முறிவு ஆகும். அதுவும் இல்லையெனில் ஆயுர்வேத மருந்து சாலைகளில் கிடைக்கும் பஞ்ச கவ்ய கிருதத்தை உட்கொள்ளலாம்.

இவையும் நீங்கலாக, சுகபோகத்தை நினைவுபடுத்தும் மெத்தை, தலையணை இவற்றை ஒதுக்குவதும் பாதரக்ஷைகளை

முடிந்த அளவு அணியாமல் தவிர்ப்பதும் நாம் மலை யாத்திரையின்போது கல்லும் முள்ளும் நிறைந்த பாதையில் வெறும் பாதங்களுடன் நடப்பதற்கும், வேரும் கல்லும் நிறைந்த தரையில் சிரமமில்லாமல் படுத்துத் தூங்கவும் நம்மைப் பழக்கிக் கொள்ள உதவுகின்றன.

விரதகாலங்களில் புண்ணிய நதிகளில் நீராடுவதும், ஆலய தரிசனங்கள் செய்வதும் சிறப்பாகும். தவிர, தீக்ஷை வளர்த்துக் கொள்வது அவசியம். ஏனெனில் முடி வளர வளர மனதில் அமைதியும் சாந்தமும் வளருவதாகக் கூறப்படுகிறது.

மேலே சொன்ன நெறிமுறைகளனைத்தும் பக்தர்கள் பிரம்மச்சரிய விரதத்தைச் சரிவரக் கடைப்பிடிக்க உதவி செய்யும் சாதனங்களேயாகும். இவையாவும் உப அங்கங்கள் தாம்; பிரம்மச்சரிய விரதம் ஒன்றே மிகவும் பிரதானமான அம்ச மாகும். தூய புலன் அடக்கத்தினுல் உள்ளொளியைப் பெருக்கும் மகத்தான சக்தி அழியாமல் சேமித்து வைக்கப் படுகிறது. ஐந்துவிதமான மாற்றங்களினுல் விரதம் காத்தல் ஒளிசக்தியாக மாறி அகக் கண்களைத் திறக்கச் செய்யும் ஆற்றலை அளிக்கிறது. மானிட தேகம் பஞ்ச பூதங்களால் ஆக்கப்பட்டது. சத்துவ, இராஜஸ, தாமஸ குணங்கள் வெவ்வேறு விகிதங்களில் மனிதனிடம் கலந்திருக்கின்றன. சத்துவகுணமே மனிதனின் இறைத் தன்மையை அதிகரித்து இறைவனிடம் இடையருத அன்புகொள்ளவைக்கும். மற்ற இரு குணங்களும் கடவுள்மாட்டுச் செல்லும் வழியை விட்டு இகலோகத்தை இச்சிக்கும் தீய வழிகளில் மனத்தைக் கவர் கின்றன.

மேலே குறிப்பிட்ட விரதங்கள் அதி தீவிரமானவை என்று சிலர் கருதக் கூடும். விதைக்கும் விதையையும், உழைக்கும் உழைப்பையும் பொறுத்துத்தான் நல்ல பலனை எதிர்பார்க்க முடியும். நாம் எந்த அளவுக்கு விரதங்களைச் சரிவரக்

கடைப்பிடிக்கிறேமோ அந்த அளவிற்குப் பலன் கிடைக்கும். ஆண்டவன் பெயரால் சில நாட்களாவது அந்தரங்க சுத்தியுடன் செயல்படுவோமேயானுல், மீதி நாட்களிலும் நாமாகவே நல்வழிப்பட்டு மேம்பாடடைய முடியும். விரதங்கள் மலை யாத்திரைக்கு அத்தியாவசியமானவை. அஸ்திவாரம் போன்ற அவற்றைக் குறைத்து மதிப்பிடுவது தவருகும். எனவே இக சுகங்களைத் தவிர்த்து, பிரதி பலன்களை யாசிப்பதையும் ஒழித்து அவனையே சரணமென அடைவது தான் நமக்கு விதிக்கப்பட்டிருக்கும் தர்மமாகும். அந்த தர்மத்தையே ஊன்று கோலாகப் பிடித்துக்கொண்டு முன்னேறுவது தான் விவேகமான செயலாகும்.

ஒருமண்டலவிரதக்காரனே ! சரணம் ஐயப்பா !!

விரதங்களைத் தீவிரமாக அனுஷ்டித்த பின்னர், ஒரு மண்டலம் முடிவடையும் தருவாயில் குருநாதர் நடத்தும் மண்டல பூஜையில் பங்கு கொண்டு பரவசமடைய வேண்டும். ஒருசிலர் மண்டல பூஜைக்கும் ஓணத்திற்கும் விஷுக்கனிக்கும் கூட சபரிமலை சென்று வருவது உண்டு. எனினும் தல புராணங்களில் எந்தக் கோயில்களில் தரிசனம் எப்போது விசேஷம் என்பது பற்றிக் கூறப்பட்டிருக்கிறது. அதன்படி குளத்துப் புழையில் தமிழ் வருடப் பிறப்பு அன்றும், மண்டல பூஜையன்று ஆரியங்காவிலும், மண்டல பூஜைக்கு இரண்டு நாட்களுக்கு முன்பு அச்சன் கோவிலிலும் பகவானை தரிசிக்க வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது. சபரிமலையில் மகர ஜோதிக்குத்தான் முதன்மையும் முக்கியத்துவமும் கொடுக்கப் பட்டுள்ளது. மகரசங்கிரமண தினத்தன்று தான் எம்பிரானை ஒரே சமயத்தில் யோகியாகவும் ஜோதியாகவும் தரிசிக்க முடிகிறது. எனவே புதிதாக மலைக்குச் செல்லும் கன்னி ஐயப்ப சகோதரர்கள் மகர தரிசனத்திற்குச் செல்லுவது தான் உசிதமாகும்.

## இருமுடிப் பிரியனே ! சரணம் ஐயப்பா !!

சபரிமலை யாத்திரையை மேற்கொண்டவர்கள் சிறுசிறு குழுக்களாக குருவின் துணை கொண்டு பயணத்தைத் துவக்குகிறார்கள். குறிப்பிட்ட நாளில் நடமாடும் தெய்வங்களான பெற்றோரையும் குருநாதரையும் பணிந்து, குலதெய்வத்தையும் கணேசாதி தெய்வங்களையும் இதர ஐயப்ப சகோதரர்களையும் வணங்கி அனுமதி பெற்று இருமுடி கட்டவேண்டும். இருமுடி என்பது பருத்தித் துணியால் ஆன சுமார் ஒரு மீட்டர் நீளமும் நாற்பது சென்டிமீட்டர் அகலமும் உள்ள நீண்ட சதுரமான பையாகும். அதனுள் பொருட்களை இட்டு நிரப்புவதற்காக நீளவாக்கில் இருமுடியின் நடுவில் முப்பது சென்டி மீட்டர் இடைவெளி இருக்க வேண்டும். இருமுடியின் முன் பாகத்தைக் குறிக்க ஏதேனும் அடையாளம் செய்திருக்க வேண்டும். இதற்குள் வெவ்வேறு பொருட்களைப் போடுவதற்காக 35x20 சென்டிமீட்டர்களில் சிறு சிறு துணிப் பைகளையும் தயார் செய்து கொள்ள வேண்டும். இருமுடி பகவானைக் குறிப்பதாகும்.

## நெய்யபிஷேகப் பிரியனே ! சரணம் ஐயப்பா !!

முதலில் தேங்காயில் நெய்யை நிரப்பவேண்டும். நன்றாக முற்றிய தேங்காயாக எடுத்து அதன் மேல் பாகத்திலுள்ள சிறு சிறு நார்களையெல்லாம் அறவே நீக்கி வழ வழப்பாக தேய்த்து வைத்துக் கொள்ள வேண்டும். நமது சரீரத்தைச் சூழ்ந்திருக்கும் பந்தபாசங்களையெல்லாம் ஒழிப்பதைத் தான் இது குறிக்கிறது. பிறகு தேங்காயின் முளைக் கண்ணைத் திறந்து இளநீரை வெளிப்படுத்தி உட்புறத்தைச் சுத்தமான துணியினால் சுத்தப்படுத்திக் கொள்ள வேண்டும். இத்தேங்காயில் பசும் நெய்யை இட்டு நிரப்பும் போது சாதகனுடைய ஆத்ம சைதன்யம் அந்த நெய்யில் ஆவாஹனம் செய்யப்படுகிறது. சபரிமலையில் பகவானுக்கு அபிஷேகம் செய்யும் நெய்யில் ஆத்ம சைதன்யம் ஊடுருவிப் பேதமறக்கலந்திருக்குமாறு செய்வதற்கு

ஆவாஹன மந்திரங்கள் ஓதப்பட்டு, அதற்கான முத்திரைகளும் காண்பிக்கப்படுகின்றன. நெய்யையும், நெய்யிட்ட தேங்கா யையும் காப்பதற்காக அகோர அஸ்திர ஜபம் செய்யப்படு கிறது. நெய்த் தேங்காய்க்குச் சந்தனம் இடுதல், புஷ்பங்க ளால் அர்ச்சித்தல், தூப, தீபங்கள் காட்டுதல், நிவேதனம் சமர்ப்பித்தல் ஆகிய ஐந்து வித உபசாரங்களுக்கான முத்திரைகள் காட்டப்படுகின்றன. குறைந்த பட்சம் பன்னிரு தடவை மூல மந்திரம் ஜபிக்கப்பட வேண்டும்.

இரண்டு புருஷர்களுக்கு, மனிதனின் கற்பனைக்கும் அப்பாற்பட்டுப் பிறந்த காரணத்தால் பிரம்மன் ஸ்ரீ தர்ம சாஸ்தாவிற்கு ''பராய கோப்த்ரு'' என்ற நாமம் சூட்டினன். 'ஓம்' என்பது பிரணவம்; 'க்ரூம்' என்பது பகவானின் பீஜாக்ஷரம்; ''ஓம் க்ரூம் நம: பராய கோப்த்ரே நம:'' என்பது பகவானின் மூல மந்திரம்.

இதன் பிறகு நெய்த் தேங்காயின் துவாரத்தைக் காற்றுப் புகா வண்ணமும், நெய் கசியாத வண்ணமும் ஒரு கார்க்கினல் அடைத்து மாவுப் பிசினல் நன்ருக மூடிய பின்னர், அது இரு முடியில் எடுத்துச் செல்வதற்கும் பூஜிப்பதற்கும் ஏற்றதாப் ஆகிவிடுகிறது. அதாவது இப்போது நமது ஆத்மா இறைவ னுடன் கலப்பதற்குத் தகுதி உடையதாகி விட்டது என்று பொருள்.

''தேங்காயில் ஏன் பசு நெய்யை நிரப்பவேண்டும்?'' என்று சிலர் கேட்கக் கூடும்.

**சைவ-வைஷ்ணவ சைதன்ய ஜோதியே !**
**சரணம் ஐயப்பா !!**

மணிகண்டன் புலிப்பால் கொண்டுவர வனம் செல்லும் போது பந்தளத்தரசன் இராஜசேகரன் மைந்தனுக்குத் தீங்கு ஏதும் நேராமல் காப்பதற்காக தனது குலதெய்வமான

சிவபெருமானைத் துணையனுப்பும் பாவமாக, முக்கண் படைத்த தேங்காயை மகளிடம் கொடுத்து அனுப்பினுன். பூரணத்வம் அதாவது முழுத்தன்மை, பரம புருஷனிடம்தான் உள்ளது. அவர் படைப்பில் பூரணத்வம் உள்ளதாகக் கருதப்படுவன கற்பகத்தருவும், காமதேனுவும். ஈச்வரனுல் படைக்கப்பட்டது கற்பகத்தரு; அதுவே தென்னை மரமாகும். காமதேனுவின் அவதாரமே பசு மாடு; திருமாலின் ஆலயங்களில் காலையில் திருப்பள்ளி யெழுச்சி பாடிப் பெருமாளைத் துயிலெழுப்பும்போது பெருமாளின் கர்ப்பக் கிரகத்தின் வாயிலில் ஒரு பசுவை நிறுத்தி வைப்பார்கள். அதாவது திருமால் பொழுது புலரும்பொழுது காமதேனுவை முதலில் பார்ப்பதாக ஐதீகம். நாமும்கூட காலையில் எழுந்தவுடன் தரிசிக்கவேண்டிய வஸ்துக்களில் பசுவின் பின்பு புறம் ஒன்ருகும்பசுவின் பின்புறத்தில் லக்ஷ்மி வாசம் செய்கிருள். ஆகவே பசுவின் பின்புற தரிசனம் மங்களத்தையும் செல்வத்தையும் கொடுக்கும்.

தென்னை மரம் சிவனின் அம்சமாகவும், பசு விஷ்ணுவின் அம்சமாகவும் போற்றப்படுகின்றன. பசுவின் பாலின் சாரமான வெண்ணெயால் கிடைப்பது நெய். தென்னைமரத்தின் வித்து தேங்காய்; அதன் சத்து வெண்மையான உட்பருப்பு. வைஷ்ண வத்தைக் குறிக்கும் பசு நெய்யானது சைவத்தைக் குறிக்கும் தேங்காயில் போய்ச் சேரும்போது அங்கு சைவமும் வைஷ்ணவமும் இணைகின்றதல்லவா? இந்தச் சிவ-விஷ்ணுவின் ஐக்கியத்தையே தேங்காயில் பசு நெய்யை நிரப்புவது குறிக் கிறது. ஐயப்பன் சைவ-வைஷ்ணவ ஜோதியாயிற்றே! நெய்த் தேங்காயைவிடத் தகுதிவாய்ந்த வேறு சிறந்த வஸ்து அவனுக்குச் சமர்ப்பிக்க ஏதும் உண்டோ? நெய்த் தேங்காயில் நமது ஆத்ம சைதன்யத்தையும் சேர்த்தே அவனுக்கு சமர்ப்பித்து விடுகிருேம். கடினமான தேங்காயின் ஓடும், உள்ளே இருக்கும் பழுப்பான உறையும், அதனுள்ளிருக்கும் வெண்பருப்பும் மனிதனின் முக்குணங்களான தாமஸ, இராஜஸ, சத்வ குணங்களைக் குறிப்பனவாம். இம்மூன்று

குணங்களையும் பகவானிடம் சமர்ப்பித்துவிட்டு, நிர்க்குண மான நிலையில் நமது ஆத்மாவைப் பரமாத்மாவுடன் கலக்கச் செய்ய வேண்டும். இதைத் தான் நெய் அபிஷேகமாகச் செய் கிறோம். அத்வைத அனுபூதியின் வெளிக்கிரியை இது.

நெய்த் தேங்காயை இட்டசிறு பையில், அத்துடன் சுமா, ஒரு லிட்டர் அரிசி, சிறிதளவு வெல்லம், உலர்ந்த திராக்ஷைகள் வெற்றிலை பாக்கு, இரண்டு வாழைப் பழங்கள் ஆகிவற்றையும் ஐம்பது பைசா நாணயத்தையும் காணிக்கையாகப் போட்டுக் கட்டி விடவேண்டும். மற்றொரு பையில் பகவானுக்கு சமர்ப்பிப் பதற்கான விபூதி, பன்னீர், கற்பூரம், ஊதுவத்தி, அவல், பொரி முதலியன இட்டு நிரப்ப வேண்டும். பிறிதொரு பையில் பகவானின் சக்தியாக விளங்கி வரும் மஞ்ச மாதாவின் வழி பாட்டிற்கென மஞ்சட்பொடி, குங்குமம், மஞ்சள், குந்துமணி, கறுப்பு வளையல்கள், சிவப்பு, பச்சை அல்லது மஞ்சள் நிறத் துணி முதலியனவற்றை எடுத்துக் கொள்ள வேண்டும். வாபுரனுக்காக, பேரீச்சம் பழம், கற்கண்டு, மிளகு ஆகிய வற்றையும் எடுத்துக் கொள்ளவேண்டும். பதினெட்டாம் படியில் ஏறுமுன் உடைப்பதற்கும், இறங்கு முன் உடைப்பதற் கும் ஆக இரு தேங்காய்களை முன் முடியில் வைக்க வேண்டும். இவையனைத்தையும் இருமுடியின் முன் பகுதியில் போட்டுக் கட்டிவிட வேண்டும். முன் முடியை சபரிமலை சந்நிதானம் அடைந்த பிறகுதான் பிரிக்கவேண்டும். முன்முடியில் பகவா னுக்கு அர்ப்பணிக்கப்படும் பொருட்கள் நிறைந்திருப்பதால் முன்முடி பகவானைக் குறிப்பதாகும். அது காரணம் பற்றியே முன் முடியைப் பிரிப்பதில்லை.

**கர்மவினை அகற்றுவோனே; சரணம் ஐயப்பா !**

பின் முடியில் மலைக்குச் செல்லும் போது வழிநடைச் செலவிற்குத் தேவையான உணவுச் சாமான்கள், சர்க்கரை, காப்பிப்பொடி, தின்பண்டங்கள் ஆகியவற்றை எடுத்துக் கொள்ளலாம். 'ஒரு நாள் உணவை ஒழி என்றால் ஒழியாய்; இரு நாளுக்கு ஏல் என்றால் ஏலய், என்ற ஔவையார் வாக்குப்படி உடல் வருத்தம் குறையப் போதுமான உணவுச்

சாமான்களை எடுத்துக்கொள்ளத்தான் வேண்டும். சபரிமலையின் நுழை வாயிலான எருமேலியில் எழுந்தருளியிருக்கும் சாஸ்தா கோவிலில் உடைப்பதற்கு ஒன்றும், சபரி பீடத்தில் உடைப் பதற்கு ஒன்றும் ஆக இரண்டு தேங்காய்களை எடுத்துக் கொண்டு பின் முடியை நன்கு கட்டி விடவேண்டும்.

முன்முடிக்கு ஒரு தத்துவ அர்த்தம் உள்ளது போலவே பின்முடிக்கும் ஓர் தத்துவ விளக்கம் உண்டு. பின் முடி மனிதனது பிராரப்த கர்மங்களைக் குறிக்கும். மனிதன் பிறக்கும் போதே அவனுடைய ஜீவிதகாலம் நிர்ணயிக்கப்பட்டு விடுகிறது. முற்பிறவியில் செய்த பாப புண்ணியங்களின் பலன்களை இப்பிறவியில் அனுபவித்துக் கழிக்கவே ஜீவன் பிறப் பெடுக்கிறது. பிறந்து, பிறவியில் உழன்று பிறவிக் கடனை யெல்லாம் கழிக்க வேண்டும். எடுத்த இப்பிறவியிலாவது நற் பயன்களைச் செய்து அடுத்த பிறவிக்குப் பாவ மூட்டைகளைச் சேர்த்துக் கொள்ளாமல் இறைவனடியை நினைப்போர்க்கு நமது வழி நடையில் பின் முடி வெகுவாகக் கரைவது போல, பிராரப்த வினைகளும் வெகுவாகக் கரைக்கப்பட்டு விடுகின்றன. பிறகு முன் முடியையும், பின் முடியையும், சேர்த்து ஒரே கட்டிற்குள் கொண்டுவந்து விடுகிறோம். நமது பிராரப்தங்களை இறைவனிடம் ஒடுங்கும் வண்ணம் செய்வதை, முன் முடியும் பின் முடியும் இணைவது குறிக்கிறது.

## குருதட்சணை கொடுத்தவனே ! சரணம் ஐயப்பா !!

அறிவிலிகளான நம்மைக் கடைத்தேற்ற நமது ஆத்மா வைப் பரமாத்மாவிடம் சேர்ப்பித்து விடும் மிகப் பெரும் பொறுப்பை குருநாதர் தாங்குகிறார். குரு மூலமாகவன்றி நாம் எதுவும் செய்ய சக்தியற்றவர்கள், அருகதையற்றவர்கள் என்பதும் உண்மை. ஆகையால் நம் நன்றியை உணர்த்தும் வகையில் அவருக்குக் குருதட்சணை கொடுக்க வேண்டியது

மிகவும் அவசியமாகும். பக்தனது இருமுடியைக் கட்டி முடித்த பின்னர் அதை எடுத்து ஓர் புனிதமான ஆசனத்தின் மீது அவர் வைக்கும்போது 'இந்தப் பள்ளிக்கட்டை சன்னிதானத்தில் சேர்ப்பிப்பது எனது பொறுப்பு' என்று ஏற்றுக் கொள்கிருர். அதைத்தான் 'கட்டு தாங்குவது' என்று சொல்கிரேம். அந்தச் சமயத்தில் குருநாதருக்கு தட்சணை கொடுக்க வேண்டும். பகவானின் அவதார பூமியான பம்பை நதி தீரமும், சபரிமலை சன்னிதானமும் வேறு அல்ல என்று கூறுகிருர்கள். அதன்படி பள்ளிக்கட்டு பம்பை வந்து அடைந்தவுடனே அல்லது சன்னிதானம் சேர்ந்தவுடனே அதற்கு நன்றிக் கடனுக மறு முறை குருதட்சணை கொடுக்கவேண்டும்.

பக்தன் தன் தலைமீதில் இருமுடியைத் தாங்கும்போது முன் முடி தலையின் மீதும், பின் முடி பிடரியில் தொங்கும்படி தலை மீது ஓர் கம்பளி விரிப்பைப் போட்டுக்கொண்டு அதன் மீது இருமுடியை வைத்துச் சுமக்க வேண்டும். சூரிய கிரணங்கள் படாதிருக்கவும், பக்ஷிகள் எச்சம் இடாத வண்ணம் பாதுகாப் பதற்கும் இருமுடியின் மீது ஒரு துணியால் மூடவேண்டும்.

மலை யாத்திரைக்கு மனித ஜன்ம சௌகர்யத்தை ஒட்டி, மப்ளர், கம்பளி, ஸ்வெட்டர், டார்ச் லைட் இவை எடுத்துக் கொள்வது குளிருக்கும், பனிக்கும், இருளுக்கும் நல்லது. ஒவ்வொருவருடைய இருமுடியும் தனித்தனியே விளங்குமாறு அடையாளம் இடப்படுகிறது. எல்லா இரு முடிகளுக்கும் மாலை கள் சார்த்தி, தூபதீபகற்பூர ஹாரத்தி உபசாரங்கள் செய் யப்படுகின்றன. பிறகு சிஷ்யன் கிழக்குப்புறம் நோக்கி நிற்க, அவனது வலது பக்கம் குருநாதர் நின்று இருமுடியைத்தலை மீது வைக்க, சீடனும் தனது குருவைப் பிரதட்சிணம் வந்து பிரார்த்தித்துக் கொண்டு கிளம்புகிருன்.

இருமுடியைச் சுமந்துகொண்டு மலைக்குக் கிளம்பு முன்னர் பக்தன் தனது வீட்டு வாயிலில், அவன் வீட்டில் இல்லாத

நேரத்தில், அவனது இல்லத்தையும், குடும்பத்தினரையும் பாதுகாத்துவர பகவானின் பூதகணங்களில் ஒன்றை நிறுத்தும் நோக்குடன் ஓர் தேங்காயை அவனது வீட்டின் வாயிற்படியில் உடைக்கிருன் தேங்காய் உடைத்த இடத்தில் ஒரு பூதகணம் தங்கி காவல் காக்கிறது. ஆகையால் அந்த இடத்தைச் சுத்த மாக வைத்துக் கொண்டு தினமும் விளக்கு ஏற்றிக் காட்ட வேண்டும். அவ்வாறு அந்த இடத்தை சுத்தமாக வைத்துக் கொள்ள இயலாவிடில் அருகிலிருக்கும் கோயிலுக்குச் சென்று தேங்காயுடைத்துக் கிளம்பலாம். ஒரு குழுவில் கிளம்பும் ஐயப்ப பக்தர்கள் அனைவரும் தயாரானவுடன் சரணகோஷத்துடன் புனிதமான சபரிமலை யாத்திரை துவங்குகிறது.

இப்போது அவனுக்கு வீடு இல்லை; வாசல் இல்லை; உற்ருரும் இல்லை; உறவும் இல்லை; உலக சம்பந்தப்பட்ட அனைத் தையும் துறந்துவிட்ட நிலையில் சபரிமலையில் கொலுவிருக்கும் ஸ்ரீ ஐயப்பனின் நினைவு மட்டுமே அவன் நெஞ்சில் நிலைத்திருக் கிறது. அதனுல் தான் கிளம்பும்போது வீட்டாரிடம் அவன் சொல்லிக் கொள்வதும் இல்லை; கிளம்பிய பின் வீட்டைத் திரும்பிப் பார்ப்பதும் இல்லை.

சபரிமலைக்குச் செல்வதற்கு தற்போது எட்டு வழிகள் இருக் கின்றன. அவற்றில் புராதனமானது எருமேலி மார்க்கம் ஆகும். மணிகண்டன் புலிப்பால் கொண்டு வரச் சென்றதும் மன்னன் இராஜசேகர பாண்டியன் தனது பரிவாரங்கள் புடை சூழச் சபரிமலை ஆலய நிர்மாணத்திருப்பணிக்காக வந்ததும் இவ்வழியில் தான். இந்தப் பாதையில் சென்ருல் தான் பகவான் மகிஷியை அழித்து நடனமாடிய இடம், சிவபெருமான் தங்கி நின்ற காளைகட்டி நிலையம், பகவான் குழந்தையாய்த் தவழ்ந்த இடம்போன்ற புண்ணியத்துவம் வாய்ந்த பல் இடங்களைப் பார்க்கமுடியும். ஆகையால் தான் எருமேலி மார்க்கமே சிறந்த மார்க்கமாகக் கருதப்படுகிறது.

# பள்ளிக்கட்டு! சபரிமலைக்கு!!

---

## எருமேலி நிலையனே ! சரணம் ஐயப்பா !

ஐயப்ப பக்தர்கள் எருமேலியில் குழுமியிருப்பதைப் பார்த்தால் காட்டின் நடுவில் இருக்கும் ஓர் சிற்றூர் இவ்வளவு ஜனசமுத்திரத்தை எப்படி தேக்கிவைத்துக் கொள்ள முடிகிறது என்ற மலைப்புத் தோன்றாமல் இருக்காது. எருமேலி முழுவதுமே ஐயப்பப் பெருங்கடல்!

எருமேலி காட்டின் ஆரம்பத்தில் இருக்கிறது. இங்கு தர்ம சாஸ்தாவின் கோயிலில் பகவான் வேட்டைக்காரனாக அமர்ந்திருக்கிறார். எருமேலியில் பக்தர்கள் அனைவரும், முக்கியமாகக் கன்னி ஐயப்பன்கள் பேட்டை துள்ளுகிறார்கள். ஐயப்பன் அன்பர்கள் முதல் மூன்று வருடம் பேட்டை துள்ளுவதும் உண்டு. முதல் வருடம் அம்பு, இரண்டாவது வருடம் வாள், மூன்றாவது வருடம் கதை, இவற்றைக் கையில் எடுத்துக் கொண்டு பேட்டை துள்ளுவர். அதன் மூலம் ஜீவன் என்பது இந்தச் பரீரத்தைக் குறிப்பதல்ல; அதற்கும் மேலான பரப்பிரம்மத்தை—நானே தேவன், தேவனே நான்-என்ற அத்வைத அனுபூதி நிலையைக் குறிக்கும் என்று உணர்கின்றனர். அதற்காக பலநிற வண்ணப் பொடிகளை முகத்தின் மீதும் உடல்மீதும் பூசிக் கொண்டு தங்களது உருவத்தை அழகற்றதாகச் செய்து கொள்கிறார்கள். இத்துடன் கச்சைகட்டி ஒரு கையில் மரத்தழைகள், மறுகையில் ஒரு சரம் (அம்பு) தோளின் மீது ஒரு குச்சி இவற்றை ஏந்திக் கொண்டு இடுப்பில் காப்பிற்காக ஒரு கறுப்பு நாடாவும் அணிந்து 'சுவாமி தித்தக்கத்தோம், ஐயப்ப திந்தக்கத்தோம், என்று கூவியபடி தாரை தப்பட்டங்களின் ஒலிக்கேற்ப வாபுரர் சன்னதியிலிருந்து கிளம்பி பேட்டைத் தெரு வழி முழுவதும் ஆடிக் குதித்துக் கொண்டு சாஸ்தா ஆலயம் வருகிறார்கள். இதுவே பேட்டை துள்ளல் என்பதாகும். மகிழ்ச்சிப் பெருக்குடன் வீடு திரும்பும் வேட்டைக் காரனின் மனோபாவத்தை இது சித்தரிக்கின்றது.

வேடுவர்கள் வனம் சென்று துஷ்ட மிருகங்களை வேட்டையாடிக் கொன்ற ஜந்துக்களை மூட்டையாகக் கட்டி ஒரு கழியில் தொங்க விட்டுக் கொண்டு இருவராகச் சேர்ந்து சுமந்த வண்ணம் ஆனந்தமாக ஆடிவருவது வழக்கம். அதேபோல நாமும் நமது உள்ளம் என்னும் வனத்துள் இருக்கும் ஷட்வர்க்க மிருகங்களான காமம், குரோதம், லோபம், மோஹம், மதம் மாத்சர்யங்களை யெல்லாம் வேட்டையாடி அழித்து அவற்றை மூட்டை கட்டும் பாவமாக பேட்டைத் தெருவில் வாங்கும் சமையல் காய்கறிகளை மூட்டையாகக் கழியில் கட்டி தோளில் சுமந்து ஆடிவருவதே பேட்டைத்துள்ளலின் உட்பொருளாகும்.

நாகரீக வாழ்வு நடத்தி வரும் படித்தவர்களும், பணக்காரர்களும் கூட தங்களது நிலையை மறந்து உடல் முழுவதும் வண்ணப் பொடிகளைப் பூசிக்கொண்டு தழைகளையும் கோலையும் எடுத்துக்கொண்டு நடுத்தெருவில் த்ங்கள் இஷ்டப்படியெல்லாம் கூவிக் குதித்தாடிக் கொண்டு வர வேண்டிய நியதி இருக்கிறதே! இந்த இடத்தில்தான் அவர்களின் ‘நான்’ என்னும் அகந்தை அழிவதற்கும் ‘எனது’ என்ற மமதை நீங்குவதற்கும் தேவையான ஞானம் கிடைக்கிறது. மனிதனின் அகந்தையை வேட்டையாடி அழிப்பதற்கு பகவானே கங்கணம் கட்டிக் கொண்டு இருக்கிறார். நமது ஆத்மாவைத் தான் அவர் விரும்புகிறார்; சரீரத்தையல்ல. ஐயனின் நாமத்தைக் கூறி ஆடுவதால் ஆனந்தம் மேலிடுகிறது. ‘பரமானந்தம் மேற்கொள்ள விம்மி விம்மி நடிக்கும்’ நிலையை பேட்டை நடனம் விளக்குகிறது.

குறைந்தது மூன்று முறையாவது தொடர்ந்து சபரி மலைக்கு எருமேலி மார்க்கமாகச் சென்ற கன்னிகள் தான் பிற்காலத்தில் இதர ஐயப்ப பக்தர்களை மலைக்கு அழைத்து வரத்தகுதி உடையவர்களாகிறார்கள்.

எருமேலியிலிருந்து எல்லாமே பகவானோடு சம்பந்தப் பட்டவை. பேச்சும் மூச்சும் ஐயனின் நினைவிலேயே கழி

கின்றன. எப்படி ஒவ்வொரு துளி நீரும் சேர்ந்து கடலா கிறதோ அப்படியே ஒவ்வொரு ஐயப்ப சகோதரனும் ஐயப்பப் பெருங்கடலில் ஒருதுளி. ஒரே நீரில் ஒவ்வொரு திவலையும் வித்தியாசமாகவா இருக்கும்? அது மாதிரியே எல்லோரும் இங்கு ஐயப்பன் மயம்தான். சமுதாயத்தின் ஏற்றத்தாழ்வுக்கு இங்கு இடமில்லை; அரசனும் ஆண்டியும் ஒன்றே! எஜமானனும் வேலைக்காரனும் ஒருவரே. யாருக்கும் யாரும் வேலைக்காரன் இல்லை, எஜமானனும் இல்லை. எல்லோருமே பக்தர்களின் ஊழியர்கள் தாம்!

இவ்வண்ணம் பேட்டை துள்ளி எருமேலி நிலையனை வணங்கிய பின்னர் சற்று இளைப்பாறிவிட்டு யாத்திரையைத் தொடர் கிறோம். பேட்டை துள்ளும்போது கட்டிக் கொண்ட கறுப்பு நாடாவையும் கையில் எடுத்துக்கொண்டு சரத்தையும் நழுவ விடாமல் ஜாக்கிரதையாக எடுத்து வரவேண்டும். இவை சபரி மலையில் 'சரங்குத்தி' என்னும் இடத்தில் சேர்ப்பிக்கப்பட வேண்டியவையாகும். கிளம்பு முன் தர்ம சாஸ்தாவின் முன் சென்று வணங்கித் தேங்காய் உடைத்து காட்டு வழியில் நடக் கும்போது துஷ்ட மிருகங்களாலோ அல்லது ஏனைய விதத் திலோ தொல்லை வராமல் நமக்கு பாதுகாப்பாக இருக்கும்படி அவரை பிரார்த்தித்துக் கொண்டு யாத்திரையைத் தொடரு கிறோம். ஆலங்காட்டு ஐயப்ப பக்தர்கள்தான் எருமேலி யிலிருந்து கிளம்பும் கடைசி கோஷ்டியினர் ஆகும். இவர்கள் கிளம்பும்போது கருட தரிசனம் கிடைக்கிறது. இவர்கள் கிளம்பி விட்டால் அதற்குப் பிறகு எருமேலி மார்க்கமாக எவரும் சாதாரணமாக வருவதில்லை. எருமேலி வரை வாகனங் களும் ஊர்திகளும் வரமுடியும். கல்லும் முள்ளும் நிறைந்த காட்டுப் பாதையில் சபரிமலை யாத்திரை இங்குதான் துவங்கு கிறது. முன்னே காணும் பாதங்கள் எல்லாம் ஐயப்பன் பாதங் கள்தான். பின்னால் நம்மைக் காத்துணை வருபவரும் ஐயப்பன் தான். அவர் சர்வ வியாபி என்ற நினைவுடன் வழி நடக் கிறோம்.

எருமேலியிலிருந்து சபரிமலே சுமார் நாற்பத்தியோரு மைல் தொலேவில் இருக்கிறது. எருமேலி மார்க்கமாகச் செல்லும் ஐயப்ப பக்தர்கள் பதினெட்டு மலேகளேக் கடந்து செல்ல வேண்டும். ஒவ்வொரு மலேயிலும் இறக்கத்தைவிட ஏற்றம் அதிகம். ஆகையால் ஒவ்வொரு மலேயையும் ஒவ்வொரு படியாகக் கணக்கிட்டால் இந்த பதினெட்டு மலேகளும் சபரிமலே சன்னிதானத்தில் இருக்கும் பதினெட்டு படிகளேக் குறிப்பதாக அமையும். ஒவ்வொரு படியையும் ஒவ்வொரு தேவகணம் காத்துவருவதாக ஐதீகம். அதே போல இந்தப் பதினெட்டு மலேகள் மீதும் அவற்றை பூதகணத் தலேவர்கள் காத்து வருகின்றனர். ஒவ்வொரு மலேயின் சிகரமும் ஒரு கோட்டையாகக் கருதப்பட்டு யாத்திரீகர்கள் தங்கி பூஜை செய்து இளேப்பாறுவதற்கு ஏற்றவண்ணம் அமைந்திருக்கின்றன.

## சரண கோஷப் பிரியனே! சரணம் ஐயப்பா!!

இப்படி பதினெட்டு மலேகளேயும் கடந்து செல்கின்ற ஐயப்ப சகோதரர்கள் 'ஸ்வாமியே! ஐயப்பா, ஸ்வாமிபாதம்! ஐயப்பன் பாதம்! பகவானே! பகவதியே!'' என்றெல்லாம் பலந்பட பகவானின் நாமத்தைக் கூவி அழைத்துக் கொண்டே போகிருர்கள். இந்த நாம ஜபம் தான் அவர்களுக்குக் கடினமான பாதையைக் கடக்கப் பேருதவி புரிகிறது இராமாயணத்தில் திருமால் இராமாவதாரம் எடுத்தபோது கடல் கடந்து இலங்கை செல்வதற்குச் சேதுவிலிருந்து பாலம் அமைத்துக் கடக்க வேண்டியதாயிற்று. ஆனுல் இராம தூதனை அனுமனுக்கோ எந்தப் பாலமும் தேவைப்படவில்லே. 'இராமா என்ற நாமத்தை ஜபித்ததுத்தான் தாமதம்; வாயுபுத்திரன் கடலேத் தாண்டிவிட்டார்! பகவானின் நாமத்திற்கு அவ்வளவு வலிமை உண்டு.

காடுகளடர்ந்த மலேயில் பக்தர்கள் பாதம் பதிந்து சிறிதாகிய பாதையில் பிரயாணத்தைத் தொடர்கிருர்கள். கூடு

மான வரையில் தொடர்ச்சியாக நடப்பதே நலம். மிகவும் களைப்பு அடைந்து விட்டால் நிழல் தேடி அங்கு இரு முடியை இறக்கி வைத்து அதை மீண்டும் துணியால் போர்த்தி மூட வேண்டும். கன்னி ஐயப்பன்கள் தானே இருமுடிக் கட்டை கீழே இறக்கவோ அல்லது இறக்கிய கட்டை மீண்டும் தலை மேல் தாங்கவோ கூடாது. ஏற்கெனவே மலைக்குச் சென்று வந்துள்ள ஐயப்ப சகோதரனைக் கூப்பிட்டு இறக்கி வைக்கும் படி அல்லது தலையில் தாங்க உதவும்படி கேட்டுக்கொள்ள வேண்டும். அப்போது கன்னியின் வலது பக்கத்தில் கட்டு தாங்குபவர் நின்று, வலது கையினுல் முன் முடியைத் தாங்கி பிடித்து தூக்கி வைக்க வேண்டும். கன்னி ஐயப்பனைத் தெளிவாக அறிவிக்கும் சரங்குத்தி இருமுடியின் மேல் பொருத்தப் பட்டிருக்கும். இதைக் கண்டே கன்னி ஐயப்பனை துணைதானே நாடி வரும். அவன் தேடிப் போகவேண்டிய அவசியமே இல்லை.

## பேரூர்த்தோடே! சரணம் ஐயப்பா!!

மலையேறும்போது கவனத்துடன் ஒரே சீராக நடக்க வேண்டும். மிகவும் வேகமாக நடப்பதோ அல்லது அடிக்கடி பின்னே திரும்பிப் பார்த்துக் கொண்டு செல்வதோ நல்லதல்ல. நாவில் நாம ஜபத்துடன் முன் செல்லும் பக்தனின் பாதங்களையே துணையாகக் கொண்டு முன்னேறிச் செல்ல வேண்டும். எருமேலியிலிருந்து சுமார் மூன்று கல் தொலைவில் இருக்கும் பேரூர்த்தோடு என்ற சிறிய அருவிக் கரையை அடைந்து சற்று இளைப்பாறி மீண்டும் கிளம்புகிறோம்.

## காளை கட்டிநிலையமே! சரணம் ஐயப்பா!!

பேரூர்த்தோட்டிலிருந்து மலையேறினல் சுமார் எட்டு மைல் தூரத்தில் காளைகட்டி நிலையம் என்னும் இடத்தை அடைகிறோம், தர்ம சாஸ்தாவிடம் மகிஷி - அதாவது மாயை

என்னும் தீயசக்தி - சிக்குண்டு அழிக்கப்பட்டு, அவள்மீது சாஸ்தா கோர தாண்டவமாடும் காக்ஷியைக் கண்டு களிக்க ரிஷபாருடராய்ப் பரமசிவன் இங்கு எழுந்தருளிய போது, தன் வாகனத்தை ஓர் மரத்தில் கட்டினுர். இது காரணம் பற்றியே இந்த இடத்திற்குக் காளைகட்டி என்ற பெயர் வழங் கலாயிற்று. இங்கு இப்போது ஒரு சிறிய கோவில் அமைத்து இருக்கிருர்கள். வெடி வழிபாடு நடக்கிறது. வந்த களைப்புத் தீரச் சற்று இங்கே தங்கி விட்டுக் கிளம்பலாம்,

அழுதா நதியே! சரணம் ஐயப்பா!!

இங்கிருந்து கிழக்கே மீண்டும் இரண்டு மைல் நடந்தால் 'அலஸா' எனப்படும் அழுதை நதிக்கரையை அடையலாம், அன்பர்கள் பலர் இவ்விடம் தாவளம் (தங்கும் இடம்) அமைப் பார்கள். அம்பாளின் சாந்நித்தியம் துல்யமாகப் பிரகாசிக்கும் இடம் இதுவாகும் ஆகவே தாவளம் அமைத்தவர்கள் இங்கு இரவில் தங்கி பூஜை, பஜனை முதலியன செய்து இரவைக் கழிக்கின்றனர். பாதுகாப்பிற்காக கட்டைகளைக் குவித்து நெருப்பு மூட்டி, ஆழி இட்டு அதை இரவு முழுவதும் அணையாதவாறு பார்த்துக் கொள்கின்றனர். தப்பித்தவறி துஷ்ட மிருகங்கள் அருகில் வந்தால் ஆழியின் குறிப்பறிந்து ஒதுங்கி விடும்.

கன்னி ஐயப்ப சகோதரர்கள் காலையில் அழுதையில் குளிக் கும்போது ஆற்றிலிருந்து ஒரு சிறிய கல்லை எடுத்துக் கொள் வார்கள். இக் கல்லை கல்லிடுங்குன்று என்னும் இடத்தில் போடவேண்டும். அழுதையில் குளித்துக் கல்லும் எடுத்தபின், இருமுடிக் கட்டுகளுக்கு பூஜை செய்து மீண்டும் இருமுடி தாங்கி யாத்திரையைத் தொடர்கிறோம்.

அழுதா மேடே! சரணம் ஐயப்பா!!

ஆற்றைக் கடந்தால் அழுதை மலையேற்றம். இது வரை வந்த பாதையைப் போலன்றி மலையில் நேர்முகமாகவே

செங்குத்தான குறுகிய கரட்டுப்பாதை மூலம் ஏறவேண்டும். இருபுறமும் வான்முட்டும் மரங்கள்; புதர்கள் அடர்ந்த காடுகள்; கொடி மின்னல் போன்ற மலைப்பாதை. இந்த மேடு ஏறுவது சற்றுக்கடினம்; ஆயினும் நம் வசம்தான் 'ஐயப்பன்' எனும் தாரக மந்திரஜபம் இருக்கிறதே! நமக்கேது கவலை! சிறிது தூரம் மலையேறினல் 'கல்லிடுங் குன்று' என்னும் இடத்தை அடைகிறோம்.

### கல்லிடும் குன்றே! சரணம் ஐயப்பா!!

ஐயப்பன் சரிதையில் மகிஷியின் வதம்பற்றிக் கூறப்பட்டு இருக்கிறது. மகிஷியின் வதத்திற்குப் பிறகு அவளது இறந்த உடல்மீது பூதநாதன் வெறிக்கூத்து ஆடினன். மேன்மேலும் வளர்ந்து கொண்டே சென்ற உடலைப் பூமியில் அழுத்தி மறைத்தான். மீண்டும் உடல் வளராமல் இருக்க மகிஷியின் பூத உடல்மீது ஐயன் ஒரு பாறையை வைத்து அழுத்தி மூடினன். இதன் காரணமாகவே கன்னி ஐயப்பன் ஒவ்வொருவரும் ஒரு கல்லை இங்கே இடுகின்றனர்.

### உடும்பாறைக் கோட்டையே! சரணம் ஐயப்பா '!

சாப விமோசனம் பெற்று மாளிகைப் புறத்து அம்மாளுக விளங்கும் தேவியின் புகழ் பாடிக் கொண்டு மீண்டும் கிழக்கேயுள்ள மலையேற வேண்டும். அழுதையிலிருந்து சுமார் ஏழுமைல் தூரத்தில் உள்ள இவ்விடம் உடும்பாறைக்கோட்டை எனப்படும். அடர்ந்த காடுகள் எல்லாப் புறமும் சூழ்ந்திருக்க சூரிய பகவானின் கிரணங்கள் மரங்களின் நடுவே குளிர்ச்சியுடன் பிரகாசிக்கின்றன. இங்கு ஸ்ரீ பூதநாதர் கோட்டைத் தலைவராய் குடிகொண்டிருக்கிறார். இவ்விடம் இருமுடிகளை இறக்கி பூதநாதருக்கு வழிபாடுகள் நடத்தி, கட்டுகளுக்கும் பூஜை செய்த பிறகு கிளம்புகிறோம். இவ்விடத்தில் ஆழி விபூதி என்று கூறப்படும் அடுப்பெரித்த சாம்பலை பக்தர்கள் சேகரித்து வைத்துக் கொள்வர். பலவித

மான மூலிகைச் செடிகள் நிறைந்த இப்பிரதேசத்தில் உணவு தயாரிப்பதற்கு அடுப்பில் மூலிகைக் கட்டைகள் பல உபயோகப் படுத்தப் படுகின்றன. இந்த மூலிகையின் சத்து நிறைந்த சாம்பலேயே மருந்தாக உபயோகிக்கின்றனர். தடிப்பு, ஊரல், ரணம், முதலியவற்றிற்கு இந்த விபூதி மிகவும் சிறந்த மருந்து. இதை உடம்பில் பூசிக்கொண்டு சிலமணி நேரம் கழித்துக் குளித்தால் மேற்சொன்ன வியாதிகள் சொல்லிக் கொள்ளாமல் பறக்கும். இந்த பஸ்மத்தை உடலெல்லாம் பூசிக்கொண்டு கிளம்புகிறோம்.

கரிவலந்தோடே! சரணம் ஐயப்பா!!

இப்போது மலேயின் இறக்கம், ஏற்றத்தைவிட இறக்கம் கடினமானது. குருவையும் ஐயனேயும் ஸ்மரித்த வண்ணம் ஜாக்கிரதையாக இறக்கத்தைக் கடக்க வேண்டும். மலேயை விட்டு இறங்கி, இருமலேகளின் நடுவில் உள்ள பள்ளத்தாக் கிலேயே நெடுந்தூரம் செல்லவேண்டும். ஆயினும் அடர்ந்த வனப் பிரதேசமாதலால் வெயிலின் கடுமை அவ்வளவு தெரி யாது. இவ்வழியே இஞ்சிப் பாறைக் கோட்டை, புதுசேரி மலே இவற்றைக் கடந்து எட்டு மைல் தூரத்தில் உள்ள கரிமலே அடிவாரத்தை அடைகிறோம். சபரிமலே யாத்திரையில் பம்பை நதிவரையில் உள்ள தூரத்தை மூன்று நாட்களில் கடப்பதாக இருந்தால், இரண்டாவது நாள்தான் அதிக தூரம் நடக்க வேண்டும். கரி மலேயடிவாரத்தில் இரவைக் கழிக்கிறோம். பெயரிலிருந்தே கரிமலேயின் விசேஷத்தை தெரிந்து கொள்ள லாம். ஆம், யானேகள் நடமாட்டம் இங்கே அதிகம். ஆகவே தான் மலேயின் பெயரே கரி (யானே) மலே என்று வழக்கிலிருக் கிறது.

இங்கு கரிவலந்தோடு என்ற சிற்ருறு ஓடுகிறது சிரம பரி காரம் செய்து கொண்டு குளித்தால் நடந்த சூடு தணியும். பூஜை, பஜனே நடத்தி இரவைக்கழிக்கின்ருேம். மீண்டும் அதிகாலேயில் பயணம் துவங்குகிறது.

## கரிமலே ஏற்றமே! சரணம் ஐயப்பா!!

இப்போது கடினமான கரிமலே ஏற்றம். சில பக்தர்கள் கரி மலே ஆரம்பத்தில் கணபதிக்குன்று என்னும் இடத்தில் (ஒரு குறுகலான திருப்பமும், ஓர் இறக்கமும் அடுத்து ஒரு ஏற்றமும் இருக்கும் இடத்தில்) பல வருடங்களாக விழுந்திருக்கும் ஓர் மரத்தின் அடியில் கணபதியை வழிபடுகின்றனர். ''கரிமலே ஏற்றம் கடினம் பொன்னேயப்பா!'' என்று பாடுவதன் உண் மையை இம்மலே வெளிப்படுத்துகிறது. இம்மலே ஏறும்போது அவன் நாம ஜபம் இன்றி ஒரு அடி கூட எடுத்து வைக்க முடி யாது. நமது பலத்திற்கு அங்கே இடம் இல்லே. அவன் பலம் இல்லேயேல், நம் தலேயில் இருமுடிக் கட்டும் இல்லேயேல், அங்கு நடப்பது சாத்திய மற்ற ஒன்ருகும். 'தேக பலம் தா, பாத பலம் தா' என்று இறைஞ்சுகிருேம். 'ஏற்றி விடய்யா, தூக்கி விடய்யா' என்று அவனிடம்தான் உதவிகோருகிருேம். அவனன்றி ஓர் அணுவும் அசையாது. இப்போது கரிமலே உச்சியை அடைந்து விட்டோம். ஏறிய பிறகு கடினமாகவே தெரியவில்லேயே என்ற வியப்பு அங்கு ஏற்படுகின்றது. நாம ஜபம் கடினமான மலே ஏற்றத்தைச் சுலபமாகக் கடக்கும் பலத் தைக் கொடுக்கின்றதை எண்ணி எண்ணி வியக்கிருேம்.

## கரிமலே முகடே! சரணம் ஐயப்பா!!

கரிமலேயின் சிகரம் விசாலமான பீடபூமிபோல் விளங்குவ தால் சற்று இளேப்பாறலாம். ஐயப்ப சேவா சங்கத்தினரின் சேவை வழி முழுதும் கிடைக்கின்றது. தாகத்திற்கு இதமாக சீரகம் போட்டுக் காய்ச்சிய வெந்நீரை பக்தர்களுக்கு இங்கு வழங்குகின்றனர். வேறு பல செளகர்யங்களும் செய்து தரு கின்றனர். இங்கு ஒரு விசேஷம் யாதெனில் சரக்குழி தீர்த் தம் என்ற வற்ருத சுனே ஒன்று இருக்கின்றது. இறைவன் வேட்டையாடி வரும்போது தாகத்தால் வருந்திய தன் சேனே களுக்கு நீர் அளிக்கத் திருவுளம் கொண்டரன். உடனே வில்லில் ஓர் அம்பு தொடுத்து பூமியில் எய்தான். அம்பு

பூமியை துளைத்துச் சென்றதும் அவ்விடம் நீர் ஊற்று பீறிட்டுக் கிளம்பியது. இறைவனது சேனை தாகம் தீர்ந்து இன்புற்றனர். இப்போது நமது தாகத்தைத் தீர்க்க இது உதவுகிறது.

கரிமலை இறக்கமே! சரணம் ஐயப்பா!!

ஏற்றத்தைவிட இறக்கம் கடினம். கரிமலை இறக்கத்தில் நடக்கும்போதும் அதே நாம ஜபம்தான் 'இறக்கி விடய்யா, தாங்கி விடய்யா, ஆத்மபலம் தா; மனோபலம் தா;' என்ற பிரார்த்தனைதான். இவையன்றி நமக்கு வேறு யார் துணை வருகின்றனர்? 'காதற்ற ஊசியும் வாராது காண் கடை வழிக்கே' என்று பாடினார் பட்டினத்தார். அதன் உண்மையைப் புரிந்து கொண்டே இறங்கி வழி நடந்த பின் கரிமலை அடிவாரத்திலிருந்து சுமார் மூன்று நான்கு மைல் தொலைவில் உள்ள மனோரம்யமான பம்பா நதிக்கரையை அடைகிறோம்.

## பம்பா நதியே! சரணம் ஐயப்பா!!

---

பம்பா நதியின் அழகே அழகு! இனிமையான சல சலப்புடன் ஓடும் பம்பை நதியின் இனிய காக்ஷியின் அழகைக் கண்டவுடனேயே, கஷ்டப்பட்டுக் கரிமலையிலிருந்து இறங்கி வரும் பக்தர்கள் களைப்பெல்லாம் நீங்கப் பெற்றுவிடுகிறார்கள். பம்பையின் அழகும், அதன் மகிமையும் எழில்மிக்க இனிய இயற்கைக் காட்சிகளும் கண்டவர் கண்களையும் கருத்தையும் கவர்ந்துவிடும். அதை எழுத்தில் வடிக்கத் தரமன்று. பகவான் மணிகண்டன் தரணியில் உதித்துத் தவழ்ந்து விளையாடிக் கொண்டிருந்த இடமன்றோ இது! தாரகப் பிரம்மம் அவனிதனில் அவதரித்த இடமான புண்ணிய பூமியன்றோ இது? பகவானின் பூங்காவனம் அல்லவா பம்பா நதிக்கரைப் பிரதேசம்!

பம்பா நதியைப் பற்றி இராமாயணத்தில் மிகவும் அழகாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. சீதாபிராட்டியாரைப் பிரிந்த இராமபிரான் வனத்தில் அலையும் போழ்து பம்பையின் எழிலில் தன் மனத்தைப் பறிகொடுத்துச் சற்று நேரம் தன் சோகத்தை யெல்லாம் மறந்துவிட்டு இளைப்பாறி நின்ருர் என்ருல் இப் புண்ணிய நதியின் மகிமையை மேலும் வர்ணிக்க முடியுமோ? பம்பா தீரத்தில் ஸ்ரீராம பாதம் என்று ஒரு இடம் அழைக்கப் பட்டு வருகிறது. இராமாயணத்தில் பம்பை நதி இடம் பெற் றிருந்ததற்குச் சான்ருக கருவிலே திருவுடையான் என்று பெரு மையுடன் போற்றப்படும் ஸ்ரீ சுவாதித்திருநாள் மஹாராஜா தான் இயற்றிய 'பாவயாமி ரகுராமம்' என்னும் கீர்த்தனையில், 'அனக பம்பா தீர சங்க தாஞ்சனேய நபோமணி' என்று வர்ணித்திருப்பதிலிருந்தும், கேரள தேச நாட்டுப்பாடல்களில் சபரிமலையை 'பாலிகேருத மலை' (வாலி ஏருத மலை) என்று குறிப்பிட்டிருப்பதிலிருந்தும் அறியலாம். சிந்தையைத் தூண் டும் கர்ணபரம்பரையான சிறுகதைகளும் பம்பையைப் பற்றி இருக்கின்றன. பம்பையின் கரையில் தாகத்துடன் உட்கார்ந் திருந்த ஒரு காகம் தண்ணீர் குடிப்பதையும் மறந்து இராம நாம ஜபத்தில் ஈடுபட்டிருந்ததாம். நீர் குடிக்கும் நேரத்தைக் கூட ராம நாம ஜபத்தில் கழிக்காமல் வீணடிப்பதா என்ற எண்ணமாம் அதற்கு! அது மட்டுமா? தவளை ஒன்று ராம நாம ஜபத்தில் மிகவும் ஆழ்ந்து இருந்தபோது ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியின் பாதம் தவறுதலாக அதை மிதித்துவிட அது உயிர் துறக்கும் தருவாயில் இருந்ததாம். மிகுந்த வருத்தத்துடன் இராமர் 'நான் உன்னை மிதித்தவுடன் நீ ஏன் ஓலமிடவில்லை, என்று வினவியதற்கு அத்தவளை ''ஹே ராமச்சந்திரப் பிரபோ! வேறு யாராவது என்னை மிதித்து நசுக்க முற்பட்டிருந்தால் வாய் திறந்து உன்னை அழைத்து அடைக்கலம் அடைந்திருப் பேன். ஆனல் உன் திருப்பாதம் என் மேல் பட்டமையால் நான் ஜென்ம சாபல்யமடைந்தேன். ஆகவே உன்னைக் கூப் பிடவும் மனம் வரவில்லை'' என்று மிகுந்த சந்தோஷத்துடன் கூறியதாம். பம்பா நதிக்கரையில் வசித்த காரணத்தாலேயே

காகத்திற்கும் தவளைக்கும் நாம ஜபத்தின் மகிமையும் சரணு கதியின் பெருமையும் விளங்கியது என்ருல் ஆறறிவு படைத்த ஆண்டவனின் நினைவாகவே பம்பை நதியை அடையும் பக்த னுக்கு இவற்றின் மகிமையை விளக்கியா கூறவேண்டும்? அவனே அந்த மேலான ஞானத்தை அடையத் தகுதியுடைய வன் ஆகி விடமாட்டானே?

பரசுராமர் கேரள ராஜ்யத்தைக் கடலிலிருந்து அகழ்ந்து எடுத்தபோது அதைப் பரிசுத்தப்படுத்துவதற்காகப் பரத கண்டத்தில் ஓடும் பல புண்ணிய நதிகளிலிருந்து தீர்த்த கலசங் களைக் கொண்டு வந்து ஒன்று சேர்த்து உருவாக்கிய நதியே பம்பையாகப் பிரவாகித்து ஓடுகிறது. பரசுராமர், ஸ்ரீ ஐயப்பன் இருவருமே 'பம்பாநதி பாபங்களைக் கழுவுவதில் கங்கா நதிக்கு ஈடான பெருமை வாய்ந்தது' என்று கூறி அருளியிருக் கின்றனர். கங்கை, யமுனை, அந்தர்வாகினியாக ஓடும் ஸரஸ்வதி ஆகிய மூன்று நதிகளும் கலக்கும் இடம் திரிவேணி சங்கமம் ஆகும். கும்பமேளா தினத்தன்று திரிவேணி சங்கம மாகிய பிரயாகையில் பலர் நற்கதி பெற ஸ்நானம் செய்வ துண்டு. அது போலவே, பம்பைநதியில் யமுனையை ஒத்த கல்லாறு கலக்குமிடத்தில் அந்தர்வாகினியாக ஓடும் ஸரஸ்வதி சேர்ந்து திரிவேணி சங்கமம் என்ற பெயருடன் அழைக்கப் படுகிறது. சபரிமலை யாத்திரை செய்யும் பேறு பெற்றவர்கள் இத்திரிவேணி சங்கமத்தில் முழுகி பிரயாகை ஸ்நான பலன் அடைகிருர்கள்.

இந்தத் தக்ஷிண கங்கையாம் பம்பை நதி தீரத்தில் பலர் இரண்டு மூன்று நாட்கள் தங்குகின்றனர். பிரயாணக் களைப்பினல் சோர்வுற்ற பக்தர்கள் பம்பையில் ஸ்நானம் செய்து புதுத் தெம்பையும் உற்சாகத்தையும் அடைகிருர்கள். மேலும் பாபங்கள் அகன்று புண்ணிய புருஷர்களாக ஆகிருர்கள். உடலழுக்கு, உள்ளத்தழுக்கு இரண்டையுமே அகற்றி உடலுக்கு இதத்தையும் உள்ளத்துக்கு இன்பத்தையும் அளிக் கிறது பம்பை ஸ்நானம். மூதாதையர் ஆன்மா சாந்தியடையும்

பொருட்டு இங்கு நீர்க்கடன் கழிக்கின்றனர். இங்கு செய்யப் படும் தர்ப்பணுதிகளால் மிகவும் சந்தோஷமடைந்த பித்ரு தேவதைகள் நற்கதியடைந்து, பிரதி உபகாரமாக தன் சந்ததியாருக்கு அமோக வ ர ங் க ளை நல்குகிருர் கள். மேலும் இந்நதிக்கரையில் செய்யப்படும் எல்லா நற்கருமங்களும் ஒன்றுக்கு நூறு மடங்கு நற்பயன் அளிக்கும். அதனுல் இங்கு அன்னதானம், வஸ்திரதானம், சொர்ண தானம் முதலிய பலவகை தானங்களைத் தன் சக்திக்கு ஏற்ற வகையில் பக்தர்கள் செய்து மகிழ்கிருர்கள்.

பல இடங்களில் சத்தி (பெரிய அளவில் அன்னதானம்) நடைபெறுகிறது. பகவான் அன்னதானப் பிரபு ஆயிற்றே! கன்னி ஐயப்ப சகோதரர்கள், நூற்றியெட்டு அடுப்புகளிலிருந்து சாம்பல் எடுத்து வஸ்திரகாயம் செய்து வைத்துக் கொள் கிருர்கள். இந்த பஸ்மதாரணம் விசேஷமானது. அடுப் பெரித்த சாம்பலில் பல மூலிகைகள் கலந்து இருப்பது ஒரு காரணம். மேலும், பம்பையில் நடக்கும் அன்னதான வைபவத்தை பகவானே வந்து ஏற்றுக்கொள்ளுவதாக ஐதீகம் இருப்பதால் அவருக்கு அமுது அளித்த அன்பர்களின் அடுப்புச் சாம்பலே பிரசாதமாக எடுத்துக் கொள்வோம் என்ற காரணமும் கூறப்படுகிறது. அவ்வாறு சேகரிக்கப்பட்ட சாம்பலே குருவிடம் அளித்து அவருடைய ஆசியுடன் பெற்றுக்கொள்ள வேண்டும்.

இது காரணம் பற்றியே அன்னதானம் நடைபெறும் இடங் களில் (உச்சிஷ்டதாரணம் எனப்படும்) அடியார்கள் உண்ட எச்சில் இலைகள் மீது உருண்டு அவர்கள் மீத்து வைத்திருந்த சேஷத்தை (மிகுதியை) பகவானது பிரசாதமாகவே கருதி, தங்கள் உடல் மீது தரித்து, உண்ட இலைகளை தலைமீது தாங்கி, சரணகோஷத்துடன் பம்பையிலே கரைத்து வரும் பக்தர் களை காணலாம். அவ்வாறு செய்வதன் மூலம் அடியவர்கள் தங்கள் தீவினைகளை கரைத்து, உடல் ரோகமெலாம் நீங்கப் பெறுகிருர்கள் என்பது நிதர்சனமான, அனுபவ பூர்வமான உண்மையாகும்.

சர்வரோக நிவாரண தன்வந்திரி மூர்த்தியே !

சரணம் ஐயப்பா !!

எருமேலி மார்க்கத்தில் சபரிமலை யாத்திரை செய்வதில் மற்றொரு விசேஷம் உடல் நலம் காக்கும் மூலிகைகளின் மணம் தாங்கிவரும் காற்றைச் சுவாசிக்கும் பேறு கிடைப்பதுவேயாம். ஆயுர்வேத சாஸ்திரப்படி மனித தேகத்தில் வாத, பித்த கபதாதுக்கள் இருக்கின்றன. ஒவ்வொன்றும் ஒரு குறிப்பிட்ட அளவு வரையில் இருந்தால் தேகத்துக்கு ஆரோக்கியம் அளிக்கும். அதிகமாகவோ, குறைவாகவோ ஆனால் வியாதிகள் உடலைத் தீண்டுகின்றன. இம்மூன்றின் தொல்லைகளைக் குணப் படுத்தும் மூலிகைகள் எருமேலியிலிருந்து சபரிமலை வரையிலும் அதற்கப்பாலும் மண்டிக் கிடக்கின்றன.

வாதரோகத்தை அடக்குவதற்கு கருங்குறிஞ்சி மூலிகை உபயோகப்படுத்தப்பட்டு வருகிறது. எருமேலியிலிருந்து கல்லிடும் குன்று வரையில், முக்கியமாக அழுதா நதிப்பிர தேசத்தில் இம்மூலிகைகள் நிறைந்து இருக்கின்றன. கபரோகத் தைத் தீர்க்கும் மூலிகைகள் கல்லிடும் குன்றிலிருந்து கரிமலை ஆறுவது தட்டுவரை அடர்ந்து வளர்ந்திருக்கின்றன. அங்கிருந்து புல்மேடு வரை உள்ள சபரிமலைப் பிரதேசத்தில் பித்தரோக சமனியான மூலிகைகள் மண்டிக்கிடக்கின்றன. இம்மூன்று பிரதேசங்களிலும் தங்கிச் செல்பவர்கள் மேற்படி மூலிகைகளின் மணம் நிறைந்த காற்றைச் சுவாசிப்பதாலும், மூலிகை வளம் செறிந்த நீரை அருந்துவதாலும், மூலிகைகளை எரித்த சாம்பலைத் தரிப்பதாலும் ரோகங்கள் நீங்கி நல்ல ஆரோக்கியம் அடைகிறார்கள்.

பம்பை நதிக்கரையில் தங்கியிருக்கும் நாட்களில் பல சித்த புருஷர்களையும் கர்மயோகிகளையும் கண்டு வணங்கி அவர்க ளுடைய நல்லாசிகளைப் பெற முடிகிறது. ஏக காலத்தில்

இவ்வளவு மகிமை வாய்ந்த பெரியோரை ஒரே இடத்தில் கண்டு ஆசி பெற இந்த ஒரு இடத்தில்தான் முடியும்; ஒரு சில நாட்களே மிகுந்த ஜனநெருக்கத்தையுடைய, சிறிதும் பெரிதுமான பல த்ாவளங்களுடள் கூடிய பம்பா பிரதேசம், மயனுல் சிருஷ்டிக்கப்பட்ட ஒரு சிறு நகரமே போலக் காட்சி அளிக்கிறது. இதில் விந்தையிலும் விந்தை என்னவென்ருல் லக்ஷக்கணக்கான மக்களுக்கு நடுவிலும் ஏகாந்த சுகத்தை நன்கு அனுபவிக்க முடிகிறது!

எல்லோரும் விழித்திருக்கும்போது ஞானி தூங்குகிருன் என்ற கீதையின் உள் கருத்து இதுவேயாகும்.

**பம்பையில் பகவானே ! சரணம் ஐயப்பா !!**

இந்த சில நாட்களுல் திரும்பும் இடமெல்லாம் ஐயப்பமயம்; இரவு பகல் பாராமல் சதா காலமும் எங்கு பார்த்தாலும பூஜைகள்! பஜனைகள்! எங்கு நோக்கினும் தூய்மையே உருவான அடியார் திருக்கூட்டம்! கொடிய வனவிலங்குகளும் மதம் பிடித்த யானைகளும் திரியும் இப்பிரதேசத்தில் பயமின்றிச் சஞ்சரிக்கும் தைரியத்தை எவ்வாறு தான் ஆண்டவன் அடியார்களுக்குக் கொடுக்கிருனே?

வானமே கூரையாகக் கொண்ட இந்த அடர்ந்தவனத்தில் சற்றும் பயமோ அல்லது கவலையோ இன்றி மேடு பள்ளங்கள் நிறைந்த கட்டாந் தரையில் எப்படித் தான் படுத்து உறங்க முடிகிறதோ? எல்லாவற்றையும் துறந்த நிலையில் ஆத்ம சமர்ப்பணமே குறிக்கோளாக இறைவனிடம் சரணுகதி அடையும் பக்தர்களுக்கு பகவானின் அன்பான அரவணைப்பு கிடைப்பதால், தாயின்மடியில் உறங்கும் சேய்போல் இன்பமான நித்திரை கிடைக்கிறது. இதிலிருந்தே உலக சுகங்களையும் பந்தபாசங்களையும் துறப்பதால் நமக்கு நஷ்டமோ அல்லது கஷ்டமோ எதுவும் இல்லையென்றும் பேரானந்தமளிக்கும் இறைவனின் கருணைக்கு நாம் பாத்திரமாகிருேம் என்பதும் நிதரிசனமாக நமக்குப் புலப்படுகிறதல்லதா?

பம்பா விளக்கே சரணம்! சரணம் ஐயப்பா !

கதிரவன் மெல்ல மேற்கு வாயிலில் விழுகிருன், அந்த காரம் பம்பை நதியைச் சூழ்கிறது. இருள் தன்போர்வையை எங்ஙனும் விரித்து விடுகிறது. ஆனல் பக்தர்களின் உள்ளத்திலோ ஞான ஒளி சுடர்விட்டு பிரகாசிக்க ஆரம்பிக்கிறது! மகர சங்கிரமணத்துக்கு முந்தைய நாள் இரவு சிறுசிறு தெப்பங்கள் கட்டி விளக்குகளால் அலங்கரித்து பம்பா நதியில் மிதக்க விடுகிருர்கள். நதியின் மென்மையான நீரோட்டத்தில் தீபங்கள் அசைந்து அசைந்து ஆடிச் செல்லும் அழகே அழகு!

பழவினை எரிப்பவனே! சரணம் ஐயப்பா!

எருமேலியிலிருந்து பம்பை வந்து சேரும் ஐயப்ப சகோதரர்கள் ஒவ்வொரு இடத்திலும் தாவளம் அமைத்துத் தங்கி வருவதால் அவர்களுடைய பின் முடியில் இருக்கும் உணவுப் பொருட்கள் சிறிது சிறிதாகச் செலவாகிப் பின் முடி மெலிந்து கொண்டே வருகிறது. பம்பைக் கரையில் அனேகமாக எல்லாம் செலவழிந்து சபரிமலையில் ஐயன் சன்னிதானத்தை அடையும்போது முழுதும் செலவழிக்கப்பட்டு விடுகிறது. பிராரப்த கர்மாவின் பலன்களை இப்பிறவியிலேயே முழுதும் அனுபவித்து மறு பிறவிக்குக் காரணமான வினைப்பயன் தினையளவுகூட இல்லாமல் இருக்கும் ஜீவனின் பரிபக்குவ நிலையை வெற்றுப்பை உணர்த்துகிறது. பகவானின் பாத தரிசனம் இவ்வாறு புடம் செய்யப்பட்ட ஜீவனை அவனுள் ஐக்கியப்படுத்தி விடுகிறது.

நீலிமலை ஏற்றமே! சரணம் ஐயப்பா!
சபரி பீடமே! சரணம் ஐயப்பா!!

மகர சங்கராந்தி தினத்தன்று (தை மாதம் முதல்தேதி) புண்ணிய பம்பையில் நீராடி, உத்திராயண காலத்தில் பித்ரு தர்ப்பணுதிகளைச் செய்ய வேண்டியவர்கள் அக்கடன்களை முடித்துக் கொள்ளுகிருர்கள். பிறகு சந்தனம், குங்குமம்

முதலியன தரித்து சுப்ரவஸ்திரம் அல்லது கோ்டி வேஷ்டி உடுத்து சுபஸ்வீகாரம் முதலிய கர்மாக்களைச் செய்து இருமுடி பூஜை செய்கிறோம் பின் பம்பையின் இனிய சூழலை விட்டுச் சபரி மலைக்குக் கிளம்புகிறோம். சிறிது நேரப் பிரயாணத்திற்குப் பிறகு நீல வானொடு கொஞ்சி விளையாடும் நீலிமலையேற்றம். அப்பாச்சி மேடு, இப்பாச்சிக் குழி இவற்றின் வழியாகச் சென்று நீலிமலை முகட்டில் ஏறி சபரி ஆச்ரமம் எனப்படும் சபரி பீடத்தை அடைகிறோம். பக்தியின் மகாத்மியத்தை உலகறியும் வண்ணம், தொண்டு செய்த பக்தை சபரி மோக்ஷமடைந்த ஸ்தலம் இந்தச் சபரிமலை, அவள் பெயரையே தாங்கும் சிறப்புற்றிருக்கிறது இம்மலை. பீடத்திற்கு வணக்கம் செலுத்தும்முகமாகத் தேங்காய் உடைத்து வழிபாடுகள் நடத்தி, மேலும் நடந்தால் 'சரங்குத்தி ஆல்' என வழங்கும் இடத்தை அடையலாம்.

சரங்குத்தி ஆலே! சரணம் ஐயப்பா !!

தனது ஆலயம் நிறுவப்படுவதற்கான இடத்தை மன்னன் இராஜசேகர பாண்டியனுக்குக் குறிப்பிடவேண்டி ஸ்ரீபூதநாதன் ஓர் அம்பு எய்ய அது இவ்விடத்தில் இருந்த ஆலமரத்தில் தைத்து நின்றது. இப்போது அந்த ஆலமரம் இல்லாவிட்டாலும் இவ்விடம் சரம் குத்தி ஆல் என்றே அழைக்கப்படுகிறது. புதுமலைக் காரராம் கன்னி ஐயப்ப சகோதரர்கள் எருமேலியிலிருந்து கொண்டு வந்த சரத்தையும் கறுப்பு நாடாவையும் இங்கே போட்டு விடுகிறார்கள். எந்த வருடத்தில் கன்னி ஐயப்பன் ஒருவர்கூட சபரிமலை யாத்திரைக்கு வரவில்லையோ அந்த வருடம் தனது பிரம்மச்சரிய விரதத்தை கைவிட்டு லீலாவதியை மணம் செய்து கொள்வதாக லீலாவதி சாப விமோசனம் அடையும் சமயம் வரமாகப் பிரதிக்ஞை செய்திருக்கிறார். வருஷாவருஷம் கன்னி ஐயப்ப சகோதரர்களின் தொகை ஆயிரக்கணக்கில் பெருகிவருவதை சரங்குத்தி ஆல் ஒரு தனி மலை போல் விளங்குவதினின்றே அறியலாம். இதிலிருந்தே

ஐயன் புனித பிரம்மச்சரிய விரதத்தைக் கைவிட வேண்டிய அவசியமே நேராது என்று தெரிகிறதல்லவா?

தனது பிரம்மச்சர்ய விரதத்திற்கு பங்கம் வராமல் இருப்பதற்காகக் கன்னிமலைக்காரர்களுக்குப் பகவான் தனிச் சலுகைகளும் விசேஷ பாதுகாப்புகளும் கொடுக்கிறார். அதனால்தான் ஒவ்வொரு குழுவிலும் கன்னி பலம் இருக்க வேண்டுமென்று விரும்பி முதல்மலைக்காரர்களுக்கு சிரமமின்றி மலைக்கு அழைத்து செல்ல யாவரும் முன் வருகின்றனர். பதினெட்டுத் திருப்படிகள் ஏறும் போது முதன் முறை மலைக்கு வருபவர்கள் முதல் படியிலும், இரண்டாம் வருஷம் வருபவர்கள் இரண்டாம் படியிலும் என்ற வரிசையில் பக்தர்கள் தேங்காய் உடைத்துப் படிகளைக் கடக்க வேண்டும். அவ்வாறே இறங்கும் போதும் மேல் படியிலிருந்து கணக்கிட்டுத் தேங்காய் உடைக்கும் முறை பின்பற்றப்படுகிறது. ஒரு சிலரோ எப்போதுமே நாங்கள் உன் முன் ஒன்றும் அறியாக் கன்னிகள் என்று வேண்டிக் கொண்டு முதல் படியிலேயே ஒவ்வொரு வருடமும் தேங்காய் உடைக்கிறார்கள், சபரிமலை யாத்திரையின் மூலம் அகந்தையை அழிக்க விரும்பும் வைராக்கிய சித்தர்கள் இது போல எந்த சந்தர்ப்பத்தையும் நழுவ விடுவதில்லை.

## சத்தியமான பொன்னு பதினெட்டாம்படிக் காவலனே! சரணம் ஐயப்பா!!

---

ஐயன் வீற்றிருக்கும் கோயில் கட்டுமலையின் மீது கிழக்கு நோக்கிக் கட்டப்பட்டிருக்கிறது. மேலே போவதற்குப் பதினெட்டுத் திருப்படிகள் இருக்கின்றன. ஐயனின் திருவாக்கின் படி இப்பதினெட்டுத் திருப்படிகளும் பதினெட்டு தத்துவங்

களைக் குறிக்கின்றன. மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐந்து இந்திரியங்களும், காம, க்ரோத, லோப, மோக, மத' மாத்சர்யங்கள், திதிக்ஷை 'டம்பம் ஆகிய அஷ்ட ராகங்களும் சத்வ, இராஜஸ, தாமஸ குணங்களும், வித்யையும், அவித்யையும் சேர்ந்து தத்துவங்கள் பதினெட்டாகும். தத்துவாதீதனுகப் பகவான் இருக்கிருன் என்று விளக்க இப்படிகளைக் கடந்து மேலே அவன் கோயில் கொண்டுள்ளான். எல்லாத் தத்துவங்களும் தன்னுள் அடக்கம்; தான் அவற்றிற்குக் கட்டுப்படாதவன் என்பதை விளக்கவே பதினெட்டுப் படிகளுக்கு மேலே இறைவன் கோயில் கொண்டிருக்கிருன்.

பதினெட்டுத் திருப்படிகள் அஷ்டாதச சித்திகளைக் குறிப்பிடுகின்றன என்றும், ஒவ்வொரு வருடமும் ஒவ்வொரு சித்தி கைகூடி பதினெட்டு வருடங்கள் மலைக்குச் சென்றவர்கள் பதினெட்டு சித்திகளும் கைகூடப் பெற்று பகவானிடம் ஐக்கியமாகிருர்கள் என்றும் இத்திருப்படிகளுக்குப் பல விளக்கங்கள் கூறுகிருர்கள். இம்மாதிரி தத்துவ விளக்கம் கூறும் படிகள் வேறு எந்த கோயில் படிகளுக்கும் இருப்பதாகத் தெரியவில்லை.

சரிவர விரதம் காத்துத் தூய்மையானவர்களே தலையில் இருமுடி தாங்சியவண்ணம், படிக்காவலன் கறுப்பண்ண சுவாமியின் அனுமதியுடன் படிகளைக் கடக்க அருகதை உடையவர்கள் ஆகிருர்கள். விரதம் இல்லாமல், இத்திருப்படிகளின் மீது ஏறக்கூடாது.

பக்தர்கள் இருமுடியுடன் பதினெட்டுப் படிகளைக் கடந்து அவற்றுக்கும் மேலே தாரகப் பிரம்மத்தின் வாயிற் காவலர்களான சத்தியம், தர்மம் என்ற இரு துவாரபாலர்களையும் கடந்து இறைவன் இருப்பிடத்தை அடைகிருர்கள். எல்லாவித பந்த பாசங்களும் கழன்ற நிலையில், எல்லாத் தத்துவங்களையும் கடந்து நிர்க்குண பிரம்மத்தின் சகுண ஸ்வரூபமாய் விளங்கும் ஈசன் சன்னிதானத்தில் 'நீ வேறு எனுதிருக்க நான்வேறு எனுதிருக்க' நேராக வாழ்ந்து நீடார் சடாதரத்தின்மீது பராபரத்தைக் கண்ட ஜீவன் பரப்ரம்மத்துடன் ஐக்கியம் அடையும் நிலை பெறுகிறது.

கற்பூரப் பிரியனே ! சரணம் ஐயப்பா !!

படிகள் கடந்ததும் நம்மை வரவேற்பது பெரிய கற்பூர ஆழி. லக்ஷக்கணக்கான பக்தர்களால் இடப்பட்ட, பல்லாயிரக் கணக்கான ரூபாய் மதிப்புள்ள கற்பூரம் ஜெகஜ் ஜோதியாய் உடலுக்கு வெப்பத்தையும், உள்ளத்துக்குத் தண்மையையும் கொடுத்துக்கொண்டு கொழுந்து விட்டு எரிந்து கொண்டு இருக்கிறது. சபரிமலையைப்போல் இவ்வளவு மிகுந்த அளவில் கற்பூரம் எரிக்கப்படுவது வேறு எங்குமே இல்லையெனலாம். நாமும் சரணங்கள் கோஷித்துக் கொண்டு நாம் கொண்டுவந்த கற்பூரத்தை அந்த ஆழியில் இடுகிறோம். ''கற்பூரப் பிரியனே சரணம்!! எப்படி உருவமுள்ள இக்கற்பூரம் எரிந்து தனது மிகுதி என்று எதுவும் இன்றித் தீயினில் முழுதும் கரைந்துவிடுகிறதோ, அதுபோலவே என்னுள் இருக்கும் பிராப்த வினைப்பயன் முழுவதையும் எரித்து நீக்கிடுவாய்! உன் பதினெட்டுத் திருப்படிகள் கடந்த மாத்திரத்திலேயே என் பவ வினை முழுவதும் கழிந்துவிட்டது. ஆயினும் மீண்டும் மாயையில் சிக்கி வினை சேராவண்ணம் உன் அருளாம் அக்னியால் எல்லாவித பந்தபாசங்களையும் எரித்துவிடு'', என்று பலபடத் துதித்துக் கண்களில் நீர்சோர மெய் மறந்து நிற்கிறோம். கற்பூரப் பிரியன் என்னும் பெயருக்கேற்ப நமது வினைகளை அழிப்பதில் எவ்வளவு கருணையோடு இருக்கிறார் என்பதை உணர்கிறோம்.

இறைவனைக்காணும் துடிப்போடு பிரகாரத்தைச் சுற்றி வலம் வரும் ஆயிரக்கணக்கான பக்தர் கூட்டத்துடன் நாமும் ஒன்றி விடுகிறோம். பிரகாரத்தில் கோயிலுக்குத் தென்புறம் கணபதி கோயில் உள்ளது. முன்பு இதன் முன் ஒரு பெரிய அக்னி குண்டம் இருந்தது. தேங்காய்களை உடைத்து நெய்யை அபிஷேகத்துக்கு எடுத்துக் கொண்ட பிறகு தேங்காய்களை இங்கு அக்னிக்கு அர்ப்பணித்து விடுவார்கள். பெருகிவரும் அடியார் கூட்டத்தை உத்தேசித்து இக் குண்டத்தைக் கோயிலுக்குக் கிழக்கே பதினெட்டாம் படிக்கு அப்பால் புதிதாக

அமைத்திருக்கிருர்கள். கணபதி கோயிலை அடுத்து சற்றுத் தள்ளி நாகராஜர் கோயில் அமைந்திருக்கிறது, அப்படியே கோயிலை வலம் வந்து மறுபடியும் மணிமண்டபத்தின் முன் பகவானின் கர்ப்பக் கிரகத்தின் திவ்ய சன்னிதானத்தை அடைகிருேம். அத்தனை கூட்டத்திலும் ஐயன் தரிசனம் கிட்டுகிறது. நித்திய பிரம்மச்சாரியாய் யோகபட்டத்துடன் மௌனபாஷையிலேயே பொருள் உணரச் செய்யும் சின்முத்திரையுடன் அமர்ந்திருக்கும் தவயோகியைக் காண்கிருேம். வலது கைக்கட்டைவிரல் பரமாத்மாவையும், ஆள்காட்டி விரல் ஜீவாத்மாவையும் மற்ற விரல்கள் ஆத்மாவை பந்தப்படுத்தும் உலக வாசனைகளையும் விளக்குகின்றன. கட்டை விரலும் ஆள் காட்டி விரலும் இணையும்போது, பந்த பாசங்கள் விலகிய ஜீவாத்மா, பரமாத்மாவுடன் ஐக்கியமாகிவிடுகின்ற நிலை விளக்கப்படுகிறது. இதுவே சின்முத்திரையெனப்படும், சிவால்யங்களில் தெற்குப் பிரகாரத்தில் சின்முத்திரையுடன் வீற்றிருக்கும் தக்ஷிணமூர்த்தமும், விருத்தர்களான நான்கு சிஷ்யர்கள் கைகட்டி வாய் புதைத்து சற்றுக் கீழே அமர்ந்திருப்பதையும் இங்கே நினைவு கூறலாம்.

தேஜோமயமான ஸ்ரீசக்ர பீடம்; அதன்மேல் பக்தர்களுக்கு வரம்அளிக்கும் பொற்கமலப்பாதங்கள். பாதங்களை அலங்கரிக்கும் சதங்கைகள். இரு துடைகளும் இணைந்து தோன்றும் கம்பீரமான அழகு; கால்களைச் சுற்றிக் கட்டப்பட்டிருக்கும் வீரயோக பட்டம்: ஆலிலை யொத்த வயிறு; தாமரைத் தடாகம் நிகர்த்த கொப்புழ்; முப்புரி நூல், மாலைகள் திகழும் அகன்று பரந்த மார்பு; மணிகண்டன் என்பதை விளக்கும் இரத்தின மாலை துலங்கும் பாஞ்சசன்னியம் போன்ற கழுத்து; தோள்களில் வீரசங்கிலி; கைகளில் வீர வளையல்கள்; சின்முத்திரை காட்டும் வலது கை; முட்டுக்கால் மீது படிந்து பாதங்களைச் சுட்டிக் காட்டும் இடது அபயஹஸ்தம்; விரல்களில் பாலக்காய் மோதிரம்; கண்டோர் மயங்கும் முகாரவிந்தம்; மௌனமாகவே ஞானோபதேசம் புரியும் மந்தஹாஸ வதனம்; தீர்க்கமான நாசி; கருத்தைக் கவரும் கருணை பொழியும் இருகமல நயனங்கள்; பக்தர்

களின் குறைகளைக் கேட்பதற்கென்றே விளங்கும் நீண்ட செவிகள்; பரந்த நெற்றியில் துலங்கும் கஸ்தூரி திலகம், அசைந்து ஆடும் சுருள் குழைகள்; அதன் எல்லாவற்றிற்கும் மேல் நவரத்தினங்கள் இழைத்த பொற்கிரீடம்; பாதாதி கேச மாகப் பார்க்கிறோம்; கேசாதி பாதமாக மீண்டும் கண்டு லயிக்கிறோம். மாறி மாறிப் பார்த்துக்கொண்டே இருக்கிறோம். கண்களில் நீர் பனித்திரை போல் துளிர்த்துப் பார்வையை மறைக்கிறது. நாம் பட்ட கஷ்டமெல்லாம் எங்கோ மறைந்து விடுகிறது. கண்களையும் கருத்தையும் ஈர்க்கும் அழகை வர்ணிக்க முடியாமல் 'அவ்வாறு அறிவார் அறிகின்றதலால், எவ்வாறு ஒருவர்க்கு இசைவிப்பதுவே, யென்றும் 'ஆசா நிகளம் துகளாயின பின் பேசா அனுபூதி பிறந்ததுவே' என்றும் அனுபூதி இலக்கணத்திற்குச் சான்றாகப் பேச்சொழிந்து புளாங்கிதம் அடைகிறோம்.

பொன்னொத்த பதினெட்டாம் படி ஏறித் தரிசனம் செய்த பின் மறுபடியும் அவ்வழியே இறங்கினால் யாத்திரை முடிந்து விட்டது என்று அர்த்தம். ஆயினும் இறைவனை மீண்டும் ஓரிரு முறைகள் தரிசிக்க வேண்டாமா? நமக்குக் கிட்டிய தரிசனம் மற்றவர்களுக்கும் கிட்ட வேண்டாமா? ஆகையால் கோயிலை அடைவதற்கு வடபுறமும் மேற்குப் புறமும் படிகள் அமைத்திருக்கிறார்கள். இவ்வழிகளில் இறங்குவதால் யாத்திரை முடிவுற்றதாக ஆகாது. மீண்டும் கோயிலை அடைய இப்படிகளின் மீதே செல்ல வேண்டும்.

இறைவன் அணிந்திருந்த திருவாபரணங்களும், முடி சூட்டு விழாவிற்காகச் செய்யப்பட்ட ஆபரணங்களும், ஐயன் புலிப்பால் கொண்டுவரும் நிமித்தம் கானகம் வந்த பிறகு அணியாமல் விடப்பட்டு விட்டன. ஏனெனில் ஈஸ்வரஸ்வரூபமும், பிரபாவமும் வெளிப்பட்ட பிறகு ஐயன் காந்தமலையை வாசஸ்தலமாகக் கொண்டுவிட்டான். ஆயினும் இராஜசேகர பாண்டியன் அத்திருவாபரணங்களை ஈசனுக்குப் பூட்டி அழகு செய்து ஆனந்தம் அடைய ஆசைப்பட்டான். ஆகவே எம்

பெருமான், ''இத்திருவாபரணங்களை நீங்கள் வம்ச பரம்பரையாகப் பாதுகாத்து வாருங்கள். மகர சங்கிரமண தினத்தன்று ஜோதிரூபமாய்க் காந்தமலையிலிருந்து காக்ஷியளிப்பேன். அன்று நீங்கள் சார்த்தும் திருவாபரணங்களை ஜோதி ரூபமாக ஏற்றுக் கொள்வேன்'', என்று திருவாய் மலர்ந்தருளினான். இந்த ஆபரணங்கள் இப்போதும் பந்தளராஜ வம்சத்தினரால் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. வருஷத்தில் ஒரு நாள்தான் ஆபரணப்பெட்டிகளை மலைக்கு எடுத்து வருகிறார்கள். திருவாபரணப் பெட்டிகளை, கொண்டு வரும் வழியில் சரங்குத்தி ஆலுக்கு அருகில் வைக்கிறார்கள். வானத்தில் கருட தரிசனம் ஆனவுடன் ஆபரணங்கள் கோயிலுக்கு எடுத்துச் செல்லப்பட்டு இறைவனுக்கு அணிவிக்கப்படுகின்றன.

பகவானின் திருவாபரணப் பெட்டிகள் வருவதைக் காணவே உடல் புல்லரிக்கும் என்றால், பகவானுடைய திருவாபரணக்கோலத்தைக் காணும் பக்தர்கள் எப்படி உணர்ச்சி வசப்பட்டு மெய்மறந்திருப்பார்கள் என்பதைக் கற்பனை செய்யக் கூடமுடியாது. அபிஷேகப் பிரியனான சிவனுக்கும் அலங்காரப் பிரியனான விஷ்ணுவுக்கும் பிறந்ததை ஐயப்பனின் நெய்யபிஷேக தரிசனமும், திருவாபரணக் கோலமும் வெளிப்படுத்துகின்றன போலும்! பகவான் மீது திருவாபரணங்கள் சார்த்தி, கற்பூர ஹாரத்தி காட்டியவுடன் காந்தமலையில் மகர ஜோதியாக ஆண்டவன் தரிசனம் தருகின்றான்.

பொங்கும் கடல் போல் எங்கும் மக்கள் கூட்டமும் ஆரவாரமும். ஜோதி தரிசனத்தைத் தவறாது பார்ப்பதற்காக பக்தர்கள் முந்துகின்றனர். கூட்டத்தில் ஒருவராக நாமும் கலந்து பகவான் தரிசனம் தரும் வேளையை எதிர்பார்த்து வானத்தை ஆராய்ந்தவண்ணம் இருக்கிறோம்.

# மகர ஜோதியே! சரணம் ஐயப்பா!!

மகர சங்கராந்தி தினமான தைமாதம் முதல் தேதியன்று தான் எம்பெருமான் யோகியாகவும், ஜோதியாகவும் பக்தர் களுக்குக் காக்ஷி அளிக்கிருர். அன்று மாலை நெருங்க நெருங்க ஆர்வமும் துடிப்பும் அடக்க முடியாதபடி உடலெங்கும் வியா பித்து விடுகிறது. சூரியன் அஸ்தமித்து விடுகிருன். கோயில் விளக்குகள் ஏற்றப்படுகின்றன. திருவாபரண அலங்காரங்கள் முடிந்து தீபாராதனை காட்டப்படுகிறது. குழுமியிருக்கும் லக்ஷக்கணக்கான ஜனங்களின் கண்கள் ஆலயத்திற்கு எதிர்ப் புறம் வானை நோக்கி நிலைத்திருக்கின்றன. சுமார் 6-30 மணி யளவில் ஆலயத்திற்கு எதிர்த் திசையில் வடகிழக்கு மூலையில் வானளாவும் மலைகளின் உச்சிக்கு அப்பால் மரக்கிளைகளுக்கு நடுவில் ஒரு ஜோதி பிரகாசித்துக் கொண்டு வெளிப்படுகிறது. ''ஸ்வாமியே சரணம் ஐயப்பா! காந்தமலை ஜோதியே சரணம் ஐயப்பா! ஜோதி ஸ்வரூபனே சரணம் ஐயப்பா!'' என்று மெய் மறந்த நிலையில் வானில் சுடர் விட்டுப் பிரகாசிக்கும் ஜோதியை நோக்கிக் கரங்கள் சென்னிமேல் குவியக் கண்களில் நீர் பெருக் கெடுத்து ஓட, வான முகடு முட்ட சரண கோஷங்கள் முழங்கிய வண்ணம் இருக்கின்றன. ஜோதி சிறிதாகவும் பெரிதாகவும் ஊசலாடும் தீபம்போல் சுடர் விட்டுப் பிரகாசித்துக் கொண்டு சுமார் இருபது நிமிஷங்கள் காக்ஷி அளிக்கிறது.

கண்கள் பெற்ற பயனை அடைந்து விட்டோம்! ஐயனை விக்கிரக வடிவில் கண்டு களித்த கண்கள் ஜோதி வடிவிலும் கண்டு களிக்க ஆனந்த பாஷ்பம் கண்களிலிருந்து பெருக் கெடுத்து ஓடுகிறது. இதுவே நமக்குத் தடையாகி ஜோதியை மங்கலாக நமக்குக் காட்டுகிறது. நம் கண்கள் மீது நமக்கே கோபம் வருகிறது. ''ஏன் நீரைப் பொழிந்து திரையிட்டு

இறை வடிவை மறைக்கிருய்? ஜோதி மறையும் மட்டுமாவது கண்களே, பனிக்காமல் இருங்கள்'', என்று வேண்டிக் கொள் கிருேம். ஜோதியைக் கண்ட ஆனந்தத்தில் லயித்து இருக்கும் போதே திடீரென்று ஜோதி மறைந்து விடுகிறது. பிறவிக் குருடன் கண்பார்வை வரப் பெற்று மீண்டும் இழந்து விட்டால் துடிப்பது போல், கண்டதில் ஆனந்தமும், கண்டது மறைந்த தில் ஆழ்ந்த வருத்தமுமாக இரு உணர்ச்சிகளையும் மாறி மாறி அனுபவிக்கும் குழந்தையராய் மாறுகிருேம். ''இறைவா! உன்னையும் உன் பக்தர்களையும் காணக் காடுமலைகளைக் கடந்து வந்திருக்கிருேம். அந்த பக்தர்களை அனுக்கிரகிக்க நீ ஜோதி ஸ்வரூபமாய் வந்து ஆசீர்வதிக்கிருய்: உன் கருணைக்கு எல்லை வகுக்க முடியுமோ? இப்படி பக்தர்களை மதிக்கும் தெய்வ மாம் உன்னை இக்கலியுகத்தில் காணப் பெற்ருேமே! ஐயனே சரணம், சரணம்,' என்றெல்லாம் நெஞ்சு விம்முகிறது.

**நெய்யபிஷேகப்பிரியனே! சரணம் ஐயப்பா!**

நம் யாத்திரை முடிவடையும் தருணம் வந்து விட்டது. இறைவனை ஆவாகனம் செய்த நமது ஆத்ம சைதன்யம் நிறைந்த நெய்த் தேங்காயை உடைத்து,நெய்யை ஆண்டவன் மீது அபிஷேகம் செய்கிருேம். சாதாரணமாகப் பூஜைகளில் இறைவனை ஆவ்வாகனம் செய்தால், பூஜை முடிந்த பிறகு மீண்டும் தன் இருப்பிடம் செல்ல மந்திரங்களை ஓதுகிருேம். இங்கோ அவ்வாறின்றி ஆவாகனம் செய்த நிலையிலேயே தேங்காயை உடைத்து ஆத்மசைதன்யமாகிய நெய்யை இறை வனுக்கு அபிஷேகம் செய்கிருேம். ஜீவாத்மா பரமாத்மாவில் கலப்பதை இது குறிப்பதால் யதாஸ்தானம் செய்ய வேண்டிய அவசியமே எழவில்லை. அதனுல்தான் செய்வதில்லை. ஆத்மா இல்லாத சரீரம் சவம். அது எரிக்கப்பட வேண்டிய பொருள்; உடைத்த தேங்காயை கணபதி குண்டத் தில் போட்டு எரித்து விடுகிருேம்.

இவ்வுலகில் பிறந்து வளர்ந்ததற்கான பிறவிப் பயனை அடைந்து விட்டோம்! கர்மங்களிலிருந்து, முன்வினைப் பிராரப் தங்களிலிருந்து, நாம் செய்த தர்ம, அதர்மங்களிலிருந்து, புண்ணிய பாபங்களிலிருந்து, அகமாயைக் கூட்டிலிருந்து விடு பட்டு விட்டோம். யாவும் கடந்த நிலை! 'எல்லாம் ஒன்றே, யாதும் அவனே' என்ற தத்துவ நிலை! பிறவிப் பெருங்கடல் நீந்தி இறைவனடி சேர்ந்த உன்னத நிலை!

இறைவன் சன்னிதானத்துக்குக் கணக்கற்ற பக்தர்கள் சித்தர்கள், ஜீவன் முக்தர்களான பல்வேறு பெரியோர்கள் ஆலயத்தைச் சுற்றிவலம் வந்து ஆண்டவனைத் தரிசித்துச் சென்றிருக்கின்றனர். அன்னுருடைய பாத துளிகள் ஆண்டவனுடைய பாததூளிகளுக்குச் சமமாகும். இன்னும் கூறப் போனல், இறைவன் அடியார்க்கடியன் ஆன தால் அடியார் தம் மகிமை சொல்லத் தரமன்று. ஆகவே அவர்களுடைய பாத தூளிகளை தம் மேல் தாங்கிக் கொண்டு தமது உடலும் உள்ளமும் பரிசுத்தம் அடையும் பொருட்டு சுற்றம்பலத்தில் பல பக்தர்கள் அங்கப் பிரதக்ஷிணம் செய் கிருர்கள். அங்கப்பிரதக்ஷணம் செய்தவுடன் குளிக்கக்கூடாது அன்று மாலை அல்லது அடுத்த நாள் காலையில் தான் குளிக்க வேண்டும். பக்தர்தம் பாத தூளிகள் நிறைந்த உடைகளைத் துவைக்காமல் வீட்டிற்கு எடுத்துவந்து வீட்டில் பரப்பி குடும் பத்தினரும் அடியார்களது பாத தூளிகளை அடையும் பாக்கியத்தைக் கொடுப்பது சாலச்சிறந்ததாகும்.

இறைவனுக்கு நெய் அபிஷேகம் ஆனவுடன் அதில் ஒரு பகுதி நமக்குப் பிரசாதமாகத் திருப்பித் தரப்படுகிறது. பிறகு மஞ்சமாதாவின் சன்னதி அடைகிறேம். மஞ்சமாதாவின் மாளிகை ஐயப்பன் ஆலயத்துக்கு வடக்கே சுமார் முன்னூறு மீட்டர் தூரத்தில் இருக்கிறது. இப்போது அங்கே ஒரு உயர்ந்த மேடை தான் எஞ்சியிருக்கிறது. அங்கு அருகிலேயே சிறு அம்பலம் அமைத்து மஞ்சாம்பிகையைப் பிரதிஷ்டை செய் திருக்கிருர்கள். கற்றறிந்த ஆன்ருேர் சபரிமலையில் ஐயனை விட அருபிணியாக விளங்கும் சக்திக்குத்தான் சக்தியும் மகிமை

யும் அதிகம் என்கிருர்கள். ஐயன் ஸ்ரீசக்ர பீடத்திலமர்ந் திருப்பதே இதைக் குறிப்பால் உணர்த்துகிறது. நாம் மஞ்ச மாதாவுக்கான வழி பாடுகளேச் செய்கிருேம். அங்கு பூதகணத் தலேவருள் ஒருவராகிய கடுத்த ஸ்வாமி கோயிலும் இருக்கிறது. இதர தலேவர்களும் தகுந்த இடங்களில் பிரதிஷ்டை செய்யப் பட்டிருக்கிருர்கள். தர்மசாஸ்தா கோயிலின் கிழக்குப்புறத்தில் பதினெட்டாம் படிக்காவலனுகிய கறுப்பண்ண ஸ்வாமி, கறுப் பாயியம்மை இருவருக்கும் கோயில் உண்டு. பாபங்களேப் போக் கும் பஸ்மக்குளத்திலும் கும்பளந்தோட்டிலும் சென்று ஸ்னுனம் செய்து வந்த பிறகு இறைவனுடைய பிரசாதங்களே யெல்லாம் ஒன்ருக முடிந்து முன் முடியில் வைக்கிருேம். முடியைத் தலே யில் சுமந்தவாறே இறைவனே நோக்கிய வண்ணம் பதினெட் டாம் படி வழியே இறங்குகிருேம். அப்போது முன் குறிப் பிட்டது போல் படியில் தேங்காய் உடைக்கிருேம். மறுபடியும் இரு முடியுடன் வந்து பகவானின் தரிசனம் கிடைக்கப் பிரார்த் தனே செய்து கொள்கிருேம். நாம் அறியாமல் செய்த பாபங் களேக் கழுவுவதற்குத்தான் மீண்டும் மீண்டும் சபரிமலே யாத்திரையை மேற்கொள்கிருேம்.

பகவானின் சத்திய லோகத்தை விட்டு இறங்குபவர்கள் வண்டிப் பெரியாறு அல்லது சாளக்காயம் மார்க்கமாக அவரவர் கள் சொந்த ஊரை அடைகிருர்கள். வெகு சிலர் மறுபடியும் திரும்ப எருமேலி மார்க்கமாகவே தங்கள் ஊர் போய்ச் சேர் கின்றனர். யாத்திரையும் பூர்த்தி அடைகிறது.

யாத்திரைக் காலத்தில் நம் இல்லத்தைக் காத்து வந்த பூத கணத்தை வணங்கி ''ஐயனே! நான் யாத்திரை முடிந்து திரும்பும்வரை என் உடமைகளேயும் குடும்பத்தினரையும் காத்தருளிய உங்களுக்கு எங்கள் அன்பு கலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிருேம். இனித் தாங்கள் தங்கள் இருப் பிடம் செல்வீராக'' என்று முன்பு தேங்காய் உடைத்த இடத் திலேயே மீண்டும் தேங்காய் உடைத்து விட்டு வலது காலே முன் வைத்து வீட்டினுள் நுழைகிருேம். அதற்கு முன்யாத்

திரை முடித்த நமது கால்களைக் கழுவி ஹாரத்தி செய்து வீட்டுக்குள் அழைத்துச் செல்கிறார்கள். நமது பூஜையறையில் இருமுடி பிரசாதத்தை இறக்கி தர்ம சாஸ்தாவை பூஜித்து வணங்குகிறோம். கற்பூரஹாரத்தி செய்த பிறகு யாத்திரை இனிது முடிந்ததன் அடையாளமாக துளசிமாலையைக் கழற்றி விடுகிறோம். நம் பெற்றோரிடமோ அல்லது வேறு பெரியவர்களிடமோ பிரசாதங்களைக் கொடுத்து அவர்கள் மூலம் நாமும் மற்றவர்களும் பிரசாதங்களை வாங்கிக் கொள்கிறோம்.

அபிஷேக நெய்யை பூஜை அறையில் வைக்க வேண்டும். இறைவன் நெய்யில் ஆவாகனம் ஆன நிலையிலேயே இருப்பதால் இறைவன் நெய்யில் எப்போதும் உறைந்து கொண்டிருக்கிறார். இந்த மகிமை எந்த கோயில் பிரசாதத்திற்கும் இல்லாத தனிச் சிறப்பாகும். எக்காரணத்தை முன்னிட்டும் நெய்யை நெருப்பின் மேல் காட்டி உருக வைக்கக் கூடாது. சூரிய கிரணங்களிளோ அல்லது சூடான நீரிலோ நெய்யை உருக்கிக் கொள்ளவேண்டும். இந்த நெய்யையும் ஆண்டவனுக்கு அபிஷேகம் செய்த விபூதி, ஆழிபஸ்மம் முதலியவற்றையும் மருந்தாகச் சேவித்து தீராத பிணிகளிலிருந்து குணம் அடைந்தவர் அனேகர்.

சர்வமங்கள தாயகரே! சரணம் ஐயப்பா!

---

இராஜ யோகிகள் தங்கள் யோக சாதனையின் மூலமே பெறும் சாயுஜ்ய பதவியை நாமும் அடைய சபரிமலை யாத்திரை வழிவகுத்துத் தருகிறது. இந்த உண்மையை அனுபவபூர்வமாக யாவரும் அறிந்து கொண்டு விட்டால் அனுஷ்டிக்க வேண்டிய விரதங்களைத் தீவிரமாகக் கடைப்பிடிக்க வேண்டிய அவசியத்தை உணர முடியும் என்று கூறுவது மிகையாகாது.

சபரிமலை யாத்திரையை மேற்கொண்ட பக்தன், எந்த அளவு இகமாயைகளை உணர்ந்து அவற்றின் பிடியிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளத் துடிக்கிறான், எந்த அளவு

''நான்'' ''எனது'' என்னும் அகங்கார மமகாரங்களை அழிப்பதில் வெற்றி பெறுகிறான், என்பதைப் பொறுத்தே சபரி மலை யாத்திரையின் பூரண பலனை உணர முடியும். மலைக்குச் சென்று வந்தோரின் இல்லங்களில் மணிகண்டன் மங்களகர மான திருவிளையாடல்களைச் செய்து வருவதே ஐயப்பன் கலியுக பிரத்தியக்ஷ தெய்வம் என்பதற்கு எடுத்துக் காட்டாகும்.

பகவானைக் காண விசேஷப் பிரார்த்தனைகள்தாம் வேண்டு மென்பதில்லை. பசித்தால் புசிப்பது போல, மானம் காக்க உடையணிவது போல, ஜீவனத்திற்காக உழைப்பது போல முக்தி பெறுவதற்காக வருடந்தோறும் சபரிமலை சென்றுவர வேண்டும் என்னும் அரிய வரம் பெற்று, நற்கதி அடைய எல்லாம் வல்ல சத்ய சபரிநாதனை நெஞ்சாரத்துதித்து, வாயார வாழ்த்தி அனுதினமும் வணங்கிடுவோம்.

நித்தியமாய், நிர்மலமாய், நிட்களமாய்,
நிராமயமாய் நிறைவாய், நீங்காச்
சுத்தமுமாய், தூரமுமாய், சமீபமுமாய்த்துரிய
நிறைச் சுடராய், எல்லாம்
வைத்திருந்த தாரகமாய், ஆனந்த மயமாகி மன வாக்கு
எட்டாச் சித்து உருவாய் நின்ற ஒன்றைச்
சுகாரம்பப் பெருவெளியைச் சிந்தை செய்வோம்.

**சமஸ்தாபாராத ரக்ஷகரே !** **சரணம் ஐயப்பா! !**



# மூன்றும் பாகம்

தர்ம சாஸ்தா அஷ்டோத்திர சத நாமாவளி

த்யான ச்லோகம்

ஸ்நிக்தாரால விஸாரி குந்தலபரம்
ஸிம்ஹாஸனுத்யாஸினம்
ஸ்பூர்ஜத்பத்ர ஸுக்லுப்த குண்டல
மதேஷ்விஸ்வாஸ ப்ருத்யோர்யுகம்
நீல க்ஷௌமவஸம் நவீனஜலத
ஸ்யாமம் ப்ரபா ஸத்யகா
பாயாத் பார்ச்வ யுகம் ஸுரக்த ஸகலா
கல்பம் ஸ்மரேத் ஆர்யகம்.

ஓம் மஹாசாஸ்த்ரே நம:
மஹாதேவாய ,,
மஹாதேவஸுதாய ,,
அவ்யாய ,,
லோக கர்த்ரே ,,
லோக பர்த்ரே ,,
பராத்பராய ,,
த்ரிலோக ரக்ஷகாய ,,
தன்வினே ,,
தபஸ்வினே ,, 10
பூத ஸைனிகாய ,,
மந்த்ர வேதினே ,,
மஹா வேதினே ,,
மாருதாய ,,
ஜகதீச்வராய ,,
லோகாத்யக்ஷாய ,,
அக்ரண்யே ,,

ஓம் ஸ்ரீமதே நம :

அப்ரமேய பராக்ரமாய ,,
ஸிம்ஹாரூடாய ,,
கஜாரூடாய ,,
ஹயாரூடாய ,,
மஹேச்வராய ,,
நானாசஸ்த்ர தராய ,,
அனர்காய ,,
நானாவித்யா விசாரதாய ,,
நானாரூபதராய ,,
வீராய ,,
நானாப்ராணி நிஷேவகாய ,,
பூதேசாய ,, 30
பூதிதாய ,,
ப்ருத்யாய ,,
புஜங்கபரணோத்தமாய ,,
இக்ஷுதன்வினே ,,
புஷ்பபாணாய
மஹா ரூபாய ,,
மஹா ப்ரபவே ,,
மாயாதேவீஸுதாய ,,
மான்யாய ,,
மஹாநிதாய ,, 40
மஹாகுணாய ,,
மஹாசைவாய ,,
மஹாருத்ராய ,,
வைஷ்ணவாய ,,
விஷ்ணுபூஜகாய ,,
விக்னேசாய ,,
வீரபத்ரேசாய ,,
பைரவாய ,,
ஷண்முகத்ருவாய ,,

ஓம் மேருச்ருங்க ஸமாஸீனய நம  
முனிஸங்க நிஷேவிதாய ,,  
தேவாய ,,  
பத்ராய ,,  
ஜகந்நாதாய ,,  
கணநாதாய ,,  
கணேச்வராய ,,  
மஹாயோகினே ,,  
மஹாமாயினே ,,  
மஹாஞானினே ,, 60  
மஹாஸ்திராய ,,  
தேவசாஸ்த்ரே ,,  
பூதசாஸ்த்ரே ,,  
பீமஹாஸ பராக்ரமாய ,,  
நாகஹாராய ,,  
நாககேசாய ,,  
வ்யோமகேசாய ,,  
ஸனதனய ,,  
ஸுகுணய ,,  
நிர்குணய ,, 70  
நித்யாய ,,  
நித்ய த்ருப்தாய ,,  
நிராச்ரயாய ,,  
லோகாச்ரயாய ,,  
கணதீசாய ,,  
சதுஷ்ஷஷ்டிகலாமயாய ,,  
ருக் யஜுஸ் ஸாம  
அதர்வணரூபிணே— ,,  
மல்லகாஸுர பஞ்ஜனய ,,  
த்ரிமூர்த்தயே ,,  
தைத்யமதனய ,, 80

ஓம் ப்ரக்ருதயே நம :
புருஷோத்தமாய ,,
காலஞானினே ,,
மஹாஞானினே ,,
காமதாய ,,
கமலேக்ஷணாய ,,
கல்பவ்ருக்ஷாய ,,
மஹாவ்ருக்ஷாய ,,
வித்யாவ்ருக்ஷாய
விபூதிதாய ,, 90
ஸம்ஸாரதாப விச்சேத்ரே ,,
பசுலோகபயங்கராய ,,
ரோகஹந்த்ரே ,,
ப்ராணதாத்ரே ,,
பரகர்வ விபஞ்ஜனாய் ,,
ஸர்வசாஸ்த்ரார்த்த தத்வக்ஞாய ,,
நீதிமதே ,,
பாப பஞ்ஜனாய ,,
புஷ்களாபூர்ணா ஸம்யுக்தாய ,,
பரமாத்மனே ,, 100
ஸதாம்கதயே ,,
அனந்தாதித்ய ஸம்காஸாய ,,
ஸுப்ரம்மண்யானுஜாய ,,
பலினே ,,
பக்தானுகம்பினே ,,
தேவேசாய ,,
பகவதே ,,
பக்தவத்ஸலாய ,, 108

ஸ்ரீபூர்ணா புஷ்களா சமேத ஸ்ரீஹரிஹர
புத்ரஸ்வாமினே நம:

நானாவித பரிமள பத்ர புஷ்பாணி ஸமர்ப்பயாமி

# நாமாவளிகள்

## கணபதி ஸ்துதி

அகஜானன பத்மார்க்கம் கஜானனம் அஹர்ணிசம்
அனேகதம் தம் பக்தானும் ஏக தந்தம் உபாஸ்மஹே.

கைத்தல நிறைகனி அப்பமொடவல் பொரி
கப்பிய கரிமுகன் அடிபேணிக்
கற்றிடும் அடியவர் புத்தியிலுறை பவ
கற்பகமென வினை கடிதேகும்
மத்தமும் மதியமும் வைத்திடு மரன் மகன்
மற்பொரு திரள்புய மதயானை
மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர் கொடு பணிவேனே!
முத்தமிழடை வினை முற்படு கிரிதனில்
முற்பட எழுதிய முதல்வோனே
முப்புர மெரி செய்த அச்சிவ னுறை ரதம்
அச்சது பொடி செய்த அதி தீரா
அத்துயரது கொடு சுப்பிரமணி படு
அப்புன மதனிடை இபமாகி
அக்குற மகளுடன் அச்சிறு முருகனை
அக்கண மண மருள் பெருமாளே

1. கணேச சரணம் சரணம் கணேசா
2. கௌரி நந்தன கஜவதன கணேச வரதா மாம் பாஹி
3, விக்னேசம் பஜரே மானஸ விக்ன ஹரம் பஜரே
4. கௌரீ நந்தன கஜானன கிரிஜா நந்தன நிரஞ்ஜன
பார்வதி நந்தன ஸுபானன பாஹிப்ரபோமாம்
பார்வதி நந்தன
5. விக்னகோடிஹரண விமல கஜானன
விக்னேச்வரேச்வர பாலய சம்போ

## ஸத்குரு ஸ்துதி

### ச்லோகம்

குருர்ப்ரம்மா குருர்விஷ்ணு: குருதேவோ மஹேச்வர: !
குரு: ஸாக்ஷாத் பரம்ப்ரும்ம தஸ்மை ஸ்ரீ குரவே நம: !!

இராகம்: ஹிந்தோளம்] [தாளம் ஆதி.

### பல்லவி

சபரிகிரீசம் குருநாதம் — மம
சந்ததம் பஜாமி குலதைவதம் (சபரி)

### அனுபல்லவி

ஆகம வேத புராண சாரம்
ஜோதி சரீரம் புவனுதாரம் (சபரி)

### சரணம்

பரசுராம தேவ ப்ரதிஷ்டித ரூபம்
பம்பா பயஸீ தீர விஹாரம்
பந்தள ராஜ க்ருபாகர சீலம்
சம்புகுமாரம் மங்கள தாயகம் (சபரி)

2. ஸ்ரீ நீல கண்டமே சரணம் ஐயப்பா
எங்கள் குருநாதனே சரணம் ஐயப்பா
நல்ல வழி தந்திடும் சரணம் ஐயப்பா-எங்கள்
நடமாடும் தெய்வமே சரணம் ஐயப்பா

திருவனந்தை பத்மநாபன் மகிழும் பாலகன்
வருமிடத்தில் இருள் அகலும் சரணம் ஐயப்பா
காயத்ரி தேவி அருள் பக்ததாஸனுர்
மாயவலே நீக்கிடுவார் சரணம் ஐயப்பா

இல்லை இல்லை இல்லை என்று ஏங்கும் மாந்தரின்
உள்ளம்தனைக் குளிர வைப்பார் சரணம் ஐயப்பா
பிணி யகல வழிவகுக்கும் சற்குருநாதன்—ஞானப்
பணிபுரிய அருள் புரிவார் சரணம் ஐயப்பா

வினையறுத்து பவமழிக்கும் நம் குருநாதன்
துணை இருந்து காத்திடுவார் சரணம் ஐயப்பா
பக்திமுக்தி தாயகனே சரணம் ஐயப்பா
சக்திவழிபாடுடையாய் சரணம் ஐயப்பா

தவசரணம் மமசரணம் சரணம் ஐயப்பா
மமசரணம் பஜசரணம் சரணம் ஐயப்பா
பஜசரணம் குருசரணம் சரணம் ஐயப்பா
சரணம் சரணம் சரணம் சரணம் ஸத்குருநாதா

## சரஸ்வதி ஸ்துதி

சரஸ்வதி நமஸ்துப்யம் வரதே காமரூபிணி
வித்யாரம்பம் கரிஷ்யாமி ஸித்திர் பவதுமே ஸதா !

1. சரஸ்வதி சரஸ்வதி சகல கலா வாணி சரஸ்வதி
கொஞ்சிக் கொஞ்சிப் பாட அருள் சரஸ்வதி
குமரனையே தினம் சரஸ்வதி
வேலனையே தினம் சரஸ்வதி
ஐயனையே தினம் சரஸ்வதி

2. அம்பா தேவி சரஸ்வதி மாதா
வீணபாணிநமோஸ்துதே

1. மயூராதிரூடம் மஹாவாக்ய கூடம்
மனோஹாரி தேஹம் மஹத் சித்த கேஹம் !
மஹி தேவ தேவம் மஹா வேத பாவம்
மஹா தேவ பாலம் பஜே லோக பாலம் !!

2. திருவடியும் தண்டையும் சிலம்பும் சிலம்பு ஊடுருவப்
பொருவடிவேலும் கடம்பும் தடம்புயம் ஆறிரண்டும்
மருவடிவான வதனங்கள் ஆறும் மலர்க் கண்களும்
குருவடிவாய் வந்து என் உள்ளம் குளிரக்
குடி கொண்டவே

3. மோகனமயில் வாகனனே சரவணபவனே வேல் முருகா
மோகன வள்ளி குஞ்சரிமணாளனே சிவபாலா வேல் முருகா

4. குஹாய ஷண்முகாய கார்த்திகேயாய நம ஓம்-சிவ
சுதாய சரவண சம்பவாய லோகநாதாய நம ஓம்

5. வள்ளி நாயக வேலாயுத சிவ
சங்கரி தனயா வேல் முருகா.

## சிவஸ்துதி

1. நம : சிவாப்யாம் நவயௌவனாப்யாம்
பரஸ்பராஸ்லிஷ்டவபுர் தராப்யாம் !
நகேந்த்ர கன்யா வ்ருஷகே தனாப்யாம்
நமோ : நம ; சங்கர பார்வதீப்யாம் !!

2. காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓதுவார் தம்மை நன்னெறிக்குய்ப்பது
வேதம் நான்கினும் மெய்ப் பொருளாவது
நாதம் நாமம் நமச்சிவாயவே

3. சிவாய பரமேஸ்வராய சசி சேகராய நம ஓம்
பவாய குணசம்பவாய சிவதாண்டவாய நம ஓம்.

அம்பிகாத்யானம்

துர்கேஸ்ம்ருதா ஹரஸிபீதிம் அசேஷ ஜந்தோ :
ஸ்வஸ்தைஸ்ம்ருதாம் அதிமதீவ சுபாம் ததாஸி
தாரித்ர்யதுஃக பய ஹாரிணிகா த்வத் அன்யா
ஸர்வோபகார கரணய ஸதார்த்ர சித்தா.

1. அருணம்புயத்தும், என்சித்தாம்பு யத்தும் அமர்ந்திருக்கும்
தருணம்புய முலைத்தையல் நல்லாள் தகைசேர் நயனக்
கருணம்புயமும், வதனம்புயமும், கராம்புயமும்,
சரணம்புயமும் அல்லால் கண்டிலேன் ஒரு தஞ்சமுமே.

2. ஆடித்தேர் ஓடுதையா வேற்காடு ஆலயத்தில்
அன்னை கருமாரியவள் அலங்கார பவனிவர (ஆடி)
நாடிவரும் அடியார்க்கே நல்லவரம் தந்திடுவாள்
தேடிவரும் அன்பருக்கே தரிசனமே தந்திடுவாள்
பாடிவரும் பக்தர்களைப் பரிவுடனே காத்திடுவாள்
கோடிகோடி இன்பம் தனையே குறைவிலாமல்
கொடுத்திடுவாள் (ஆடி)

சின்னத்தேர் ஒன்றில் முன்னவன்
கணபதியும் முன் செல்ல
மின்னும் வண்ணத்தேர் ஒன்றில்
வேலவனும் பின் செல்ல
பொன் வாளுடன் மதுரை வீரனும்
வெள்ளித்தேர் ஏறிச்செல்ல
அன்னை சக்தி தங்கத் தேரில்
அழகாக அமர்ந்துவர (ஆடி)

தங்கமேனி தளதளக்க தாமரைபோல் முகம் மலர
மங்கையவள் முடிதனிலே மணிமகுடம் ஜொலிஜொலிக்க
சங்குபுஷ்பம் வில்வம் துளஸி தும்பையவளை அலங்கரிக்க
தங்கையுடன் மரகதத் தேரில் மாதவனும் சேர்ந்து வர
(ஆடி)

3. தீனதயாபரி பூர்ண கடாக்ஷி
காஞ்சி காமாக்ஷி நமோ நமோ !
மாதங்க கன்யே மதுரை மீனாக்ஷி
காசி விசாலாக்ஷி நமோஸ் துதே !!
சுந்தரேசப்ரியே சோமசேகரி
வந்தெனையாள் பரிவுடனே ஆதரி

4. அம்ப பரமேஸ்வரி அகிலாண்டேஸ்வரி
ஆதி பராசக்தி பாலயமாம்
ஸ்ரீ புவனேஸ்வரி ராஜராஜேஸ்வரி
ஆனந்த ரூபிணி பாலயமாம்.

### விஷ்ணு ஸ்துதி

1. சத்ருச் சேதைகமந்த்ரம் ஸகலமுபநிஷத்
வாக்ய ஸம் பூஜ்ய மந்த்ரம்
ஸம்ஸாரோத்தார மந்த்ரம் ஸமுபசித
தமஸ் ஸங்க நிர்யாண மந்த்ரம்

ஸர்வைஸ்வர்யைக மந்த்ரம் வ்யஸனபுஜக
ஸந்தஷ்ட ஸந்த்ராண மந்த்ரம்
ஜிஹ்வே ஸ்ரீக்ருஷ்ணமந்த்ரம் ஜபஜப
ஸததம் ஜன்ம ஸாபல்ய மந்த்ரம்,

2. குலம் தரும், செல்வம் தந்திடும்,
அடியார்படும் துயராயின எல்லாம்
நிலம்தரம் செய்யும், நீர்விசும்பு அருளும்
அருளொடு பெரு நிலம் அளிக்கும்
வலம்தரும், மற்றும் தந்திடும்
பெற்ற தாயினும் ஆயின செய்யும்
நலம் தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன்.
நாராயண என்னும் நாமம்.

3. ராம ராம ராம ராம ராம நாம தாரகம்
ராம க்ருஷ்ண வாசுதேவ பக்தி முக்தி தாயகம்
ஜானகீ மனோஹரம் ஸர்வலோக நாயகம்
சங்கராதி சேவ்யமான புண்ய நாம கீர்த்தனம்

க்ருஷ்ண கருண லோல கோவர்த்தனதர கோபால
தேவகி நந்தன யசோதபால ராதா லோலதீனதயாள

## மஹாலக்ஷ்மித்யானம்

மாதர் நமாமி கமலே கமலாய தாக்ஷி
ஸ்ரீ விஷ்ணு ஹ்ருத் கமலவாசினி விஸ்வமாத : !
க்ஷீரோதஜே கமல கோமல கர்ப்ப கௌரி
லக்ஷ்மீப்ரசீத சததம் நமதாம் சரண்யே !!
லக்ஷ்மீமாம் பாஹி மஹாலக்ஷ்மீ மாம்பாஹி!!

## ஐயப்பன் ஸ்துதி

ஆசான ரூபபலதம் சரணாரவிந்த பாஜாம்
அபார கருணார்ணவ பூர்ண சந்த்ரம் !
நாசாய ஸர்வ விபதாம் அபிநௌமி நித்யம்
ஈசான கேசவ புவம் புவனைக நாதம் !! (1)

பிஞ்சாவலீ வலயிதாகலிதப்ரஸூன
ஸம்ஜாதகாந்தி பரபாஸுர கேசபாரம் !
சிஞ்ஜான மஞ்சு மணி நூபுர ரஞ்ஜிதாங்கம்
சந்த்ராவதம்ஸ ஹரிநந்தனம் ஆச்ரயாமி !! (2)

ஆலோல நீல லலிதாலக ஜாலரம்யம்
ஆகம்ர நாஸம் அருணதர மாயதாக்ஷம் !
ஆலம்பனம் த்ரிஜகதாம் ப்ரமதாதி நாதம்
ஆனம்ரலோக ஹரிநந்தனம் ஆச்ரயாமி !! (3)

கர்ண வலம்பி மணி குண்டல பாஸமான
கண்டஸ்தலம் ஸமுதிதானன புண்டரீகம் !
அர்ணேஜ நாப ஹர யோரிவ மூர்த்திமந்தம்
புண்யாதி ரேகமிவ பூதபதிம் நமாமி !! (4)

உத்தண்டசாரு புஜதண்ட யுகாக்ரஸமஸ்த
கோதண்டபாண மஹிதாந்த மதாந்த வீர்யம் !
உத்யுத்ப்ரபா படலதீப்ர மதப்ரஸாரம்
நித்யம் ப்ரபாபதி மஹம் ப்ரணதோபவாமி !! (5)

மாலேய பங்கஜம் அலங்க்ருத பாஸமான
தோராந்தரளா தராளமலஹார ஜாலம் !
நீலாதி நிர்மல துகூலதரதம் முகுந்த
காலாந்தக ப்ரதிநிதிம் ப்ரணதோஸ்மி நித்யம் !! (6)

யத்பாத பங்கஜயுகம் முனயோஅயஜஸ்ர
பக்த்யா பஜந்தி பவரோக நிவாரணய !
புத்ரம் புராந்தக முராந்தகயோருதாரம்
நித்யம் நமாம்யஹம் அமித்ரகுலாந்தகம்தம் !! (7)

காந்தம் கலாய குசுமத்யுதி லோபநீய
காந்தி ப்ரவாஹ விலஸத் கமனீய ரூபம் !
காந்தா தநூஜ ஸஹிதம் நிகிலாமயௌக
சாந்திப்ரதம் ப்ரமதநாதம் அஹம் நமாமி !! (8)

பூதேச பூரிகருணம்ருத பூர பூர்ண
வாராந்நிதே, வரத பக்தஜனைக பந்தோ !
பாயாத் பவான் ப்ரணதமேன மபார கோர
ஸம்ஸாரபீதமிஹ மாம் அகிலாமயேப்ய : !! (9)

ஹே பூதநாத, பகவன் பவதீய சாரு
பாதாம்புஜே பவது பக்தி ரசஞ்சலாமே !
நாதாய ஸர்வ ஜகதாம் பஜதாம் பவாப்தி
போதாய நித்ய மகிலாங்கபுவே நமஸ்தே ! (10)

2. ஆச்யாம கோமள விசாலதனும் விசித்ர
வாஸோ வஸானம் அருணோத்பல தாமஹஸ்தம் !
உத்துங்கரத்ன மகுடம் குடிலாக்ர கேசம்
சாஸ்தாரம் இஷ்டவரதம் சரணம் ப்ரபத்யே !!

இராகம்: கானடா] தாளம்: ஆதி]

பல்லவி

3. அலைபாயுதே அப்பா - என்மனம்—அலைபாயுதே—உன்
ஆனந்த மகரஜோதியைக்காண (அலை)

அனுபல்லவி

நிலைத்து நில்லாது நிம்மதி யில்லாது
மாயை ஏதும் தொடராமலே இவ்
வாழ்வினில் கடைத்தேறவே என்மனம் (அலை)

சரணம்

அச்சன் கோவிலில் என் அரசனைக் காணவா
ஆரியங்காவிலுன்னை ஐயனைப் பாடவா
குளத்துப் புழையில் குல விளக்காய்த் துதிக்கவா
காந்தமலையில் ஜோதிப் பிழம்பாக வணங்கவா
அரக்கிமகிஷி மதத்தை ஒடுக்கி
வதைத்து முடித்து மகிழ்ந்தவா
ஒருதனித்தவனத்தில் புலிப்பாலெடுத்து
வருத்தும் பிணியைத் துடைத்தவா
கருணைக் கடலென கலியுக வரதனாய்
மணிமய பூஷணனாய் நிலைத்தவா
கதறிமனமுருகி நானழைக்கவோ
சபரிமலையினில் உனைத் துதிக்கவோ
நின்சரணம் மமசரணம் சரணம் ஸ்வாமி
பிழையேதுநான் புரிந்தாலுமே அதைப்பொறுத்திடும்
உன் கருணைக் கடலின் (அலை)

4. சரணாம்புஜம் கதியே
கருணாம்ருதம் தனை அருள்வாயே
ஸ்வாமியே சரணம் ஐயப்பா சரணம்
சபரிகிரீஸ்வர மணிகண்டா—ஜெகஜ்
ஜோதிர்மய பகவானே
மதகஜ வாஹனதேவா—உன்
மகரதரிசனம் தரவேணும் (சரணம்)
பந்தபாசங்கள் களைந்திடுவோனே
உன்னை வந்தனை செய்தேன் நானே
என் அகத்தில் உறைந்திடுவோனே—என்
அகந்தை யழிந்திடவே உன் (சரணம்)

5. அந்தகாரத்திலே அருள் விளக்கு ஏற்றுவாய்,
அடவியில் வழி காட்டுவாய்,
அரவு புலி மிருகங்கள் அலகைபேய் கள்வர்
அணுகாது காத்து வருவாய்,
வந்தனை புரிந்து மலரிட்டு வாழ்த்துவோர்
மரபெல்லாம் ஓங்க வைப்பாய்,
மாருத நோய்க்கு ஒரு மருந்தாகி மாற்றுவாய்,
மரணபயமும் போக்குவாய்,
இந்தவிதம் நீ புரியும் எண்ணிலா விளையாடல்
எண்ணித் துதிக்க வசமோ
ஏருதமலை யேறி எய்தும் மெய்யடியவரை
ஏற்பதுன் பாரமல்லவா
சந்தன சுகந்த ஸுந்தர, சுதந்திர, ஸித்த
ஸங்க ஸத்குரு நாதனே,
சதமதனப்பிரகாச கலச முனி விஸ்வாச
சபரி மாமலை வாசனே!

6. பண்டு ஹாலாஸ்ய பதி கொண்ட மீனாக்ஷி நிஜபக்தனும்
உக்ர பாண்டியன் பாலவரம் வேண்டும் என்று
சம்புவைப் பிரார்த்திக்க அமோக வரம் தந்து

பாண்டிய பூபன் அண்டையில் மால் ஹரனும் கூடி
ஒரே மூர்த்தியாகிக் குழவி வேஷம் எடுத்து
அவரை மோகம் செய்து கொஞ்சி அவர் தஞ்சமென்று

தொண்டு செல்கின்ற நாளன்று பாதகக் கள்ளராம்
துஷ்டரை அடக்கி வென்ற தீரனே! தீனபரிபாலனே!
எந்தன் உள்ளத்துயரமெல்லாம் தீர்த்து அபீஷ்டமுதவும்

சண்டப்ரசண்டனே! உத்தண்ட கோதண்ட சர
சஸ்த்ராதி வேத்யன் என்னும் தவயோகஸித்தாந்த
சபரிபீடாஸ்ரமஸ்தான மெய்ஞான குருவே!

7. மோஹனம்/பைரவி [ஆதி
பஜரே குருசரணம்—மானஸ
பவஸாகர தரணம்
அத்புத விக்ரஹம் ஆனந்த ரூபம்
அனாத ரக்ஷகம் ஆபன்ன தாரகம் (பஜரே)
பத்ம தளாக்ஷம் பரமார்த்த பாவம்
தர்சனமாத்ரம் ஹம்ஸஸ்ஸோஹம் (பஜரே)
மன்மதானுஜ மார்த்தாண்ட தேவம்
மகர மஹோத்ஸவம் மணிகண்ட நாதம் (பஜரே)
விச்வ ஸுபூஜிதம் ஸ்ரீபூதநாயகம்
விக்ன விநாசனம் வித்யாதாயகம் (பஜரே)
ஜனன மரண பய சோக விதூரம்
சரணம் சபரிகிரீசம் தத்வ விச்ாரம் (பஜரே)

8. பூதாதி நாதா மோஹினி பாலா சாந்திதா சபரிகிரீசா
கருணா சாகர தீனதயாளா பாஹிமாம் பந்தளபாலா
புரஹர நந்தன தயாநிதே, முரஹர நந்தன க்ருபாநிதே
ஹரிஹர நந்தன லோகநிதே, பாண்ட்ய நந்தன புண்யநிதே

9. அருளா ரமுதே சரணம் சரணம்
அழகா அமலா சரணம் சரணம்
கருணா லயனே சரணம் சரணம்
அடியார்க் கருள்வாய் சரணம் சரணம்

திருமால் மகனே　　சரணம்　　சரணம்
அரனார் சேயே　　சரணம்　　சரணம்
பொருளாய்எனை ஆள்　　சரணம்　　சரணம்
பொன்னே மணியே　　சரணம்　　சரணம்

10. சபரிமலை நாயகனே　　சரணம் ஐயப்பா
சர்வலோக ரக்ஷகனே　　,,　　,,
தர்ம சாஸ்தா பேருடையாய்　　,,　　,,
தாபத்ரயம் மாய்ப்பவனே　　,,　　,,
நெய்யபிஷேகம் கொண்டவனே　　,,　　,,
நெஞ்சில் நிறைந்த வனே　　,,　　,,
பவப்பிணிக்கோர் அருமருந்தே　　,,　　,,
பூர்ண புஷ்கள நாயகனே　　,,　　,,
மகிஷியை வதைத்தவனே　　,,　　,,
மமதையெல்லாம் ஒழிப்பவனே　　,,　　,,
வீரமணிகண்டன் நீயே　　,,　　,,
வாழ்வளிக்க வந்தவனே　　,,　　,,
ஸோகமெல்லாம் தீர்ப்பவனே　　,,　　,,
ஜோதி ரூப மானவனே　　,,　　,,

11. பூங்கா வினோதமலை பொற்பதங்கள் சூழும் மலை
தேங்காய் உடைந்தமலை எங்கள் சுவாமிவாழ் சபரிமலை
பம்பை உதித்தமலை அம்பரம் போல் நிற்கும்மலை
எங்கும் புகழ் தங்கும்மலை எங்கள் சுவாமிவாழ் சபரிமலை
பக்தர்கள் போற்றும்மலை சித்தர் கொண்டாடும்மலை
பித்தர் காணாமலை எங்கள் சுவாமிவாழ் சபரிமலை
வேதமுதித்தமலை வேதப்பொருளானமலை
வேதியர்கள் போற்றும் மலை எங்கள் சுவாமிவாழ் சபரிமலை

12. நெஞ்சில் கோவில் கொள்ள வா உன்னைத்
தஞ்சம் என்றழைத்தேன் வா வா
பந்தள தேசம் தந்த பாலா—உன்
பக்தர் அந்தரங்க அனுகூலா (நெஞ்சில்)

புலி மீது விளையாடி வாவா — இந்தப்
புவியோர்கள் புகழ்ந்தாட வா வா ,,
மகிஷிவதம் செய்த சூரா — தேவர்
முனிவரும் மகிழும் பொற்பாதா ,,
சாய்ந்தாடி அசைந்தாடி வா வா — நீ
குழைந்தாடி குதித்தாடி வா வா ,,
நான் பாட நீ ஆடிவா — என்
இசைகேட்டு இசைவாகி வா வா ,,

13. ஆர்ய வம்சசுஜாதா நமோ நம
மோகனும் புஜ பாதா நமோ நம
மூல மந்த்ர ஸ்வரூபா நமோ நம உமை காந்த்ர்

நாரணப்ரியபாலா நமோ நம
பாண்ட்யன் மகிழ் குமாரா நமோ நம
ராஜ சேவக பூபாலா நமோ நம ஜெயசிலா

கோர மகிஷி சம்ஹார நமோ நம
வீர ந்ருத்ய விநோதா நமோ நம
வ்யாக்ர வாஹன தேவா நமோ நம மணிகண்டா

புண்ய சபரி நிவாசா நமோ நம
காந்த ஸ்ருங்க ஜோதி நமோ நம
த்யான மங்கள மூர்த்தே நமோ நம சபரீசா

பூர்ண புஷ்கள காந்தா நமோ நம
சாந்தி தாயக நாதா நமோ நம
பீதி நாசன சீலா நமோ நம கிரி ராஜ

சாஸ்வதாஸ்ரித தேவா நமோ நம
வாசவார்ச்சித பாதா நமோ நம
பாலவிக்ரஹ ரூபா நமோ நம குருநாதா

வீரதிவ்ய விலாசா நமோ நம
ஹார நூபுர தாரீ நமோ நம
வேதவந்த்ய சுகீர்த்தே நமோ நம பகு கோடி

ஆர்த்தி நாசன லீலா நமோ நம
பாச ஜன்ம விஞசா நமோ நம
மோக்ஷ தாயகஸ்வாமி நமோ நம அருள்தாராய்

14. பூர்ண புஷ்கள அம்பாசமேத
ஸ்ரீ ஹரிஹர புத்ர ஸ்வாமிகி ஜெயஜெய கற்பூர ஹாரதி
அமர சேவித அம்புஜலோசன
மோஹன ரூப அபயப் ரதாயக ஜெய ஜெய கற்பூர ஹாரதி
சோபானே சோபனமே
வைபவமுல பாவன பதித பாவன ஜெய ஜெய

## நமஸ்கார ஸ்லோகங்கள்

15. (ஒவ்வொரு ஸ்லோகத்தையும் கூறி 'ஸ்வாமியே சரணம் ஐயப்பா!' என்று சொல்லி நமஸ்காரம் செய்யவேண்டும்.)

1. லோக வீரம் மஹாபூஜ்யம் சர்வ ரக்ஷாகரம் விபும்
பார்வதீஹ்ருதயானந்தம் சாஸ்தாரம் ப்ரணமாம்யஹம்

2. விப்ர பூஜ்யம் விச்வ வந்த்யம் விஷ்ணு சம்போப்ரியம் சுதம்
க்ஷிப்ரப்ரஸாத நிரதம் சாஸ்தாரம் ப்ரணமாம் யஹம்

3. மத்த மாதங்க கமனம் காருண்யாம்ருத பூரிதம்
சர்வ விக்னஹரம் தேவம் சாஸ்தாரம் ப்ரணமாம் யஹம்

4. அஸ்மத் குலேச்வரம் தேவம் அஸ்மத் சத்ரு விநாஸனம்
அஸ்மத் இஷ்டப்ரதாதாரம் சாஸ்தாரம் ப்ரணமாம் யஹம்

5. பாண்ட்யேச வம்சதிலகம் கேரளே கேளி விக்ரஹம்
ஆர்த்த த்ராண பரம்தேவம் சாஸ்தாரம் ப்ரணமாம் யஹம்

6. அருணோதய ஸங்காசம் நீல குண்டல தாரிணம்
நீலாம் பரதரம் தேவம் வந்தேஹம் ப்ரம்ம நந்தனம்

7. சாப பாணம் வாமஹஸ்தே ரௌப்ய வேத்ரஞ்ச தக்ஷிணே
விலஸத் குண்டலதரம் வந்தேஹம் விஷ்ணு நந்தனம்

8. வ்யாக்ராரூடம் ரக்த நேத்ரம் ஸ்வர்ணமாலா விபூஷணம்
வீரபட்டதரம் கோரம் வந்தேஹம் சம்பு நந்தனம்

9. கிங்கிண் யொட்யாண பூஷேஷம் பூர்ண சந்த்ர நிபானனம்
கிராதரூப சாஸ்தாரம் வந்தேஹம் பாண்ட்ய நந்தனம்

10. பூத வேதாள சம்சேவ்யம் காஞ்சனாத்ரி நிவாஸினம்
மணிகண்ட மிதிக்யாதம் வந்தேஹம் சக்தி நந்தனம்

11. யஸ்ய தன்வந்தரிர் மாதா பிதாருத்ரோ பிஷக்தம:
தம்சாஸ்தாரம் அஹம் வந்தே மஹாவைத்யம் தயாநிதிம்

12. பூதநாத சதானந்த சர்வ பூத தயாபர
ரக்ஷ ரக்ஷ மஹா பாஹோ சாஸ்த்ரே துப்யம் நமோ நம:

## 16. சரண கோஷங்கள்

1. கன்னி மூலமஹா கணபதி பகவானே
   சரணம் ஐயப்பா
2. மாளிகைப் புறத்து அம்மன் தேவி
   லோக மஞ்ச மாதாவே
3. சபரிகிரி வாசரே
4. காந்தமலே வாசரே
5. மோஹினி சுதனே
6. பம்பையின் பாலனே
7. பாண்டியன் மைந்தனே
8. எருமேலி ஏகனே
9. எண்ணிலா ரூபனே
10. அகிலாண்ட கோடி ப்ரஹ்மாண்ட
    நாயகனே
11. ஹ்ருதய குஹேசனே
12. த்ரிபுடி ரஹிதனே
13. ஓங்காரமான பொருளே
14. சச்சிதானந்த சற்குரு நாதனே
15. ஏழைபங்காளனே
16. அன்னதானப் ரபுவே
17. நெய்யபிஷேகப்ரியனே
18. ஜோதி ஸ்வரூபனே

தெரிந்தும், தெரியாமலும், அறிந்தும், அறியாமலும் அடியேன்கள் செய்த சகல பிழைகளையும் பொறுத்துக் காத்து ரஹிக்க வேண்டும். சத்தியமான பொன்னு பதினெட்டாம் படியின் மேல் வாழ் ஹ்ரிஹ்ர சுதன்' சத்குருநாதன், ஐயன் ஆனந்தசித்தன் ஐயப்ப ஸ்வாமியே சரணம். சரணம் ஐயப்பா!

## 17. அபராத க்ஷமாபணம்

நாகமணி சேகர, வசீகர, கிருபாகர நம்புவோர்க்கு
ஒருவன் என்று நாடெல்லாம் புகழ் காடம்பலத்தில்
நாரி பெற்றெடுத்த நாதா, கருணை செய்து எனது
தேக ரோகாதி வினை நீங்கிடச் செய்து உபரி நிதி பெருக
பக்தியும் முக்தியும் உபரிமுக்தியானந்த நிலையும்
சேர்த்து உந்தன் எழில் பொழியும் அழகிய
ஸ்ரீகர மரகத மகுட மங்கலம் சூடும் திருமேனி நீலவடிவின்
தரிசனம் கண்டு எனது திருஷ்டி இரண்டும்
குளிரச் செய்குவீர், எந்த நாளும் உந்தன் அடிமை
ஆகிய எந்தன் அகிலா பராதம் பொறுத்து ஆண்டு
கொண்டு அருள இது நல்ல சமயம் ஐயனே, சபரிகிரி
மெய்யனே, கருணாமிருதானந்த வாரி நிதியே!

### அபங்கம்

18. ஹே தயாளுவா ஹே க்ருபாளுவா
ஹே தயாளுவா பூத நாயகா
பரமபாவன விச்வ மோஹன
சரண தாயக தேவமாச் ரயே
பம்பயாஞ்சிதே பந்தளேச் வர
பங்கஜாஸன பாஹிமாம் ஸதா
பூர்ண புஷ்களா ஸேவிதாப் யஹோ
பூர்ண கருணயா பாஹிமாம் ப்ரபோ
தேஹிமே - தவ - பாதஸேவகம்
பூத நாத தே ஜ்யது மங்களம்

19. மங்கல வாழ்த்து

அரிய மறை புகழ்கின்ற அன்னதானம் செய்யும்
அருளாளர் வாழ்க வாழ்க,
அனுதினமும் உன்திருக்கோயில் இலகுதிசை தொழுகின்ற
அனைவரும் மகிழ்ந்து வாழ்க,
விரத நியமங்களால் மெய்மறந்து உனது பெயர்
விண்ணதிரவே முழங்கி
வெற்பேறி வளர்படிகள் மேலேறி வருகின்ற
மெய்த் தொண்டர் வாழ்க வாழ்க,
தெரிய விளையாடி அற்புதச் சித்து காட்டும் உன்
திரு நாம மகிமை வாழ்க,
தேடும் இக்கவிமாலை பாடுவோர் இன்பச்
சிறப்பெல்லாம் பெற்று வாழ்க
சரியை கிரியை யோக ஞான சன்னிதி சரணம்
சரணம் சரணம் ஐயப்பா
சதமதனப் பிரகாச கலச முனி விஸ்வாச
சபரிமலை வாசனே

20. ஹரிஹர சுதனே சரணம் சரணம் ஐயப்பா
அனாதிமூலப் பொருளே சரணம் சரணம் ஐயப்பா
பரம தயாளா குணாளா சரணம் சரணம் ஐயப்பா
சபரிகிரீசா ஹ்ருதயகுகேசா சரணம் சரணம் ஐயப்பா
அன்னதான விஸ்தாரா உதாரா சரணம் ஐயப்பா
அகிலலோக சரணாகத ரக்ஷக சரணம் ஐயப்பா
பொருளுரணச் சின்முத்திரை காட்டிய தேவா ஐயப்பா
மங்கள வாழ்வு வழங்கிட வா வா சரணம் ஐயப்பா

---

Copies can be had from:

1. Sri Ayyappa Bhajanai Sangham
No. 5, 9th Street, North Jagannatha Nagar,
Villivakkam, Madras-49.

2. Sri Ayyappa Temple,
Madhava Nair Colony, Mahalingapuram
Madras-34.

3. Sapthagiri Book Depot,
1, Ranganathan Street, W. Mambalam
Madras-33.

4. Sri M.S. Nagarathnam
82, Nangavaram Stores, Tiruchirapalli-2.

5. Sri Venkateswara Lodge,
Adivaram, PALANI.

6. Sri Giri Trading Co,
Opp. Post Office, Matunga, Bombay-19.
Also at Karpagambal Kapaleeshwarar Temple,
Mylapore, Madras-4.

7. Sri Akhila Bharatha Ayyappa Seva Sangham,
739-B, Sarat Bose Road,
CALCUTTA-29.

---

Printed at PAPRINPACK (Printers) Madras-600 034 Phone 420415.